# 50% வரை தள்ளுபடி





பேன்சி சாரிகளுக்கு
தனி பிரிவு

புதிதாய்... புதுமையாய்... புதுவெள்ளமாய்...
குமரன் சில்க்ஸ் வழங்கும்
ஆடித்தள்ளுபடி
10-50%

பட்டு, ரெடிமேட்ஸ் மற்றும்
அனைத்து ஜவுளிகளுக்கும்

ஆடிமாதம் முழுவதும்
ஞாயிறும் கடை உண்டு.

ஆடைகளில் எல்லோருக்கும் எல்லாமுமே



## குமரன் சில்க்ஸ்

558-560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 641 001. போன் : 391555
73-74, புது மார்கெட் வீதி, திருப்பூர் - 641 604. போன்: 742888.

ஜ ன ர ஞ் ச க மா ன ஜ வு ளி மா ளி கை

SASI / 308 / 98

# ஆர்யபட்டா

## சுஜாதா

எழுதும்

ஆரவாரமான த்ரில்லர்

அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டியில்

**10,000** ரூபாய் பரிசு பெறும் சிறுகதை

- கல்லூரி மாணவ-மாணவியரின் கலக்கல் பக்கங்கள்
- பிரபலங்களின் மறுபாதி!
- 'வெற்றியின் விலாசம்!'

– உபயோகமான இலவச இணைப்பு

**கல்கி** ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில்!

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com  ஈ மெயில் : kalki@md2.vsnl.net.in

## முட்டி, மோதி, முனகி....

சோனியாவும் ஷரத்பவாரும் ஒருவரை யொருவர் 'முறைத்துக்' கொண்டிருக்கையில், முதலில் கண்ணைச் சிமிட்டியிருப்பவர் சோனியா. ராஜ்ய சபை தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளரான ராம் பிரதானின தோல்வியை அடுத்து, இருவருக்கு சீட்டு கிழிக்கப்பட்டிருக் கிறது. பண்டாரா எம்.பி. ப்ரஃபுல் படேல், எம்.பி.சி.சி. பிரசிடென்ட் ரன்ஜித் தேஷ்முக் இருவருமே பவார் ஆதரவாளர்கள். இருவருமே ராஜினாமாவைக் கொடுத்து விட்டாலும், ரன்ஜித் தேஷ்முக் இடத்தில் யாரைப் போடு வது என்பதில் பிரச்னை. விலாஸ்ராவ் தேஷ் முக் என்று சோனியா அபிமானிகளும், சகன் புஜ்பல் என்று பவார் பக்தர்களும் முட்டிக் கொள்கின்றனர். முட்டி வலியைச் சரிசெய்ய லண்டன் சென்ற பவாரின் முட்டியையே தட்ட நினைக்கிறார் சோனியா! முடியுமா? அதுவும் ஜெயலலிதா, மம்தா, ஹெக்டே போன்றோரு டன் நட்பு வளர்த்திருக்கும் ஷரத்பவாரின் உதவி இல்லாமல், மத்தியில் ஆட்சி யமைக்க (பி.ஜே.பி. விழுந்தால்) முடி யுமா?

## ஜெய் விஞ்ஞானி!

அணுசக்தி நகரிலுள்ள விஞ்ஞானி களெல்லாம் இப்போது அடிக்கடி தங்களைக் கிள்ளி விட்டுக் கொள்கிறார்கள் – தாங்கள் காண்பது கனவா அல்லது நனவா என அவர் களுக்கே சந்தேகமாயிருக்கிறது! ஒரு டாக்ஸி, ஆட்டோக்காரர் கூட அவர்களிடம் 'எக்ஸ்ட்ரா' கேட்பதில்லை; பஸ், ரயில்களில் அவர்களுக்கு மரியாதையுடன் 'ஸீட்' தருகிறார்கள். ரேஷன் ஆபிஸிலிருந்து சினிமா தியேட்டர் வரை எல்லா இடங்களிலும் அவர்களுடைய வேலை 'சட்புட்' டென்று முடிந்து விடுகிறது! என்னவாகி விட் டது மும்பைக்காரர்களுக்கு? ஒன்றுமில்லை! 'அணு'வின் 'சக்தி'யை போக்ரன் வெளிச்ச மிட்டதிலிருந்து, அணுசக்தி நகர்வாசிகளின் தலையைச் சுற்றி ஒளிவட்டம் ஒன்றைப் புதிதா கச் சுழல விட்டிருக்கிறது புளகாங்கிதமடைந்த, இந்திய, ரத்தத்தின் ரத்தங்கள்!

## இதயமில்லையா?

பணத்துக்காகவும் பகைக்காகவும் கொன்று குவித்த கூட்டத்தைக் கண்டு மரத்தே போய் விட்டது மும்பை! ஆனால், 'கார்' பகுதியில், கிருஷ்ண கோவர்தன பாண்டே என்ற 24 வயது இளைஞர், ஆஸ்பத்திரியிலுள்ள தனது தந் தைக்கு உணவெடுத்துக் கொண்டு செல்லும் வழியில், அநியாயத்துக்குக் குண்டடி பட்டு உயிர் நீத்ததைத்தான் மும்பைக்காரர்களால் மன்னிக்கவே முடியவில்லை! மும்பை குண்டு வெடிப்புச் சம்பவ குற்றவாளியான முகமது ஜின்ரனைக் குறிவைத்த அண்டர்வர்ல்ட், அந் தப் பக்கம் தற்செயலாய் வெளிப்பட்டு, பயத் தால் ஓட்டமெடுத்த இளைஞரையும் சுட்டுத் தள்ளி யுள்ளது. அவரது தாயும் தங்கையும் துயரப் பதுமைகளாயிருக்க, நானாவதி ஆஸ்பத் திரியில் பை-பாஸ் சிகிச்சைக்குப் பின் தேறி வரும் தந்தையிடம் செய்தியே சொல்லப்பட வில்லை! 1998-ல் இதுவரை 190 ஷூட் அவுட் கள்; எல்லாவற்றையும் மௌனமாக விழுங்கிய வர்களால் இதை ஜீரணிக்க முடியவில்லையே?

# காஞ்ஜீவரம் மகன் – கள்ளக்கடத்தல் மன்னர்!

## 'பூ' சுற்றக் 'கற்ற'வர்கள்

முப்பத்து மூன்று வயது ஆஷிதா உம்பர் கருக்கு, இரண்டாவது முறையாக இரண்டே மாதத்தில் குறைப்பிரசவம் ஆனதும், மிக அவமானமாயிருந்ததாம்! இந்த விஷயத்தை 'மறைத்து' (முழும்-1), கர்ப்பிணியாக நடித்து (முழும்-2), காட்கோபரிலிருந்த ஜீவன் ஜ்யோதி நர்ஸிங்ஹோமிலிருந்து, ஸுமா கடே என்ற பெண்மணிக்குப் பிறந்திருந்த ஆண் மகவை திருடிக் கொண்டு (முழும்-3), "மம்தா நர்ஸிங்



"டெண்ட்"டாக மாறும் வசதி உண்டு! நாற்காலி கம் சாய்வு நாற்காலியாகக் கூடிய இருக்கை; தவிர ஒரு ஸோஃபா கம் பெட்; இம்போர்டெட் லைட்கள் பொருந்திய பாத்ரூம், டாய்லெட்; ஒரு வார்ட்ரோப், ஒரு பீரோ, ஃபோன், டீ.வி. வி.சி.ஆர்., ஹை-ஃபை ஆடியோ ஸிஸ்டம் (ரிமோட்டுடன்தான்) வகைகள்; உணவை சூடாக்க ஹீட்டர்! லாப்-டாப் கம்ப்யூட்டர் ஒன்றுதான் பாக்கி! ஒரு காலத்தில் ஸூப்பர் ஸ்டார் அமிதாப்புக்கு வழங்கப்பட்டிருந்த வாகனம் கூட இந்த டெலி ஸ்டாரின் 'வானு'க்கு முன்னால் வாமனத்துவம் அடையு மளவுக்கு, முகேஷ்கன்னாவுக்கு என்ன திடீர் மவுசு? எல்லாம் 'சக்திமான்' அளிக் கும் சக்திதான்! வாண்டுகள் மத்தியில் இந்த டெலி ஸீரியல் பிரபலமடைந்ததி லிருந்து, பென்சில், ரப்பர், வாட்டர் பேக், ரெயின் கோட் என்று எதைப் பார்த்தா லும் சக்திமான்தான்! டைமண்ட் காமிக்ஸ் நான்கு மொழிகளில் தொடராக வெளியிடுமளவுக்குப் பாப்புலர்! ஸூப்பர் மேன், ஹிட்மேன், பேட்மேனெல்லாம் 'காமிக்' ஸிலிருந்து திரைக்கு வந்தவர்கள். திரையி லிருந்து 'காமிக்'ஸுக்கு தாவியிருப்பவர் சக்தி மான் மட்டுமே!

ஹோமு''க்குச் சென்று (முழும் – 4), தனக்குத் திடீர் வலி எடுத்ததாகவும் (மு – 5), ஆபரேஷன் செய்யப் பட்டு, பிள்ளை பிறந்திருப்பதாகவும் (மு–6), பெற்றோருக்கு ஃபோனில் தெரிவித்து (மு–7), அவர்களிடம் திருடப்பட்ட குழந்தையைத் தன் குழந் தையாகக் காட்டி (மு–8), பிறகு கல்யா ணில் தம் கணவன் வீட்டிற்குக் குழந்தையுடன் சென்று விட்டதாகவும் செய்தி (மு–9)! முழும் முழுமாக இந்தப் பூச் சுற்றலை நம்மாலேயே தாங்க முடியவில்லை! அவர்கள் எப்படி ஏற்றுக் கொண்டார்களோ? ஒரு வாரம் கழித்து போலீஸ் குழந்தையை மீட்டிருக்கிறது! திருடிய வர் மலடி பட்டத்துக்குப் பயந்த படிப்பறிவில் லாத கிராமத்துப் பெண் அல்ல! ஒரு சார்டர்ட் அக்கவுண்டண்ட்! கணவன் இஞ்ஜினீயர்! இடையில் ஜீவன் ஜ்யோதியின் தலைமை டாக் டரை கைது செய்ததை எதிர்த்து டாக்டர் களெல்லாம் ஒரே கலாட்டா! சுற்றவர்கள் சுற்றும் பூவுக்கு விலை அதிகமாகத்தானே கொடுக்க வேண்டும்?

## தடியா? துடைப்பமா?

"உனக்கு போலீஸ் கான்ஸ்டபிள் வேலை வேணுமா? முனிசிபாலிடியில் குப்பை கூட்டும் வேலை வேணுமா?" என்று எந்த மும்பைக் காரரிடமாவது கேட்டுப் பாருங்கள்; துடைப்பத் தைப் பிடிக்கத் தயாராயிருப்பார். மாதச் சம் பளம், ஒரு கான்ஸ்டபிளுக்கு ரூ 2,700; ஒரு ஸ்வீப்பருக்கோ ரூ 5,400! (டபுள்!) வருடா வரு டம் சம்பள உயர்வு கேட்டு ஸ்டிரைக் பண்ண லாம்! ஆபீசில் கையெழுத்துப் போட்டு விட்டு சொந்த வேலை பார்க்கப் போகலாம்! விடு முறையில் குடும்பத்துடன் ஜாலியாக ஊர் சுற்ற லாம்! ஆனால் கான்ஸ்டபிளுக்கு 24 மணி நேர மும் 'டூட்டி'தான்; மனைவி மக்களின் முகமே மறந்திருக்கும்; பலருக்குக் குடிசை வாசம்; சில ருக்கு, 'இதோ விழுந்து விடுவேன்' என பய முறுத்தும் குவார்டர்ஸ் வாசம்! பிரமோஷனெல் லாம் நினைத்தே பார்க்க முடியாத விஷயம்! கொசுறாக, தந்தையின் கவனிப்பில்லாத ஊர் சுற்றிப் பிள்ளைகள். ஒரு பளிச் உதாரணம்; அதி பயங்கர அண்டர்வர்ல்ட் டான் தாவூத் இப்ரா ஹிமின் தந்தை ஒரு க்ரைம் ப்ராஞ்ச் ஹெட் கான்ஸ்டபிள்! போதுமா, துடைப்பத்தை எடுக் கக் காரணங்கள்?

— ஜெயஸ்ரீ ராஜ்

## ஒரு படம் 'காமி'க்கப்படுகிறது

நமது முன்னாள் பீஷ்மரின் – முகேஷ் கன்னாதான் – இந்நாள் ரதத்தை ஒரிஜினல் 'பிதாமஹர்' பார்த்தால், புவிக்கே 'ரிடர்ன்' ஆகி விடுவார். ஏஸி செய்யப்பட்ட பெரிய டெம்போ ட்ராவலர் வான், நிறுத்தப்பட்டிருக்கும் போது

# மாதுரி மட்டும் ஸ்பெஷலா?

●● காரைக்குடியில் 'இன்ஜினீயர்' படப்பிடிப்பு. இரண்டு நாள் தாமதமாக மாதுரி தீட்சித் வந்து சேர்ந்தார். காரணம், அவர் அப்பாவுக்கு உடல்நிலை சரியில்லை. மாதுரியின் அப்பா இப்போது இருப்பது இமாச்சல் பிரதேசத்தில். படப்பிடிப்பு நடந்த ராயபுரத்தில் மாதுரி தீட்சித்துக்கென்று தனி ஏ.சி. அறை தயார் செய்யப்பட்டது. தனி டாய்லெட்டும் கூட. கதாநாயகிக்கு மட்டும் தானா இந்த வசதி என்று கேள்வியெழ, அதே வசதி கதாநாயகன் அர்விந்த் சாமிக்கும் செய்யப்பட்டது. டான்ஸ் மாஸ்டர் சுந்தரம் மாதுரியின் அப்பாவாக இந்தப் படத்தில் பிரமோஷன். இதற்காக அவருடைய அக்மார்க் தாடியை இழந்திருக்கிறார்!



●● விந்தியா. பெயர் தான் விந்தியா. இவர் கோடம்பாக்கத்திற்கு வந்ததென்னவோ திருப்பதியிலிருந்துதான். முகத்தில் தாராளப் புன்னகை. புத்துணர்ச்சி. ஆனால், விந்தியா என்கிற இந்த மயூரியை திருப்பதியிலிருந்து இங்கே கடத்திக் கொண்டு வந்தவரோ பஞ்சு அருணாசலத்தின் புதல்வர் சுப்பு. தாம் தயாரிக்கும் படத்தில் அறிமுகப்படுத்தி விடலாம் என்று நல்ல நேரத்திற்காகக் காத்திருந்தார். ஆனால், தமது 'சங்கமம்' படத்துக்காக சுரேஷ் கிருஷ்ணா தட்டிக் கொண்டு போய் விட்டார். இதனால் இப்போது சுப்புவுக்கும் சுரேஷ் கிருஷ்ணாவுக்குமிடையே பனிப்போர். இதன் காரணமாக, சுரேஷ் கிருஷ்ணாவின் இயக்கத்தில் ஒரு படம் தயாரிக்கலாம் என்கிற திட்டத்தில் இருந்த பஞ்சு அருணாசலம் இப்போது மறு யோசனையில் இருக்கிறார். விந்தியா, தெலுங்கு நடிகர்

மோகன்பாபுவுக்கு தூரத்து உறவாம்.

●● ஜோதிலட்சுமி, ஜெயமாலினி, சில்க் ஸ்மிதா, டிஸ்கோ சாந்தி, விசித்ரா போய் கவர்ச்சி ஆட்டத்திற்கென்று இப்போது களம் புகுந்திருப்பவர் பானு. 'துள்ளித் திரிந்த காலம்' படத்தின் 'தீவானா தீவானா' பாடலின் மூலம் பாப்புலராகி விட்ட பானு, தொடர்ந்து ஆறேழு படங்களில் தமது கவர்ச்சி ஆட்டத்தை அரங்கேற்றியிருக் கிறார். கோடம்பாக்கத்தின் லேட்டஸ்ட் கவர்ச்சிப் புயல் இவர்தான். ஆரம்ப காலத் தில் குரூப் டான்ஸராக அறிமுகமாகி ஒரு படத்தில் கதாநாயகியாகவும் நடித்திருக் கிறார். முன்னாள் அமைச்சர் அரங்கநாயகத் தின் மகன் சந்தனபாண்டியனுக்கு ஜோடி யாக 'செவ்வந்தி' படத்தில். அப்புறம் வாய்ப்பே இல்லை. இந்திப் படங்களின் பேமஸ் டான்ஸ் மாஸ்டர் சின்னி ப்ரகாஷி டம் பல படங்களுக்கு உதவியாளராக இருந்திருக்கிறார் - இப்போதும். மாதத்தில் பாதி நாட்கள் பம்பாய் வாசம்தான். பிஸியோ பிஸியாக இருக்கும் பானுவின் பூர்வீகம் ஆப்கானிஸ்தானிலுள்ள காபூல். உறவினர்களைப் பார்ப்பதற்காக வருடத் திற்கு ஒருமுறை காபூலுக்குப் போய் விட்டு வருகிறார். "இருந்தாலும் இந்தியாதான் எனக்கு நிரந்தரம்" என்கிற பானுவின் நிஜப் பெயர் ஹசன்பானு.

●● தமிழ் சினிமாவிலிருந்து வெகு தூரம் போய் விட்ட சுகன்யா வருடத்திற்கு ஒன்றிரண்டு மலையாளப் படங்களில் மட்டும் முகம் காட்டத் தவறுவதில்லை. இந்த வருடம் தமிழிலும் தலைகாட்டலாம் என்று முடி வெடுத்திருப்பார் போலிருக்கிறது. சரத், குஷ்பு, கனகா நடிக்கும் 'சிம்ம ராசி' படத்தில் தலைவாசல் விஜய்யின் மனைவியாக நடிக்க இருக்கிறார். சின்ன வேடம், பெரிய வேடம் எதற்கும் தயார் என்கிற பக்குவத்திற்கு சுகன்யா தயாராகி விட்டாரோ என்னவோ!

* பானு



## சினி மசாலா :

●● 'பொண்ணு வீட்டுக்காரன்' படத்தின் நாயகன் சத்யராஜ் என்று ஊரெங்கும் பேச்சு. பேச்சோடு பேச்சாக இன்னொரு செய்தியும் வந்தது. சத்யராஜ் கெஸ்ட் ரோலில்தான் நடிக்கிறாராம். கதாநாயகனாக நடிப்பவர் விஜய் ஆதிராஜ் என்கிற புதுமுக மாம். இவர் 'சுழல்' என்கிற தொலைக் காட்சித் தொடர் மூலம் அறிமுகமாகி சின்னத் திரையில் வலம் வந்து கொண் டிருப்பவர்!

●● 'ஜீன்ஸ்'க்குப் பிறகு பிரசாந்த் காணா மல் போய் விடுவார் என்று பேசப்பட்டது. சிவசக்தி பிலிம்ஸ் கூட பூஜைக்குப் பின்னும் பிரசாந்த்தை சுழற்றி விட நினைத்தது. முத லில் பேசிய சம்பளத்தில் பிரசாந்த் பாதி யைக் குறைத்துக் கொள்ள, சிவசக்தியின் 'கண்ணெதிரே தோன்றினாள்' படப்பிடிப்பு ஜரூராக நடந்து கொண்டிருக்கிறது. 'ஜீன்ஸ்' படத்தின் வசூல் ஓ.கே. என்று தகவல் கிடைக்க, அசோக் அமிர்தராஜ் கம்பெனி தன் அடுத்த படத்திலும் பிரசாந்த்தை ஒப்பந்தம் செய்துள் ளது. இப்படத்தின் இயக்குனர் அகத்தியன். 'குணா', 'சின்ன வாத்தியார்' படங்களைத் தயா ரித்த கமலின் மானேஜர் டி.என். எஸ்.ஸ"ும் பிரசாந்த்தை ஒப்பந்தம் செய்துள்ளார். "பிரசாந்தின் காட் டில் லேசாய் தூற ஆரம்பித் திருக்கிறது. இனி போகப் போக அடை மழைதான்" - என்கிறார் பிரசாந்தின் அப்பா தியாகராஜன். ஆனால் கோடம்பாக்கம் வட் டாரமோ, 'புயல் வீசி பிரசாந்த் சேதமாகா மல் தப்பித்தாலே போதும்!' என்கிறது. ❍

— மஹேந்த்

# கேரளாவைக் கொதிக்க வைத்த பேச்சு!



• மம்மூட்டி



• நாயனார்



• அந்தோணி

**மொ**த்த கேரளாவையுமே கொதிப்படையச் செய்து விட்டார், ஆளுங்கட்சியின் கொறடா டி.கே. ஹம்சா. என்ன விஷயம் என்கிறீர்களா? ஆன்மீக நிகழ்ச்சியொன்றைப் பற்றிய அவரது விளக்கம்தான் கொதிப்புக்குக் காரணம்!

மாதா அமிர்தானந்தமயிக்கு உலகெங்கிலும் பக்தர்கள் இருக்கிறார்கள். இவர் தமது பக்தர்களுக்கும் பக்தைகளுக்கும் ஆலிங்கன ஆசிர்வாதம் செய்வது வழக்கம். இது ஒரு தாய் தனது சேயை ஆலிங்கனம் செய்கிற நிலைதான். இந்த ஆசிர்வாதத்தை ஏனைய பக்தர்களைப் போல், கேரளாவின் முன்னாள் முதல்வர் ஏ.கே. அந்தோணியும் பெற்று வந்தார்.

இதைத்தான் டி.கே. ஹம்சா கொச்சைப் படுத்திப் பேசிவிட்டார். அதுவும் எப்படி? மம்மூட்டி-சில்க் ஸ்மிதா ஆலிங்கனத்தோடு ஒப்பிட்டுப் பேச, வந்தது வினை! ஆளுங் கட்சி தவிர அனைத்துக் கட்சியினரும் பிடிபிடியென்று பிடித்துக் கொண்டு விட்டனர்.

மாதாவின் பக்தர்களும் கொதித்துப் போன நிலையில், மேலும் சிலர் இந்து மதத்தையே ஹம்சா அவமதித்து விட்டார் என்று அறிக்கைகள்விட ஆரம்பித்து விட்டார்கள்!

மம்மூட்டி சும்மா இருப்பாரா? "அரசியல்வாதிகள் பிரச்னைகளில் என் பெயரையும் இழுத்திருப்பது துர்ப்பாக்கியம். சில்க் ஸ்மிதாவுடன் ஒன்றிரண்டு படங்களில் நடித்துள்ளது வாஸ்தவம்தான் என்றாலும் நான் அவரைக் கட்டியணைத்தெல்லாம் நடித்ததில்லை. நான் சினிமாவில் நடிக்க வருவதற்கு முன்பிருந்தே ஹம்சாவை எனக்குத் தெரியும்; ஹம்சாவுக்கும் என்னைத் தெரியும். இப்படியெல்லாம் அவர் பேசியிருக்க வேண்டியதேயில்லை!" என்று அறிக்கை விட்டார். கூடவே மலையாள சினிமா அசோசியேஷனும் ஹம்சாவைக் கண்டித்து அறிக்கைகள் விட்டது.

இதற்கிடையில் முதல்வர் நாயனார், "ஹம்சாவின் பேச்சில் தவறாக ஒன்றுமில்லை; எதிர்க்கட்சிகள்தான் அவரது பேச்சுக்கு உள் அர்த்தம் கற்பித்து விட்டன!" என்று எரிகிற தீயில் எண்ணெய் விடுவது போல் அறிக்கை விட நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது.

நல்ல வேளையாக, "நான் மாதாவையோ மற்றவர்களையோ மோசமாக எதுவும் பேசவில்லை. ஆனாலும் எனது பேச்சில் ஏதாவது மோசமான வார்த்தைகள் என்னையறியாமல் வந்திருக்குமானால் அதற்காக நான் அனைவருக்கும் மனப்பூர்வமாக வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று வருத்த அறிக்கை ஒன்றை ஹம்சா விடவே, நிலைமை சமாதானமானது!

திருவனந்தபுரத்திலிருந்து:

**எஸ்.எஸ். மணி**

**கோபிநாத் முதுகாடு. முப்பத்து மூன்று வயது இளைஞர். கேரளத்துக்காரரான இவர், உலகின் பல நாடுகளுக்கும் சென்று மாஜிக் நிகழ்ச்சிகள் வழங்கியவர். கிரேசி மோகனின் 'சிரி கம பத நீ' டெலிவிஷன் தொடர் மூலம் நேயர்களுக்கு நடத்தப்பட்ட போட்டியில் சியலோ கார் பரிசு பெறும் அதிருஷ்டசாலியைத் தேர்ந்தெடுத்து, பரிசளிக்கும் விழாவில் மேஜிக் நிகழ்ச்சி நடத்த முதல் தடவையாக சென்னை வந்திருந்தார். அவரைச் சந்தித்த போது 'மஸ்மரம்' என்ற பெயரில் நடத்தும் தமது மேஜிக் நிகழ்ச்சியைப் போலவே சுவாரசியமாகத் தமது அனுபவங்களைக் கூறினார்....**

# மாஸ்மரம் பண்ணும் முதுகாடு

'**வா**ழகுந்நம்' மிகப் பிரபலமான கேரளத்து மாஜிக் நிபுணர். அவரது திறமையைப் பற்றி, நிறைய கதைகள் சொல்லப் படுவதுண்டு. ஒரு தடவை, அவர் ரயில் பயணம் செய்த போது, அவசரத்தில், ரயில் டிக்கெட் வாங்க மறந்து போய் விட்டாராம். ரயிலில் போய்க் கொண்டிருந்த போது, டிக்கெட் பரிசோதகர் வந்து விட்டார். வாழகுந்நத்திடம் டிக்கெட் கேட்ட போது, பதற்றமே இல்லாமல், "டிக்கெட் வாங்கவில்லை" என்று சொல்லி விட்டாராம். பரிசோதகர் கடுப்படைந்து, "என்ன! இதுபோல பொறுப்பில்லாமல் பதில் சொல்லுகிறீர்களே!" என்று கோபமாய்க் கேட்க, "நான் மட்டும் என்று இல்லை; இந்த கம்பார்ட்மென்ட்டிலுள்ள யாரிடமும் டிக்கெட் கிடையாது" என்று சொல்லியதும், பரிசோதகருக்கு உச்சகட்ட கோபம். கம்பார்ட்மென்ட்டின் மற்ற பயணிகள், தங்கள் டிக்கெட்டை தேடிப் பார்த்தால், காணோம்! எல்லோருக்கும் ஷாக்!

'டிக்கெட் எங்கே போச்சு?' என்று அனைவரும் புரியாமல் திகைத்து நின்ற போது, வாழகுந்நம், கேஷுவ



"முதலில் கயிற்றினை அறுக்கும் டிரிக். எங்கேயோ குளறுபடி நிகழ, என்னால் அந்த மேஜிக்கை செய்ய முடியவில்லை. அடுத்து, ஒரே பந்திலிருந்து, நிறைய பந்துகளை உருவாக்கும் மேஜிக். அதுவும் அம்பேல். என்னை வெட்கம் பிடுங்கித் தின்றது. அழுகை அழுகையாய் வந்தது."



வலாக, "எல்லாருடைய டிக்கெட்டும் பரிசோதகர் பையில் இருக்கும் போது, நீங்கள் தேடினால் எப்படிக் கிடைக்கும்?" என்று கூறியபடியே, டிக்கெட் பரிசோதகரின் பாக்கெட்டில் கைவிட்டு, கொத்தாக ரயில் டிக்கெட்டை எடுத்துக் கொடுத்து, அனைவரையும் பிரமிப்பில் ஆழ்த்தினாராம். அத்தகைய மாஜிக் நிபுணரின் தீவிர ரசிகர் எனது அப்பா. சிறு வயது முதலே, 'ஏதாவது



''என் கணவருக்கு கிரிக்கெட்டை விட இப்போ ஃபுட்பால் தான் ரொம்பப் புடிச்சிப் போச்சு!''

''எத வச்சு அப்படிச் சொல்றே?''

''முன்னேயெல்லாம் கோபம் வந்துச்சினா 'ஓங்கி அடிச்சிருவேன்'னு சொல்வார்; இப்போ, 'உதைச்சித் தள்ளிருவேன்'னு சொல்றாரே!''

– நெல்லையப்பபுரம் செல்வன்

அதிசயம் செய்து காட்டி, மற்றவர்களை நீ பிரமிக்கச் செய்ய வேண்டும்' என்று என்னிடம் அடிக்கடி கூறுவார். அதுதான் நான் மேஜிக் கலைஞராவதற்கு என் மனத்தில் போடப்பட்ட விதை!

ஒருநாள், ஒரு பாம்பாட்டி எங்கள் ஊருக்கு வந்தான். அவன் செய்து காட்டிய சில தந்திரங்கள் என்னை ஆச்சரியப்படுத்தின. அவனிடம், எனக்கு ஏதாவது மேஜிக் கற்றுக் கொடுக்கும்படி கேட்டேன். அவனோ, 'இருபத்தி ஐந்து ரூபாய் கொடுத்தால், சொல்லிக் கொடுக்கிறேன்' என்றான். என்னிடமோ அத்தனை பணம் கிடையாது. வீட்டில் யாருக்கும் தெரியாமல் அப்பாவின் பர்சிலிருந்து இருபத்தி ஐந்து ரூபாயைத் திருடி எடுத்துக் கொண்டு போய், அந்தப் பாம்பாட்டியிடம் கொடுத்தேன். அவன், ஓர் எலுமிச்சம் பழத்தை நம் கட்டளைக் கேற்ப ஓடவும், நிற்கவும், குதிக்கவும் செய் வது எப்படி என்று சொல்லிக் கொடுத்தான். அவன் போன பிறகு, நானாகவே அவன் சொன்னபடி செய்து பார்த்தேன். ஒர்க்-அவுட் ஆகவில்லை. அப்புறம்தான் அந்தப் பாம்பாட்டி, எனக்கு மேஜிக் சொல்லிக் கொடுப்பதாய்ச் சொல்லி, ஏமாற்றி விட்டு, பணம் பறித்துக் கொண்டு விட்டான் என்று புரிந்தது.

அப்புறம் பாலக்காட்டிலிருந்த வாழகுந்நம் அவர்களிடம் போய், மேஜிக் கற்றுக் கொள்ளும் என் ஆர்வத்தைத் தெரியப் படுத்திய போது, எனக்கு, மேஜிக் சொல்லித் தர அவர் ஒப்புக் கொண்டார். நான் அவரிடம் கற்றுக் கொண்ட ஓரிரு ஐட்டங்களை, எங்கள் ஊர் சர்ச்சில் ஒரு நிகழ்ச்சியின் போது செய்து காட்ட வாய்ப்புக் கிடைத்தது. அப்போது எனக்குப் பதிமூனு வயசு. என் மேஜிக் குரு என் எதிரே அமர்ந்திருக்க, நான் மேஜிக் செய்ய ஆரம்பித்தேன்.

முதலில் கயிற்றினை அறுக்கும் டிரிக். எங்கேயோ குளறுபடி நிகழ, என்னால் அந்த மேஜிக்கை செய்ய முடியவில்லை. அடுத்து, ஒரே பந்திலிருந்து, நிறைய பந்துகளை உருவாக்கும் மேஜிக். அதுவும் அம்பேல். என்னை வெட்கம் பிடுங்கித் தின்றது. அழுகை அழுகையாய் வந்தது. ஆனாலும், என் குரு, ''மனசைத் தளர விடாதே! ஆரம்பத்தில் இதெல்லாம் சகஜம். உன்னிடம் ஆர்வமும், திறமையும் நிறைய இருக்கிறது. நீ பெரிய ஆளாக வருவாய்!'' என்று ஆறுதல் சொல்லி, ஊக்கமூட்டினார். அந்த என் முதல் மேடை நிகழ்ச்சி அனுபவம் எனக்கு என்றைக்கும் மறக்காது!

வாழகுந்நத்திடம் பயிற்சி பெற்ற பின், பி.சி. சர்க்கார் – ஜூனியர், லால், ஆகியோரிடம் போய் மேஜிக் கற்றுக் கொண்டேன். சைடு பை சைடாக கணிதப் பட்டதாரியானேன். சட்டக் கல்வி படிக்கச் சேர்ந்தேன். ஆனால் அதை முடிக்காமல் முழுநேர மேஜிக் கலைஞராகி விட்டேன்.

**95**-ம் வருடம் மே மாதம் நான் நிகழ்த்திய மேஜிக் பரபரப்பாய்ப் பேசப்பட்டது. என்னை சங்கிலியால் கட்டி, பூட்டி நாற்பதடி உயரத்துக்கு கிரேன் மூலமாய் மேலே தூக்கிச் சென்றார்கள். கீழே வைக்கோல் போர். அங்கிருந்து என்னைக் கீழே, தலை கீழாகப் போடுவார்கள். வைக்கோல் போர் தீப்பிடித்து எரிந்து கொண்டிருக்கும். நான் சங்கிலிப் பிணைப்பிலிருந்தும், தீயிலிருந்தும் தப்பிக்க வேண்டும். உயர் போலீஸ் அதிகாரிகள், பிரமுகர்கள் முன்னிலையில், திருவனந்தபுரத்தில், திறந்தவெளி மைதானம் ஒன்றில் நான் இதைச் செய்து காட்டினேன். கேரளாவே வியந்தது.

சங்கிலி மற்றும் பூட்டிய பெட்டிக்குள்ளிருந்து தப்பிக்கும் மேஜிக்கை உருவாக்கியவர் உலகப் புகழ்பெற்ற மேஜிக் நிபுணரான ஹாரி ஹௌடினி. அவரது புத்தகத்தில் அதைச் செய்வது எப்படி என்று மிகத் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார். அதைப் படித்துத்தான் நான் கற்றுக் கொண்டேன். முதலில் டிரை பண்ணியபோது, பூட்டிய பெட்டிக்குள்ளிருந்து தப்பிக்க எனக்கு எட்டு மணி நேரம் பிடித்தது. இரண்டாண்டுகள் கடுமையான பயிற்சிக்குப்

பிறகு, வெகு சுலபமாய் ஒரே நிமிட நேரத்தில் தப்பிக்கப் பழகி விட்டேன்.

ஒரு தடவை பாக்ரைனில் மேஜிக் ஷோ நடத்துவதற்காகச் சென்றிருந்தேன். ஷோ முடிந்து, நான் தங்கியிருந்த ஓட்டலுக்கு வந்த போது, என்னைச் சந்திக்க ஒரு பெண்மணி காத்திருந்தாள். அவள் பேசிய பாஷை எனக்குப் புரியவில்லை. ஓட்டல் ரிசப்ஷனிஸ்ட் மூலம், அந்தப் பெண்மணி, கருவுற்றிருக்கிறாள் என்றும், பிறக்கப் போவது ஆணா, பெண்ணா என்று எனது மேஜிக் சக்தியால் கண்டுபிடித்துச் சொல்ல வேண்டும் என்று அவள் கேட்பதாகவும் அறிந்த போது நான் அதிர்ந்து போனேன். எனக்கு அந்த சக்தி ஏதும் கிடையாது; மேடையில் செய்தது வெறும் தந்திரம்தான் என்று எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அவள் நம்பத் தயாராக இல்லை. நான் சமயோசிதமாக, "நீங்கள் கறுப்பு பர்தா அணிந்திருப்பதால், என் மேஜிக் பவர் தடைப்படுகிறது; எனவே ஆணா, பெண்ணா என்று கண்டுபிடிக்க முடியவில்லை" என்றேன். அவளோ சளைக்காமல், பர்தாவை விலக்க முற்பட்டாள். நான், இதற்கு மேல் அங்கே நின்றால் விபரீதமாகி விடும் என்பதால், அந்த இடத்தை விட்டு அகன்று விட்டேன்!

மற்றொரு தடவை எனது மேஜிக் நிகழ்ச்சிக்கு கேரள முதல்வர் நாயனாரும், எதிர்க்கட்சித் தலைவரான டி.எம். ஜேக்கப்பும் வந்திருந்தனர். நான், ஒரு வெள்ளைத் தாளை, நாயனாரிடம் கொடுத்து ஏதாவது எழுதச் சொன்னேன். அவரும், 'முதுகாடுக்கு வாழ்த்துக்கள்' என்று எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். அதை எடுத்துக் கொண்டு, மேடைக்குச் சென்று, எதிர்க்கட்சித் தலைவரான ஜேக்கப்பை அழைத்தேன். அவர் மேடைக்கு வந்தவுடன், நாயனார் எழுதிய பேப்பரைக் கொடுத்து படிக்கச் சொன்னேன். அதில், அன்று சட்டசபையில் ரெவின்யூ போர்டு ஒழிப்பு பற்றி நாயனார் தெரிவித்த முக்கியக் கருத்து எழுதப்பட்டிருந்தது. தாம் எழுதிய வாழ்த்து, எப்படி, தாம் சட்டசபையில் பேசிய பேச்சாக மாறியது என்று நாயனாருக்கே ஷாக்! ஆடியன்ஸைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ!

இன்னொரு தடவை மாத்ருபூமி பத்திரிகையின் ஆசிரியர் பி.வி. சந்திரனைச் சந்திக்கச் சென்றிருந்தேன். அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, குடிப்பதற்காக 'டீ' வந்தது. சந்திரன், 'நீங்கள்தான் மேஜிக் நிபுணராயிற்றே! டீயுடன் சாப்பிட ஏதாவது வரவழைத்துக் கொடுங்களேன்' என்று திடீரென்று கேட்டுக் கொண்டார். நான் 'அதனாலென்ன? வரவழைத்தால் போயிற்று!' என்று சொல்லி, கைகளைக் காற்றில் அசைத்து, கேரளாவின் பிரபல ஐட்டமான உன்னியப்பத்தை வரவழைத்தேன். ஆசிரியருக்கோ இனிய அதிர்ச்சி. அது எப்படி சாத்தியமாயிற்று? என்றார். 'நீங்கள் இப்படி ஏதாவது கேட்கக்கூடும் என்று நான் எதிர்பார்த்து, தயாராகத்தான் வந்தேன்' என்றபோது கைகுலுக்கிப் பாராட்டினார்.



''என் கணவருக்கு ஞாபக மறதி அதிகமாகி விட்டது! ஸ்கூட்டருக்குப் பதில் நேற்று சைக்கிளை எடுத்துக்கிட்டு ஆபீஸ் போய் விட்டார்!''

''அது எவ்வளவோ தேவலாம்; என் கணவர், நேற்று ஸ்கூட்டருக்குப் பதில் சைக்கிளை எடுத்துப் போனவர், பெட்ரோல் பங்க் கியூவில் ஒரு மணி நேரம் நின்றிருக்கிறார்!''

– லலிதா செல்லப்பா

திருவனந்தபுரத்தில் மேஜிக் கலையைக் கற்றுக் கொடுக்கிற பள்ளி ஒன்றை கோபிநாத் நடத்தி வருகிறார். கேரள அரசு, மேஜிக்கை போஷிக்கும் விதமாய், இவரது பள்ளிக்கு அங்கீகாரம் அளித்ததோடு மட்டுமல்லாமல், இவருக்கும் விருதுகள் அளித்தும் கௌரவித்துள்ளது.

"கோபிநாத் முதுகாடுக்கு திருமணமாகி விட்டது. மனைவி பெயர் கவிதா. "உங்கள் மனைவிக்கும் மேஜிக்கில் ஆர்வம் உண்டா?" என்றோம்.

"ஓ! எஸ். நான் சம்பாதிக்கிற பணத்தையெல்லாம் மறையச் செய்ய 'ஷாப்பிங்' என்கிற மேஜிக்கில் அவர் எக்ஸ்பர்ட்!"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **யோகா**

கு ருகுலத்துக்குத் தேடிப் போன மன்னரின் சேவர்களுக்குச் சந்தேகம் வந்தது. ராஜா வாதத்துக்கு அழைத்துவரச் சொல்லி அனுப்பினால் இந்தச் சிறுவன் வருகிறேன் என்கிறானே... இவனை அழைத்துப் போவதா?... ராஜாவிடமே போய்க் கேட்டார்கள்.

ராஜா சொல்கிறான், 'யார் வேண்டுமானாலும் வரலாம்... வயது நிர்ணயமெல்லாம் கிடையாது.'

உடனே பல்லக்கிலே யாமுனாயனை எழுந்தருளப் பண்ணி அழைத்து வருகிறார்கள். அப்போது அந்தக் குழந்தை பல்லக்கிலே உட்கார்ந்து கொண்டு ஒரு சுலோகம் சொல்கிறது.

''நாங்கள் வெறும் கவிகள் அல்ல; புத்தகப் புழுக்களும் அல்ல– வியாகரண சூத்ரங்களை மனப்பாடம் பண்ணி வெறுமே ஒப்பிக்கக் கூடிய புத்தகப் புழுக்கள் அல்ல... எதிர்த்து வரக்கூடிய பிரதிவாதியாகிற யானையின் மேலே ஏறி உட்கார்ந்து மர்த்தனம் பண்ணக் கூடிய சிம்ஹங்கள்.''

– பல்லக்கிலே இப்படிச் சொல்லிக் கொண்டே வருகிற குழந்தையை ராஜாவும் ராணியும் உப் பரிகையிலேயிருந்து பார்க்கிறார்கள்.

ராணி சொல்கிறாள்: "இந்தக் குழந்தைதான் நம் ஆஸ்தான வித்வான் ஆக்கி ஆழ்வாரை ஜெயிக்கப் போகிறது."

''இந்தக் குழந்தை ஜெயிக்காது. ஆழ்வார் ரொம்பப் பெரிய வித்வான் ஆயிற்றே...'' – இது ராஜா.

"இல்லையில்லை. இந்த முக தேஜஸைப் பாருங்கள். இந்தக் குழந்தைதான் ஜெயிக்கப் போகிறது."

"இல்லை..."

''இந்தக் குழந்தை ஜெயிக்கவில்லையானால் நான் ராணி என்கிற ஸ்தானத்தையே விட்டுவிட்டு அடிமையாகி விடுகிறேன்."

ராஜா சொல்கிறான்: "இந்தக் குழந்தை ஜெயித்து விட்டால் பாதி ராஜ்ஜியத்தைக் கொடுத்து விடுகிறேன்..."

பெரிய சபை... ஏகப்பட்ட பேர் கூடியிருக்கிறார்கள். இந்தக் குழந்தை வந்து உட்கார்ந்திருக்கிறார்.

'ஜெயவிஜயீபவ!' என்று சொல்லி சிஷ்யர்களெல்லாம் புடை சூழ ஆக்கி ஆழ்வார் வந்து ஆசனத்தில் அமர்கிறார்.

"வாதத்துக்கு யார் வந்திருக்கிறார்கள்?"



என்று ஆக்கி ஆழ்வார் கேட்டவுடனே, ராஜா அந்தக் குழந்தையைக் காண்பித்தார்.

"முயல் குட்டி மாதிரி ஒன்று வந்து உட்கார்ந்திருக்கிறதே... நானோ சிம்ஹம். சிம்ஹத்துக்கு எதிரே ஒரு முயல்குட்டி பேச வந்ததா...?" என்றார் வித்வான்.

ராஜா சொல்கிறான். "முயல் குட்டியோ சிம்ஹக்குட்டியோ எனக்குத் தெரியாது... இன்னிக்கு வாதத்துக்கு வந்திருப்பது இதுதான். வாதம் ஆரம்பிக்கலாம்..."

உடனே ஆக்கி ஆழ்வார் அந்தக் குழந்தையைப் பார்த்து, "எந்த சாஸ்திரத்தில் படித்துப் பிரவேசம் பண்ணியிருக்கிறாய் நீ...?" என்று கேட்டார்.

இளம் வித்வான், "ஒன்றா இரண்டா...? எல்லா சாஸ்திரங்களையும் படித்துள்ளேன். பாண்டித்யம் பெற்றுள்ளேன்..." என்றார்.

"அப்படியானால்...நீ சின்னப் பையன். உனக்கே முதல் அவகாசம் கொடுக்கிறேன். நீ என்ன கேட்கப் போகிறாய்... கேளு..."

சின்னப் பிள்ளை யாமுனாயர் கேடகிறார்: "நான் எதையெல்லாம் இருக்கிறது என்று சொல்கிறேனோ அதையெல்லாம் நீர் இல்லை என்று சொல்ல வேண்டும். நான் எதையெதை இல்லை என்று சொல்கிறேனோ அதையதை தேவரீர் இருக்கிறது என்று ஸ்தாபகம் பண்ண வேண்டும்... அவ்வாறு ஸ்தாபகம் பண்ண முடியாது போய்விட்டால் தோற்றதாக ஒப்புக்கொள்ள வேண்டும்."

'உருவம் சின்னதாயிருந்தாலும் பேசுவது பெரிதாக இருக்கிறதே' என்று நினைத்துக்

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



கொண்டார். "சரி நீயே கேள்..." என்றார் வித்வான்.

அப்போது அந்த யாமுனாயர் அந்த பெரிய வித்வானைப் பார்த்து, அந்த நடு சபையிலே, ராஜா-ராணி எல்லோரும் உட்கார்ந்திருக்கிறபோது, அத்தனை பேர் நடுவில் அந்த வித்வானைப் பார்த்து-

"உங்கள் அம்மா மலடி அல்ல..." என்கிறார்!

இப்போது அந்த வித்வான் என்ன சொல்ல வேண்டும்...? 'என் அம்மா மலடிதான்' என்று மாற்றிச் சொல்ல வேண்டும். தன் தாயாரை 'மலடிதான்' என்று எப்படிச் சொல்வார் அவர்...?!

வாயடைத்துப் போய் நிற்கிறார்! பேசவே முடியவில்லை... பேச்சே வரவில்லை!

"அடுத்ததைக் கேட்கட்டுமா...?" என்கிறது குழந்தை!

இவருக்கோ நடுக்கம்! முதலே தெரியவில்லை... அடுத்தது என்னவாக இருக்குமோ?!

ராஜாவைக் காண்பித்துச் சிறுவன் சொல்கிறான்: "இந்த ராஜா சார்வபௌமன்" என்று சொல்கிறான்.

இப்போது, "ராஜா சார்வபௌமன் அல்ல..." என்றல்லவா வித்வான் நிரூபிக்க வேண்டும்!

மூன்றாவது கேள்வி இன்னும் ரொம்ப விபரீதம்!

"இந்த ராஜ பத்னி மகா பதிவ்ரதையாக்கும்" என்கிறார் யாமுனாயர்!

'ராஜ பத்னி பதிவ்ரதையல்ல' என்று மூத்த வித்வான் வாதாட வேண்டும்!

மூன்று கேள்விகளுக்குமே பதில் தெரியவில்லை என்று ஒப்புக் கொண்டார் ஆக்கி ஆழ்வார்.

"என்னுடைய வித்யா கர்வம்தான் இப்படி ஒரு சின்னப் பிள்ளை வடிவிலே தோன்றி என்னை சிட்சிக்கிறது... இதை நான் புரிந்து கொண்டேன்..." என்று சொல்கிறார். ஆனால் கடுகு சிறுத்தாலும் காரம் போகாத மாதிரி கர்வம் அவரை விட்டு இன்னமும் போக வில்லை... யாமுனாயனைப் பார்த்து,

"இந்த மூன்றுக்கும் உனக்கு விடை தெரியுமா... தெரிந்தால் சொல்லேன்... சொல்லிவிட்டாயானால் உனக்கு நான் தாஸன்" என்கிறார்.

"விடை தெரியாமலா உன்னிடம் கேள்வி கேட்டேன்?" என்றது குழந்தை.

பதிலைச் சொன்னவுடன் அத்தனை

## அருள்வாக்கு

மலையாளக் 'கதகளி'யில் ஒரு நிஜஸ்ஸு பார்க்கிறோம். அதில் வாயால் எதுவும் பேசாமல் எல்லாரும் ஊமைபோலவே ஆடுவார்கள். ஆனாலும் பலவிதமான மனோ பாவங்களை கை, கால், புருவம், உதடு இவற்றின்

பேரும் கை தட்டிவிட்டார்கள்!

"காக்கை ஒரு முட்டைதான் இடும். வாழை ஒரு குலைதான் தள்ளும். ஒரே மரம் தோப்பாகிவிடாது என்று சொல்வார்கள். உங்கள் அம்மாவுக்கும் நீங்கள் ஒரே பிள்ளை... ஆகையினால், காகத்தையும் வாழையையும் சாஸ்திரமானது மலடி கோஷ்டியிலே சேர்ப்பதால் உன் தாயாரையும் அதிலே சேர்க்கலாம்..." என்றார் சிறியவர்.

இப்படி சாஸ்திர, நிமித்தமாக அவர் சொல்லவே இதைப் பெரியவரும் ஒப்புக் கொண்டார்.

அடுத்தது சார்வபௌமன். சார்வபௌமன் என்றால் ஏழு த்வீபங்களிலேயும் அவனுடைய பரிபாலனம் இருக்க வேண்டும். அவனுடைய ராஜ்ஜியத்திலே சூரியன் அஸ்தமிக்கவே கூடாது. இங்கே, இன்னொரு இடத்திலே, மேலும் ஒரு இடத்திலே என்று அவன் ராஜ்யம் இருந்தால் ஓர் இடத்தில் அஸ்தமித்தாலும் இன்னொரு இடத்தில் சூரியன் பிரகாசித்துக் கொண்டிருப்பான். அப்படிப்பட்டவனைத்தான் சார்வபௌமன் என்று சொல்லலாம். சோழ நாட்டுக்கு மட்டும் ராஜா இவன்... அந்தப் பக்கம் போனால் பாண்டியன் சும்மா இருப்பானா? இங்கே காலை வைத்தால் சேரன்... அவன் பேசாதிருப்பானா...? ஆகையினால் ஒரு வரையறைக்குட்பட்டு பரிபாலனம் பண்ணுகிறவனை வெறுமே ராஜா என்று சொல்லலாமேயொழிய, சார்வபௌமன் என்று சொல்ல முடியாது...."

- இதை ராஜாவே ஒப்புக் கொண்டு விட்டான்.

அடுத்தது ராஜ பத்தினி... அவள் பதிவ்ரதையல்ல என்று சாஸ்திர ரீதியாக எடுத்துச் சொன்னார் யாமுனாயர்.

ஒரு பெண் உலகத்திலே பிறக்கிறாள் என்றால் அவள் ஆத்மா முதலில் சந்திரனிடத்திலே இருக்கும். அதன் பிறகு கந்தர்வனிடத்திலே வரும்... கந்தர்வர்கள் அக்னியினிடத்திலே ஒப்படைப்பார்கள்... பூலோ

அசைப்பினாலேயே தெரிந்து கொண்டு விடுவோம்.

'கதைகளி' என்பதுதான் கதகளி என்று நாம் சொல்வது. களி என்றால் தமிழில் களிப்பு; ஆனந்தம், களிப்பிலே டான்ஸ் ஆடத் தோன்றுகிறது. 'களிக் கூத்தாடுவது' என்கிறார்கள். அதனால்தான் அம்பலக் கூத்தனுக்குத் திருவாதிரை உத்ஸவம் பண்ணி ஸமர்ப்பிக்கிற நைவேத்யத்தைக் 'களி' என்கிறோம். மலையாளத்தில் களி என்றாலே கூத்து என்று அர்த்தம் பண்ணிக் கொண்டார்கள்.



ஒரு கதையைக் கூத்தாக ஆடிக் காட்டுவதற்குக் 'கதைகளி' என்று பேர் வைத்தார்கள்.

மனோபாவத்தை வாயால் சொல்வது, அங்கத்தால் அபிநயித்துக் காட்டுவது, மனோபாவம் இன்னதென்று சொல்ல முடியாமலே போனாலும் வெறும் ராக ஆலாபனையாலும், தில்லானாவினாலும் ஆனந்தத்தை உண்டாக்குவது என்று பலவிதமிருந்தாலும் எல்லாம் 'அழகு' என்ற ஒன்றினால் ஆத்மாவுக்கு நிறைவு ஏற்படுத்துவதைச் சேர்ந்ததுதான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

கத்திலிருக்கிற மனிதனான வரனுக்கு இந்தப் பெண்ணைக் (மூன்று பேரிடமிருந்தவளை) கொடுக்கிறேன்... என்று மந்திரம் வரும்- கல்யாண காலத்திலே. இது எல்லா ஸ்த்ரீகளுக்கும் பொதுவான தர்மம் என்பதாலே இதிலே தோஷம் என்பது உண்டோ!

இந்த மாதிரி சாஸ்திர கண்கொண்டு எடுத்துச் சொன்னபோது, ராணி எழுந்து ஓடிவந்து குழந்தையை வியந்தாள்: "எம்மை ஆள வந்திரோ!" என்றாள். அதனாலேதான் யாமுனாயருக்கு ஆளவந்தார் என்று பெயர் வந்தது.

இப்படிப்பட்ட உயர்ந்த ஆளவந்தார், ஆசார்ய கோஷ்டியிலே இருக்கிறார். அவர் ஸ்தோத்திர ரத்தினம் அருளியிருக்கிறார். அந்த ஸ்தோத்திரம் எப்படியிருக்கும். அதிலே சொல்லப்பட்ட விஷயம் எத்தனை ஆழமாய் இருக்கும் என்பதையும் நாம் உணர வேண்டும். இதிலே போக்ரா, போக்யம் பிரேரிதா பற்றிச் சொல்லியிருக்கிறது.

அதேபோல் விஷ்ணு புராணம். அதிலேதான் சித், அசித், ஆனந்தம், போக்தா, போக்யம், பிரேரிதா பற்றி பராசரர் சொல்கிறார்.

சாமான்யமாக ஜீவன், அசேதனம் என்றும் பரமாத்மாதான் பிரேரகன் என்றும் சொன்னேன். ஒவ்வொன்றையும் நாம் அனுபவிக்க வேண்டுமென்றால் அவன் அருள் இல்லாமல் அனுபவிக்க முடியாது. நாம் எவ்வளவுதான் இட்டம்போட்டு ஒரு பொருளை அனுபவிக்க வேண்டுமென்று ரொம்ப சித்தமாக எடுத்து வைத்துக் கொண்டாலும் பகவத் சங்கல்பம் இல்லையென்றால் அது நழுவிப் போய்விடும்.

ஸ்வாமி தேசிகன் சரணாகதியைப் பிழிந்து கொடுக்கிறார் பத்து சுலோகங்களில்... அதில் ஒரு சுலோகத்தில் 'ஹே வரதா! தேவாதி ராஜா! நீயே இதை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்கிறார்.

எதை ஏற்றுக் கொள்ள வேண்டும்?

'என்னையும் என் உடைமையையும்...'

என்னைச் சேர்ந்தது அத்தனையையும் உன்னைச் சேர்ந்தது என்று அர்ப்பணிக்கிறேன். இதை நீ சுவீகரித்து அர்ப்பணிக்கிறேன். இதை நீ சுவீகரித்து அனுக்கிரஹம் பண்ண வேண்டும்.'

வேதத்தில் மூன்றாம் காண்டத்தில் ஒரு சுலோகம் வரும். அதன் அர்த்தம் என்னவென்றால், 'இந்த என் ஆயுள் இருக்கிறதே அது யக்ஞத்தின் பொருட்டு... பிராணன் இருக்கிறதே, அது யக்ஞத்தின் பொருட்டு... அபானன் என்கிற வாயு இருக்கிறதே, அது யக்ஞத்தின் பொருட்டு; கேட்கும் சக்தியானது இருக்கிறதே... அது யக்ஞத்தின் பொருட்டு; மனஸ் இருக்கிறதே அது யக்ஞத்தின் பொருட்டு, வாக்கு யக்ஞத்தின் பொருட்டு, ஆத்மா யக்ஞத்தின் பொருட்டு, பத்னி, மக்கள், வீடு, ஐச்வர்யம் எல்லாம் யக்ஞத்தின் பொருட்டு... என்று சொல்கிறது மந்திரம்.

'எல்லாமே யக்ஞத்தின் பொருட்டு என்றால் உனக்கு என்ன...?' என்று ஒருத்தர் கேட்டார்.

அதற்கு அழகான பதில் இருக்கிறது. அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)



• சிமி

# தலைப்புச் செய்தியில் சிமி!

சிமி கேர்வல் – அவ்வப்போது தலைப்புச் செய்திகளில் இடம் பிடிக்கும் இந்தி நடிகை.

'மேரா நாம் ஜோக்கர்' படத்தில் சின்ன வயது ராஜ் கபூரின் டீச்சராக, வெகு இயல்பாக நடித்துப் பேர் வாங்கியவர். "சித்தார்த்தா" என்ற ஆங்கிலப் படத்தில் ஒரு காட்சியில் நிர்வாணமாகத் தோன்றி அதிர வைத்தவர்.

பிரதமர் ராஜீவ்காந்தி புகழின் உச்சியிலிருக்கும் போது, அவர் சென்ற இடத்திற்கெல்லாம் கூடவே இவரும் பின் தொடர்ந்தார். காரணம் அவரைப் பற்றிய டாக்குமெண்டரி படம் ஒன்றை சிமி இயக்குவதாக இருந்தது.

நடுவில் சில வருடங்கள் சிமியைப் பற்றி செய்தி எதுவும் காணோம். இப்போது மீண்டும் செய்தியில். விளம்பரப் படங்களைத் தயாரிப்பதில் பெரும் ஆர்வம் காட்டி வருகிறார். தவிர 'ரெண்டவஸ்' (Rendezvous) என்ற இவர் இயக்கும் தொலைக் காட்சித் தொடர் நிகழ்ச்சி மக்களின் பரவலான ஆதரவைப் பெற்று வருகிறது! ஒவ்வொரு வாரமும் வெவ்வேறு துறைகளைச் சேர்ந்த ஒரு வி.ஐ.பியைப் பேட்டி காண்கிறார். கேள்விகளை மட்டுமல்ல, அன்றைய விருந்தாளியின் உடையலங்காரத்தை நிர்ணயிப்பதும் இவர்தான். 'ஏனோ தானோ வென்ற கேஷுவல் உடை வேண்டாம். இந்தக் கலர் உடை உங்களுக்கு எடுப்பாக இருக்கும்' என்பதிலிருந்து 'வரும்போது கையோடு ஒரு அரை டஜன் டைகளை எடுத்துக் கொண்டு வந்தால், அதில் ஒன்றை நான் தேர்ந்தெடுத்துக் கொடுக்க சௌகரியமாக இருக்கும்' என்றெல்லாம் கூற, அவர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். ஒப்புக் கொள்ளாத ஒரு நபரும் உண்டு – கபில்தேவ். குர்தாவில்தான் தோன்றுவேன் என்று பிடிவாதம் காட்டியவர்!

●● "சரண்யாவைக் கைப்பிடித்த பின் வாழ்க்கை எப்படி இருக்கிறது?" – பொன்வண்ணனிடம் இந்தக் கேள்வியைக் கேட்ட இடம் கற்பகம் ஸ்டுடியோ. சன் டீ.வி.யில் தினந்தோறும், ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் 'மங்கை' தொலைக் காட்சித் தொடரின் படப்பிடிப்பில் இருந்தார். இத் தொடரில் மங்கையின் கணவராக பொன்வண்ணன். "நிம்மதியாய் நிறைய டீவி. சீரியல்களில் நடித்துக் கொண்டிருக்கிறேன். சந்தோஷமாய் நாட்கள் நகர்ந்து கொண்டிருக்கின்றன" என்றார். 'மங்கை' ஒரு வருடத்திற்குத் தினந்தோறும் ஒளிபரப்பாகும் மெகா தொடர் என்கிற தகவலையும் சொன்னார். மெகா சீரியல்களுக்கு வரவேற்பு எப்படி? "ஆரம்பத்தில் கொஞ்சம் அப்படி இப்படித்தான். போகப் போக பிக்-அப் ஆகி விடுகிறது. நேரடி தமிழ் மெகா தொடர்கள் வர வர இந்தியிலிருந்து டப் பண்ணப்பட்ட தொடர்களுக்கு வரவேற்பு இல்லாமல் போய் விட்டது, பார்த்தீர்களா? அதற்காக வேணும் இந்த மாதிரி தொடர்களை தமிழ் ரசிகர்கள் நிச்சயம் வரவேற்க வேண்டும்!" – என்றார் பொன்வண்ணன். கற்பகம் ஸ்டுடியோவை ஒரு வருடத்திற்கு ஒப்பந்தம் செய்து 'மங்கை' கதை நடக்கும் பிரதான களமாக மாற்றியிருக்கிறார்கள்!

— குல்லூ, மஹாந்த்



• பொன்வண்ணன்

போனவாட்டி
அடிச்சுத் தொவைச்சு
உயர்த்தியாச்சு...
இந்த வாட்டி
இஸ்திரி போட்டுடுவோம...

திண்டுக்கல் விழா
ரத்து




1998 ஜூலை 19
வெகுதான்ய ஆடி 3
மலர் : 56
இதழ் : 51


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கோடி கோடியாய் நஷ்டம்; கூடை கூடையாய்த் துன்பம்!

தமது வட்டத்தில் மட்டுமே நாளொன்றுக்கு ஐம்பது லட்ச ரூபாய் நஷ்டமாகும் என்கிறார் சென்னை தலைமை போஸ்ட் மாஸ்டர் ஜெனரல்! அப்படியானால், அஞ்சல் துறை ஊழியர்கள் வேலை நிறுத்தத்தால் நாடுதழுவிய நஷ்டம் எவ்வளவு இருக்கும் என்று கற்பனை செய்து பாருங்கள்! வேலை நிறுத்தம் நீடிக்கும் ஒவ்வொரு வினாடியும் இந்த நஷ்டம் பெருகிக் கொண்டே போகும்!

கடிதங்கள், காசோலைகள் பட்டுவாடா ஆகாததால் வர்த்தகம், வியாபாரம், தொழில் துறை, தனிநபர் என்று சகலரும் பாதிக்கப்பட்டு நஷ்டமடையப் போகின்றனர்.

அஞ்சல் துறை அடையப் போகும் கோடிக்கணக்கான ரூபாய் நஷ்டத்துடன் நாடே அடையப் போகிற இந்தக் கோடானு கோடி ரூபாய் நஷ்டத்தையும் கூட்டிக் கொள்ளுங்கள்...! தலைசுற்றுகிற அளவுக்குப் போய் நிற்கும் நஷ்டக் கணக்கு!

தபால் துறைக்கும் தனியார், அரசு நிறுவனங்களுக்கும் ஏற்படப் போகிற இந்த நஷ்டம் நாட்டுக்கே பெரிய இழப்பு என்பதை அஞ்சல் துறையும் உணர்ந்ததாகத் தெரியவில்லை; அரசும் கவனத்தில் கொள்வதாகத் தெரியவில்லை. இல்லாவிடில், பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டிய பிரச்னைகளைப் பெரிதுபடுத்தி, அத்தியாவசிய




சேவைகளுக்கே முட்டுக்கட்டை போட்டு வைக்கும் இந்த அவலநிலை ஏற்படுமா?

தல்வார் கமிட்டி, அஞ்சல் துறை ஊழியர்களின் ஊதியம் குறித்து பத்து சிபாரிசுகளை முன்வைத்தது. அவற்றுள் ஒன்று மட்டுமே அமுல்படுத்தப்பட்டிருப்பதாகவும் மற்ற ஒன்பது சிபாரிசுகளும் என்னென்ன என்பதைக் கூட தங்களுக்குத் தெரிவிக்காமல் அஞ்சல் துறை அமைச்சர் ஏற்றுக் கொண்டு, மத்திய அமைச்சரவையின் ஒப்புதலுக்கு அனுப்பி விட்டதாகவும் ஊழியர்களின் தொழிற்சங்கம் புகார் செய்கிறது. அமைச்சர் சுஷ்மா ஸ்வராஜ், தங்கள் கோரிக்கைகள் குறித்து பேச்சு வார்த்தை நிகழ்த்தத் தவறி விட்டதாகக் குற்றம் சாட்டுகின்றனர் தொழிற்சங்கத்தினர்.

அத்தியாவசிய சேவைப் பிரிவைச் சேர்ந்த ஊழியர்கள் கோரிக்கைகள் எழுப்பும் போது, அவற்றை உடனடியாகப் பரிசீலித்து, பேச்சு வார்த்தை மூலம் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முயற்சி செய்வதுதான் அறிவுடைமை.

கோரிக்கைகள் நியாயமற்றவை என்பதில் அரசு உறுதியாய் இருந்தால், ஊழியர்களின் வேலை நிறுத்தத்தைச் சட்டவிரோதமானதாக அறிவிக்கலாம். அதற்கான பலமும் இந்த ஆட்சியிடம் இல்லை.

உணர்ச்சிக் கொந்தளிப்பில் உள்ள ஊழியர்களிடம், 'அரசு உங்கள் கோரிக்கைகளைப் பரிசீலித்து வருகிறது; பொறுமையாய் இருங்கள்' என்று கூறுவதில் பயனிராது. சுஷ்மா ஸ்வராஜின் சமாதான முயற்சி தோற்றதில் ஆச்சர்யமில்லை.

அத்தியாவசிய சேவைகள் இடைவிடாது கிடைக்கச் செய்வதில் எப்படி அரசுக்குப் பங்கிருக்கிறதோ, அதே போல் சம்பந்தப்பட்ட துறைகளின் ஊழியர்களுக்கும் கூடுதலான பொறுப்பு இருக்கிறது. பிற துறை ஊழியர்களைப் போல் அவர்கள் வேலை

நிறுத்தத்தில் ஈடுபடுவது நியாய — தர்மமே அல்ல.

வாஜ்பேயி அரசு பதவி ஏற்று நூறு நாட்களைச் சமீபத்தில்தான் எட்டியிருக்கிறது — அதுவும் மிகுந்த பிரயாசையுடன் அடைந்த 'சாதனை'. கூட்டணிக் கட்சிகளின் தாளத்துக்கேற்ப ஆடி, ஆட்சியைக் காப்பாற்றிக் கொள்ளவே பி.ஜே.பி. அரசுக்குப் பொழுது சரியாய்ப் போய்விடுகிறது.

இந்த பலவீனமான அரசிடம் நாம் அதிகம் எதிர்பார்க்க முடியாது; பொறுத்திருந்து கோரிக்கைகளை அடைவோம் என்கிற எண்ணம் தபால்துறை யூனியன் தலைவர்களுக்காவது இருந்திருக்கலாம்.

'அரசுக்கு இருக்கிற தலைவலிகள் போதும்; அஞ்சல் துறை வேலை நிறுத்தம் வேறு ஆரம்பித்து நாடே ஸ்தம்பித்துப் போக வேண்டாம்...' என்ற முன்னெச்சரிக்கையுடன் அமைச்சரும் செயல்பட்டிருக்கலாம்.

ஆனால், இரு தரப்பினரும் பொருளாதார நஷ்டத்தையும் கருதிப் பார்க்கவில்லை; பொது மக்கள் அடையப் போகிற சொல்லொணா துன்பத்தையும் நினைத்துப் பார்க்கவில்லை.

பிடிவாதத்தைத் தளர்த்த மறுத்ததால் மக்களின் நல்லுணர்வையும் நன்மதிப்பையும் இழந்திருக்கிறது அஞ்சலகத் துறை...

செவிலியர் வேலை நிறுத்தம் நிகழ்ந்த போது அடைந்த அனுபவத்திலிருந்து பி.ஜே.பி. பாடம் கற்றிருக்கலாம். தவறி விட்டது.

இந்த ஆட்சியிடம் நமக்கு ஏற்பட்டுள்ள ஏராளமான ஏமாற்றங்களின் பட்டியலில் இந்த வேலை நிறுத்தமும் இடம் பிடிக்கிறது!

# ஆபீஸில்

**வாழ்க்கையில் ஏணிப்படிகளை, 'தள்ளுதல்–கொள்ளுதல்' (push & pullதான்) கலாசார அடிப்படையில்லாமல், 'உந்துதல்–உழைத்தல்' என்ற ஃபார்முலாவை உபயோகித்து, ஏறியிருப்பவர் சீதாகுமாரி! எல்.ஐ.சி இவரை, தன் முதல் பெண் நிர்வாக இயக்குனர் ( Executive Director) என்ற மகுடத்தை ஏற்றி கௌரவித்திருக்கிறது. அவர் தம் பதவியில் 'Associate of the Institute of Actuaries' என்ற மாணிக்கத்தை சிரத்தையுடன் பதித்து, அதன் அழகைக் கூட்டியிருக்கிறார் இவர். ஸான்டா க்ரூஸிலுள்ள அவரது இல்லத்தில் சந்தித்தபோது, சுவரில் அழகான பெயிண்டிங்குகள் வரவேற்றன.**

கேள்வி: உங்கள் கைவண்ணமா? அசத்தலாயிருக்கிறதே?

பதில்: ஊஹூம்; என் கணவருடையது!

கே: நிஜமாகவா?

ப: ஆமாம்! பிரிட்டிஷ் கவுன்சிலின் நிர்வாகத் துறையில் வேலை என்றாலும் (இப்போது ரிடையர்ட்), மனத்தளவில் அவர் கலைஞர்தான். அந்தக் காலத்தில் ஒய்.ஜி.பி. நாடகக் குழுவில் நடித்திருக்கிறார். பெயிண்டிங் செய்வார், நன்றாகச் சமைக்கவும் செய்வார்.

கே: ஓ! உங்கள் வெற்றிக்கு ஏராளமாக ஒத்துழைத்திருக்கிறார் என்று சொல்லுங்கள்...

ப: (சிரித்து...) ஆமாம்; வேலைகளைப் பகிர்ந்து கொள்ளும் அவர் பண்பும் என் வெற்றிக்கு ஒரு முக்கிய காரணம்தான்.

கே: ஆனாலும் உங்கள் வெற்றிக்கான அடிப்படைக் காரணம் யார்...?

ப: என் தாயும், அவர் விதைத்த கல்வி வெறியும்தான்! நாங்கள் திருநெல்வேலிக்காரர்கள். என் தந்தை பெரும் பணக்காரர். ஆனால் திடீரென்று நொடித்தபோது, அவருக்குப் போதிய கல்வியறிவு இல்லாததால், மீண்டு எழ முடியவில்லை. அந்த வேதனை என் அம்மாவை உலுக்கி, என்னையும் என் தம்பி, தங்கைகளையும் நன்றாகப் படிக்க வைக்க வேண்டுமென்ற லட்சியமாக மாற்றியது அவருக்கு எப்போதும் 'படி...படி' என்ற மந்திர ஜபம்தான்!

கே: 'ஆக்சுவரி' (காப்பீட்டுக் கணக்காளர்)யாகத் தூண்டியது எது? அதுவும் நீங்கள் படித்தபோது உலக அளவிலேயே ஆறு பெண்கள்தான் இந்த அரிய உயர்வைப் பெற்றிருந்தார்களாமே...?

ப: எல்.ஐ.சியில் ட்ரெயினிங்குக்குச் சென்றபோது, எங்கள் ப்ரொஃபஸர் ஒரு "ஆக்சுவரி". எனக்கு "abstract mathematics"

லிருந்த ஆர்வத்தைக் கண்டு அவர்தான் என்னைப் படிக்கத் தூண்டினார். நானும் உடனே அப்ளிகேஷன் போட்டு, கரஸ்பாண்டன்ஸில் படித்து, சொந்தச் செலவில் லண்டனுக்குச் சென்று பரீட்சை எழுதினேன். அந்தக் காலத்தில், தென் கிழக்கு ஆசியாவிலேயே நான் ஒருத்தி தான் 'ஆக்சுவரி'. இன்று அப்படியில்லை!

**கே:** முதல் பெண் இயக்குனர் என்ற பதவி எப்படியிருக்கிறது:

**ப:** 'ஹா'... என்று எகிறிக் குதிக்கும் வயதைத் தாண்டி விட்டேன்; ஆனாலும் மனத்தின் மூலையில் ஒரு சின்ன சந்தோஷம் என்னை உற்சாகப் படுத்திக் கொண்டிருக்கிறது.

> **"என்னிடம் பணி புரியும் பெண் திடீரென்று 'பர்மிஷன்' கேட்டாள். நான் மறுக்கவே, அழ ஆரம்பித்து, "என் அம்மா என்னைப் பார்க்க வந்திருக்கிறாள்; என் புகுந்த வீட்டிற்கு அவளால் வர முடியாது!" எனக் கேவினாள். தன் தாயை, வீட்டிற்கு அழைக்கும் சுதந்தரம்கூட இல்லாதவளை எப்படிச் சொந்தக் காலில் நிற்பவளாகச் சொல்ல முடியும்?"**

**கே:** ஆண் வர்க்கம் உங்கள் உயர்வை எப்படி அங்கிகரித்திருக்கிறது?

**ப:** நான் மிகவும் ஆணித்தரமானவள்; 'Intellectual honesty' என்பது என்னிடம் ஆழமாகப் பதிந்த குணம். சொல்வதைச் செய்து, செய்ததைச் சொல்வதால் என்னிடம் எல்லோருமே மதிப்புக் கலந்த மரியாதையுடன் பழகுவார்கள். மேலும் தகுதி அடிப்படையிலான உயர்வென்பதால் யாரும் விரோதம் பாராட்டுவதில்லை.

**கே:** இது ஆண்கள் உலகம் என்கிறார்களே! பெண் என்பதால் ஏதேனும் முன்னேற்றத் தடைகள் இருந்தனவா?

**ப:** ஆண்களுடன் போட்டியிடும்போது, நம் திறமை தனித்தன்மையுடன் பளிச்சிட்டாலொழிய, உயர்வுகள் கிடைக்காது; தவிரவும் குடும்பம், குழந்தை என்ற கோணத்தில், ட்ரான்ஸ்ஃபர்களை அடிக்கடி ஏற்க முடியாமல், பதவி உயர்வு வாய்ப்புகளைத் தட்டிக் கழிக்க வேண்டியுமிருந்திருக்கிறது.

**கே:** அலுவலில் நீங்கள் சந்தித்த சவால் என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?

**ப:** என்னை ஒத்த பெண்கள் பலரும், அடிமட்டத்திலேயே ரிடையராகிவிட்ட நிலையில், நான் இந்த நாற்காலியில் அமரும் கட்டத்தைத் தொட்டிருக்கிறேனே, அதுவே நான் சந்தித்த பெரிய சவால்தான்!

**கே:** உங்கள் சாதனைகள்... அல்லது நீங்கள் ஏற்படுத்திய மாற்றங்கள்... எவை?

**ப:** 'இந்தியன் ஆக்சுவரி' கழகத்துக்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை; இருந்தாலும் ''ஆக்சுவரி''களின் உபயோகத்தை எடுத்துணர்த்தி எல்.ஐ.சியே ஸ்பான்சர் செய்து பலருக்கு இந்த ட்ரெயினிங் கிடைக்க வழி செய்துள்ளேன். திருச்சியிலுள்ள ஒரு கல்லூரியில் இந்தத் துறையில் டிப்ளோமாகூட ஆரம்பித்துள்ளோம். விரிவுரையாளரைத் தேடிப் பிடிப்பதிலிருந்து, பேப்பர் கரெக்ஷன் வரை பல பொறுப்புகளை ஏற்று, இந்தியாவில் உயிரை விடும் நிலையிலிருந்த இந்த ஸூப்பர் ஸ்பெஷாலிடி துறையை, மீண்டும் உயிர்ப்பித்துள்ளேன். பென்ஷன் துறையிலும், கம்ப்யூட்டர் துணை கொண்டு பல மாற்றங்களைச் செய்வித்திருக்கிறேன்.

# சீதாகுமாரி; வீட்டில் மிஸஸ் நீலகண்டன்

## பட்டுப் புடைவை பரிசுப் போட்டி — 12; முடிவு!

'அயோத்தி விஷயத்தில் பி.ஜே.பி.யை நம்புவதற்கில்லை' என்று கூறிய பிரமுகர் குர்ஷித் என்கிற சரியான விடையை எழுதி பட்டுப் புடைவை பரிசு பெறும் வாசகர் :

**எஸ். நாராயணன்,**
**10. டாக்டர் பிளாட்ஸ்,**
**யுனைடெட் இந்தியா காலனி,**
**12, இரண்டாவது தளம்,**
**6வது குறுக்குத் தெரு,**
**கோடம்பாக்கம், சென்னை — 24**

ஆனால், முதுமையை வரவேற்கு முகமாக 'பென்ஷன் ஸ்கிமீல்' அக்கறை காட்டாமல், 'பிள்ளை காப்பாற்றுவான்' என்ற மாயையிலிருக்கும் இந்தியர்களின் மனோபாவத்தை இன்னும் மாற்ற முடியவில்லையே என்ற வருத்தம் மட்டும் உண்டு!

**கே:** இன்ஷ்யூரன்ஸில் "ஆண் உயிர்" "பெண் உயிர்" என்ற பாகுபாடு ஏன்?

**ப:** தேசியமயமாக்கப்பட்ட பின் பல சட்ட திட்டங்களைத் தளர்த்தியுள்ளோம். உயிர்களை நாங்கள் ஆண், பெண் என பேதப்படுத்துவதில்லை. மாதம் ஒரு குறிப்பிட்ட தொகையைச் சம்பாதிக்கும் உயிர், சம்பாதிக்காத உயிர் என்றே வேறுபடுத்துகிறோம்; ஒரு உயிரின் இழப்பினால் துண்டு விழும் வருவாயை ஈடு செய்வதே இன்ஷ்யூரன்ஸ்; ஆண்களாகவே இருப்பினும் நிறைய சொத்து உண்டு. ஆனால் வேலை எதுவுமில்லை என்றால், அவர்களும் பெண்களைப் போல்தான் அதிக ப்ரீமியம் கட்ட வேண்டும். பெண்கள் செய்யும் வேலைகளுக்கு மதிப்பில்லையா என்ற வாதம் சரியாகாது. நம் சமூகம் பணத்தைக் கொண்டு பெண்களை மதிப்பிடுவதில்லை. பெண்மைக்கு வழங்கப்படும் மதிப்பும் மரியாதையும் தனி ரகம்!

மேலை நாடுகளில் எல்லாமே பணத்துடன் சம்பந்தப்பட்டது என்பதால் ஒரு பெண் இரண்டு மணி நேரம் சமையல் செய்தால் அதற்கொரு ஊதியம், ஒரு மணி நேரம் துணி துவைத்தால், தனி சம்பளம். என்று அவளுக்கும் ஒரு 'விலை' உண்டு. அந்த நாகரிகத்துடன் நம்மை ஒப்பிட முடியாது. ஏனென்றால் இங்கே, இன்னும் ராஜஸ்தான் போன்ற இடங்களில், ஜாயிண்ட் இன்ஷ்யூரன்ஸில் கணவனுக்கு 60 வயது, மனைவிக்கு 20 வயதென்றிருக்கும், ஒரு மாத ப்ரீமியத்தைக் கட்டி விட்டு கிழவன் மண்டையைப் போட, மனைவிக்கு நாங்கள் முழுத் தொகையை கொடுத்தாக வேண்டி வரும்!

இதே போல் கர்ப்பிணிப் பெண்களையும் இன்ஷ்யூர் செய்வதில்லை; நகரத்தில் கிடைக்கும் மருத்துவ வசதி, கிராமப்புறங்களில் இல்லையே! அங்கே 'ரிஸ்க் ஃபாக்டர்' அதிகமில்லையா? அதனால் இந்தியா முழுவதையும் ஒட்டு மொத்தமாகக் கணக்கில் கொண்டுதான், அறிவு ஜீவிகளான எங்கள் மூதாதையர், சட்ட திட்டங்களை வகுத்திருக்கிறார்கள்!

**கே:** 'லாப்ஸ்' ஆன பாலிஸியை மீண்டும் புதுப்பிக்கும்போது உங்கள் தலைமையகத்தில் எக்கச்சக்க 'டிலே' பண்ணுவதாகவும், இடைப்பட்ட காலத்தில் பாலிஸிதாரர் இறந்து விட்டால், நிலைமை மோசமாவதாகவும் சிலர் குறை கூறுகிறார்களே?

**ப:** லாப்ஸான பாலிஸியைப் புதுப்பிப்பவர்கள் பெரும்பாலும் நோய்த் தாக்குதலாலோ, வேறு காரணங்களாலோ திடீரென்று இறந்து விடுவோமோ என்ற பயத்துக்கு ஆளானவர்களாகவே இருப்பார்கள். எங்கள் அனுபவத்தில், திடகாத்திரமானவர்கள் புதுப்பிப்பது பற்றி நினைப்பதே அபூர்வம். எனவே, புதுப்பிக்க வருபவர்களைப் பூரணமாக மெடிகல் செக்கப் செய்து, டாக்டர்கள் நற்சான்றிதழ் வழங்கினால்தான், அவர்கள் அப்பீலை ஏற்போம்; ஆகும் காலதாமதம் தவிர்க்க முடியாதது.

**கே:** க்ரூப் இன்ஷ்யூரன்சில் குறைந்தபட்சம் 10 நபர்கள் என்று மாற்றியமைத்தால் சிறு தொழில் நிறுவனங்கள் பயனடையுமே?

**ப:** இதற்கான ப்ரீமியம் மிகவும் குறைவென்பதால், எங்களுக்கு கட்டுபடியாகும் விதத்தில், குறைந்த பட்சம் 25 என வைத்திருக்கிறோம். ஏற்கெனவே இது லாபம் சம்பாதிக்கும் நிறுவனம் அல்ல; சேவைதான் குறிக்கோள், ரொம்பவும் நஷ்டப்பட்டால் பாலிஸிதாரர்களுக்குத் தானே தொந்தரவு?

**கே:** சமூகத்தில் இன்று பெண்கள் நிலை எப்படி இருக்கிறது? முன்னேறி வருகிறார்களா?

**ப:** சுதந்திரமாக இயங்குகிறார்களா என்

பதைப் பொறுத்தே அவர்கள் முன்னேற்றத்தைக் கணிக்க முடியும்! என்னிடம் பணிபுரியும் பெண் திடீரென்று 'பர்மிஷன்' கேட்டாள். நான் மறுக்கவே, அழ ஆரம்பித்து, "என் அம்மா என்னைப் பார்க்க வந்திருக்கிறாள்; என் புகுந்த வீட்டிற்கு அவளால் வர முடியாது!" எனக் கேவினாள். தன் தாயை, வீட்டிற்கு அழைக்கும் சுதந்தரம்கூட இல்லாதவளை எப்படிச் சொந்தக் காலில் நிற்பவளாகச் சொல்ல முடியும்? இதைவிட சம்பாதிக்காமலேயே வீட்டிலிருந்து கொண்டு, அறிவுபூர்வமான அதிகாரம் செலுத்தும் என் தாயைப் போன்ற பல பெண்களை நான் 'முன்னேறியவர்கள்' வரிசையில் சேர்க்கத் தயங்க மாட்டேன். இந்தக் காலத்தில் பல இளம் பெண்கள் 'I don't care', ' I can't help it' என்கிற மனோபாவத்துடன் எந்தக் குறிக்கோளும் லட்சியமுமில்லாமலிருப்பது வேதனையைத் தருகிறது.

கே: குடும்ப வாழ்க்கை, அலுவலக வாழ்க்கை இரண்டில் உங்களுக்கு பூரண திருப்தியை அளித்திருப்பது எது? இரண்டையுமே எப்படி சமாளிக்கிறீர்கள்?

ப: குடும்ப வாழ்க்கைதான்! ஆனால் எல்லாப் பெண்களுக்கும், அலுவலகமோ அல்லது வேறு ஏதாவது சாய்ஸோ இருப்பது நல்லது. ஒன்றில் சலிப்பேற்பட்டால், புத்துணர்ச்சியைப் புகுத்துவதற்கு இன்னொன்று வேண்டும்! என்னைப் பொறுத்தவரை ஆபீசில் இருக்கும்வரை நான் சீதாகுமாரி; வீட்டிற்குள் நுழைந்ததும் மிஸஸ் நீலகண்டன். அந்த வேலைகளை இங்கேயும் இந்தப் பிரச்னைகளை' அங்கேயுமாகச் சுமந்து கொண்டு குழம்புவதில்லை; இதுதான் சமாளிப்பு டெக்னிக்! கொசுறாக அனுசரணையான கணவன். பக்கத்திலேயே 'க்ரஷ்' நடத்தும் தங்கமான பெண்மணி... இவை எனக்கு வரப் பிரசாதங்களாக அமைந்தன.

கே: அயல்நாட்டிலிருந்து சில இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் இந்தியா வரப் போகின்றனவாமே?

ப: அவ்வப்போது வதந்திகள் வலுக்கின்றன. ஆனால் யார் வந்தாலும் எங்களை அசைக்க முடியாது. ஏனென்றால் எங்களைப் போன்ற ஊழலற்ற சேவை நிறுவனத்தைப் பார்க்கவே முடியாது! ●

பேட்டி: ஜெயஸ்ரீராஜ்



"வாரியத் தலைவர் ஒழிக'ன்னு கோஷம் போடறாங்களே?"

"அதுவா? கூட்டணிக் கட்சில இருந்துட்டே நம்பிக்கை ஓட்டெடுப்பு எடுக்கும்போது காலை வாரிய தலைவராம்!"

— சென்னிமலை சி.பி. செந்தில்குமார்



"எந்த நோயாளியைப் பார்த்தாலும் டாக்டர் மாடிப்படி ஏறக் கூடாதுன்றாரே... ஏன்?"

"இந்த கிளினிக்கோட மாடில இன்னொரு டாக்டர் இருக்காராம்!

— அம்பை தேவா



"நாம ஊரை விட்டு ஓடிடலாம் சாந்தி..."

"ஏன் திடீர்னு இந்த முடிவு எடுக்கறீங்க... உங்க வீட்ல பெண் பார்க்க ஆரம்பிச்சுட்டாங்களா...?"

"அட நீ வேற... சுண்டல்காரனுக்குத் தர வேண்டிய பாக்கி எக்கச்சக்கமா ஏறிடுச்சு, அதான்!"

— வி. வெங்கட்

# குதிரை சக்தி

**ஹேமா ராஜ்**



கூட்டட நெரிசல் சற்றுக் குறைவாக இருந்த அந்த புறநகர்ப் பகுதியை என் காரில் அடைந்தபோது, மணி சரியாக எட்டரை... ஊர் பெரும்பாலும் அடங்கியிருந்தது..

சசியின் பங்களா சற்று ஒதுக்குப்புறமாகவே அமைந்திருந்தது. முழு நிலவின் ஒளியில் அந்தப் பெரிய பங்களா கொஞ்சம் அமானுடமாகவே காட்சியளித்தது.

பெரிய காம்பவுண்ட் சுவர்களுக்கு இடையில் அமைந்திருந்த அந்தக் கேட்டின் அருகே காரை நிறுத்தினேன். கேட்டைத் திறந்து கொண்டு, நடைபாதையில் நடந்து முன் கதவை அணுகினேன். இடது புறமாக இருந்த சிறிய காரேஜில் அவள் கார் நின்று கொண்டிருந்தது.

மாடியுடன் கூடிய, க்ரீம் கலர் அடிக்கப்பட்டிருந்த அந்த வீட்டை முழுவதுமாக உள்வாங்கிக் கொண்டு, அழைப்பு மணியை அழுத்தினேன்...

சற்று நேர அமைதிக்குப் பிறகு, சசி கதவைத் திறந்தாள். பெரிய வயலட் நிற பூப் போட்ட நைட்டியை அணிந்திருந்த அவள் முகத்தில் கொஞ்சமாய்க் கலவரம் இருந்தது.

"வா முரளி... நீ வருவியோ மாட்டியோன்னு ஒரே டயலமா..."

"அதான் வந்திட்டேனே... ரிலாக்ஸ்...."

உள்ளே பெரிய ஹாலும், ஹாலின் ஒரு பக்க நடுவிலிருந்து மேலே மாடிக்கு பாலம் போடும் படிக்கட்டுகளுமாய், சினிமா ஷூட்டிங்கிற்கு வாடகைக்கு விட ஏற்ற மாதிரியான ஒரு அமைப்பு...

ஹாலில் இருந்த படிக்கட்டுகள் ஆரம்பித்த இடத்தைப் பார்த்தேன்... இங்குதான் பிரபாகரின் கடைசி மூச்சு பிரிந்திருக்க வேண்டும்.

அவள் மாடிப்படிகளின் வழியாக என்னை மாடியில் இருந்த அவளுடைய படுக்கை அறைக்கு அழைத்துச் சென்றாள்.

அந்தப் பெரிய அறை நிறைவாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. கண்ணை உறுத்தாத நிறங்களால் நிரப்பப் பட்டிருந்தது. ஏ.சி.யின் மெலிதான குளிர்ச்சி இதமாய் இருந்தது. ஒரு பெரிய டபுள் பெட், அறையின் பெரும் பகுதியை ஆக்ரமித்திருந்தது. அதன்

அருகிலேயே மரத்தால் செய்யப்பட்ட ஒரு ஸ்டாண்ட். அதன் மேல் அந்தக் குதிரை பொம்மை.

அதைத் தீர்க்கமாய்ப் பார்த்தேன். சற்று தொலைவில் அது வெகு இயல்பாய்த் தெரிந்தது. ஒரு பெண்ணை பயமுறுத்தக்கூடிய எந்த குணாம்சங்களும் அதனிடம் இருப்பதாய்த் தெரியவில்லை.

அதை அணுகி கையிலெடுத்தேன். முன்னங்கால்களை காற்றில் உயர்த்தி, தலையைத் தூக்கி கனைக்க முற்படுவது போல் ஒரு அற்புதமான தோற்றம்... உறுதியான அமைப்பு...

அதன் உடலில் தசை வடிவங்களும், எலும்பு மூட்டுகளும் தத்ரூபமாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன.. கால் குளம்புகளும், நேர்த்தியாய், இயல்பாய் வடிவமைக்கப்பட்டிருந்தன... பிடரியும் சற்றே நிமிர்ந்திருந்த வால் முடிகளும் காற்றிலே அலைக்கழிவது போல் ஒரு தோற்றம்.

அதன் முகபாவத்தை கூர்ந்து பார்த்தேன். வாய் சற்றே அகன்றிருக்க, பாதி தெரிந்த பற்களிடையே சற்றே புரண்ட நாக்கு.. நாசித் துவாரங்கள் விடைத்திருக்க... கண்கள்... அந்தக் கண்களில் ஒரு விநோதத்தைக் கண்டேன்.

எந்த வகையான பாவங்களையும் வெளிப்படுத்தாமல், ஆனால் அதே சமயம் ஒரு மெலிதான உயிர்ப்பையும் அவற்றிலே அதைச் செய்த கலைஞன் ஏற்படுத்தியிருந்தான்.

ஒட்டுமொத்தமாகப் பார்க்கும் பொழுது, இன்னதுதான் என்று சொல்ல முடியாத ஒரு முக பாவத்தை அந்தப் பொம்மை பெற்றிருந்தது...

நான் அதை அந்த ஸ்டாண்டின் மேலே, முன் இருந்ததைப் போலவே வைத்தேன்.

"ஏதாவது சாப்பிடறீங்களா முரளி..." என்றாள் சசி.

"எனக்கு எதுவும் வேண்டாம் சசி... நான் எழுதின மாத்திரையை வாங்கிட்டியா...."

அவள் உதட்டைப் பிதுக்கினாள்.



"சரி சசி.. பரவாயில்லை... நீ படு... நிம்மதியாத் தூங்கு... நான் இராத்திரி முழுக்க முழிச்சிக்கிட்டிருக்கேன், உனக்கு ஒண்ணும் ஆகாது. நிம்மதியாகத் தூங்கு..."

நான் படுக்கையின் அருகே ஒரு வசதியான குஷன் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டேன்.

சசி படுக்கையில் படுத்தாள். இரவு விளக்கை உயிர்ப்பித்து விட்டு, மற்ற விளக்குகளை அணைத்தாள். (விளக்குகளுக்கான ஸ்விட்சுகள் அவள் படுக்கையை ஒட்டியே அமைந்திருந்தன.)

"இந்த வெளிச்சம் போதுமா முரளி... இல்லை ட்யூப் லைட் ஏதாவது போடட்டுமா...?" போர்வைக்குள் புகுந்து கொண்டே கேட்டாள்.

''இல்லை சசி... இந்த வெளிச்சமே போதும். எல்லாப் பொருளும் தெளிவாவே தெரியுது...''

சற்று நேரம் அமைதியாய்க் கழிந்தது.

"இராத்திரி முழுகம் தூங்காம இருப்பியா முரளி..." என்றாள் திடீரென்று.

"கண்டிப்பா இருப்பேன் சசி... எனக்குப் பயிற்சி இருக்கு...''

சற்று நேர இடைவெளிக்குப் பின் நான் கேட்டேன்.

"இவ்வளவு பெரிய வீட்ல நீ மட்டும் தனியா எப்படி இருக்கே சசி..."

"அதான் அருண் வந்திடுவாரே..." என்றாள் தூக்கக் கலக்கமாய்... நான் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை... சற்று நேரத்தில் அவள் ஆழ்ந்த தூக்கத்திற்குச் சென்றதை சீராக ஏறி இறங்கும் அவள் மார்பு காட்டியது.

படுக்கையின் கால்மாட்டிற்கு சற்று தள்ளி, மர ஸ்டாண்டிற்கு அருகாமையில் நான் அமர்ந்திருந்தேன்.

அந்த மங்கிய வெளிச்சத்தில் அந்தக் குதிரை பொம்மையைப் பார்த்தவாறு இருந்தேன்... அதீதமான உடல் மற்றும் மன சக்தியை அது சித்திரிப்பதாகவே எனக்குத் தோன்றியது.

அதன் உடலில் பரவியிருந்த தசை முண்டுகள், பின்னங்கால்களில் சித்திரிக்கப் பட்டிருந்த தசைநார்களில் இருந்த டென்ஷன், உள் அடங்கிய வயிறு, ஏராளமான காற்றை உட்கொண்டு இன்னமும் அதிகமாய் விரியத் துடிப்பது போல் இருந்த மார்பு... உஷ்ணமான எண்ணங்களைக் காற்றுடன் கலந்து வீசியெறிவது போன்ற, விரிந்த நாசித் துவாரங்கள்...

என் சிந்தனைகள் கிளை கிளையாய்த் தழைத்துப் பரவி பெருக ஆரம்பித்ததை நான் பார்த்துக் கொண்டிருந்தேன்.

கிட்டத்தட்ட இந்தப் பொம்மையைப் போன்ற நிஜக் குதிரையை ஊட்டி ரேஸ் கோர்ஸில் பார்த்தது... ஊட்டியின் அந்த அருமையான ஏரி... அதே போன்ற ஏரியை உடைய ஏற்காடு... ஏற்காட்டிலேயே ஷூட்டிங் செய்யப்பட்ட ஒரு படம். அந்தப் படத்தின் கதாநாயகி... அந்தக் கதாநாயகியை வெகு அருகாமையில் நான் பார்த்த ஸ்பென்ஸர் ப்ளாஸா... ஸ்பென்ஸர் ப்ளாசாவில் அந்த ஃபான்ஸி கடையின் ரிசப்ஷனிஸ்ட்... அவளின் அந்தக் கடிதார்... அதைப் போன்ற, ஆனால் வேறு வண்ணங்களில் இருந்த கடிதாரை அணிந்திருந்த எதிர் வீட்டுப் பெண்... அவளுடன் ஓடி வரும் சிறு குரைத்தல்களுடன் கூடிய பாமரேனியன். நான் பார்த்த ஒரு வெறிநாய்க் கடி கேஸ்... அவனின் பயங்கரமான ஆர்ப்பாட்டங்கள்... அவன் மனைவியின் அடர்த்தியான சோகம்...

இந்தச் சிந்தனைப் பின்னலிலிருந்து அந்த ஓலம்தான் என்னை மீட்டது. திடுக்கிட்டுப் பார்த்தேன். படுக்கையிலே சசி உருண்டு புரண்டு கொண்டிருந்தாள். அரைகுறை இருட்டில் அவள் கைகள் அவள் மார்புக்கு முன்னால் எதையோ பற்றியவாறு அதைப் புறந்தள்ள முயற்சி செய்து கொண்டிருந்தது புரிந்தது. நான் திகிலாய் குதிரைப் பொம்மை இருந்த மர ஸ்டாண்டைப் பார்த்தேன். அங்கே அதைக் காணவில்லை.

பிறகுதான் என்னை நினைவிற்கு இட்டு வந்த அந்த ஓலத்தை உணர்ந்தேன். சந்தேகமில்லாமல் அது சசியினுடையது தான். "ஓ...ஓ...ஓ...ஓ..." என்று இடைவெளி இல்லாமல் ஆனால் நிறைய ஏற்ற இறக்கங்களுடன் அவளிடம் இருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.

நான் ஒருகண திகைப்பிற்குப் பிறகு இயங்கத் தொடங்கினேன். அவளை நெருங்கி, மாறி மாறி உருண்டு கொண்டிருந்த அவள் தோள்களைப் பற்ற முயற்சி செய்தேன். "சசி... சசி..." என்று கத்தினேன்.

ஆனால் அவள் ஒரு ரோடு ரோலரைப் போல இயங்கிக் கொண்டிருந்தாள்... அவளை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. மிக அதீதமாக உணர்ச்சிவயப் பட்டிருந்த அவள் மனத்தின் சக்தியை, அவள் உடல் அப்படியே வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. அந்தச் சக்தியின் முன் என் கை பலம் ஒரு பொருட்டே அல்ல என்று தோன்றியது. அடுத்ததாக சுவரில் பதிக்கப் பட்டிருந்த ஸ்விட்சுகளை தேடினேன். அரை இருட்டில் அவை மென்மையாகத் தெரிந்தன.

அவற்றை இயக்குவதற்காக நான் முயன்ற போது, சசி படுக்கையின் வெளிப்புறமாக உருண்டு விழுந்ததை உணர்ந்தேன். நான் மின் இணைப்புகளை இயக்கியதும் ஒளி வெள்ளம் பாய்ந்தது. கூரென்று கூசிய கண்களை சுருக்கிக் கொண்டேன்.

சசி விழுந்த இடத்தைக் கட்டிலின் ஒரு பகுதி மறைத்துக் கொண்டிருந்தாலும்,

அவள் இன்னமும் போராடிக் கொண்டிருப்பது எனக்குப் புரிந்தது. திடீரென்று ஒரு 'ஹூம்...' சத்தம் கேட்டது.

அந்தக் குதிரை பொம்மை கட்டிலுக்கு அப்பால் இருந்து, தூக்கி எறியப்பட்டு, உயரக் கிளம்பி, ஒரு இயல்பான ஆர்க் வடிவில் திரும்பி, பெட்ரூமின் மையத்தில் போய் விழுந்து, ஓரிரு முறை உருண்டு பின் சலனமற்றுக் கிடந்தது.

நான் கட்டிலுக்கு அப்பால் எட்டிப் பார்த்தேன். சசி துவண்டு, தளர்ந்து போய் அரை மயக்கமாய்க் கிடந்தாள். அவள் கண்கள் அரைச் செருகலாய் இருந்தன. அவள் மூச்சு கடினமாகவும், பிரயாசையுடனும் இருந்தது.

அவளைச் சிரமப்பட்டு கட்டிலில் கிடத்தினேன். தண்ணீர் ஜக்கிலிருந்து தண்ணீரை எடுத்து அவள் முகத்தில் தெளித்தேன்.

மெல்ல மெல்ல அவள் நிஜத்திற்கு வந்தாள். திடீரென்று திகிலுடன் எழுந்து உட்கார்ந்தாள். "எங்க அது... எங்க அது..." என்று பதறினாள். நான் ரூமின் நடுவில் சலனமற்றுக் கிடந்த அதைச் சுட்டிக்காட்டி விட்டுக் கேட்டேன்.

"என்னாச்சு சசி..."

அவள் எரிப்பது போல என்னைப் பார்த்தாள்.

"என்னாச்சா... என்னைக் கேக்கறியா நீ... நீ என்ன பண்ணிக்கிட்டிருந்தே தூங்கிட்டியா.. கடவுளே... உன்னை நம்பினேன்... கடவுளே..."

அவள் அழத் தொடங்கினாள். நான் அவள் தோளைத் தொட்டேன்.

"சொல்லு சசி... என்னாச்சு...."

"நீ என்ன பண்ணினே... தூங்கிட்டியா..."

"இல்ல சசி... நான் தூங்கலே... ஆனா கொஞ்சம் கவனக்குறைவாய் இருந்துட்டேன். ஐ'ஆம் ஸாரி."

அவள் மௌனமாய் இருந்தாள்.

"சொல்லு சசி... என்ன நடந்தது...."

"நல்லாத்தான் தூங்கிட்டிருந்தேன். ஆனா திடீர்னு நெஞ்சில ஒரு பாரம். அதுதான் என்னை எழுப்பியிருக்கணும். விழிப்பு வந்ததும் அதை நான் பார்த்தேன். என் நெஞ்சு மேல அது நின்னுக்கிட்டிருந்தது. அப்புறம் அப்புறம்... என் கழுத்துக்கா அது வந்தது... நான் அதைப் புடிச்சேன். புடிச்சி தள்ளப் பார்த்தேன்... முடியலை... கையெல்லாம் எரிஞ்சது... அப்புறம்... அப்புறம்... பலத்தையெல்லாம் சேர்த்து ஒரே தள்ளா தள்ளிட்டேன். கடவுளே எனக்கு இப்படி ஒரு நிலையா...."




அழத் துவங்கிய அவள் சற்று நேரத்தில் தலைநிமிர்ந்தாள். அவள் முகத்தில் ஒரு தீர்மானம் தெரிய அந்தப் பொம்மையை வெறித்தாள்.

"ஆமா... இந்தப் பிசாசை தூக்கி எறியப் போறேன். கடல்ல தூக்கி எறியப் போறேன். வேற வழியே இல்லை..." அவள் எழுந்தாள். நான் தடுத்தேன்.

"அவசரப்படாதே சசி..."

"விடுடா என்னை..." என்னைப் பார்த்துச் சீறினாள்.

"உனக்கு என்ன தெரியும் அதப் பத்தி... நீ ஒரு படிச்ச முட்டாள்... அதை நான் எறியப் போறேன். விடு என்னை..."

"கொஞ்சம் பொறு சசி... கார்த்தால அதை டிஸ்போஸ் செஞ்சிடலாம். இந்த இராத்திரி நேரத்துல வேண்டாம்..."

"முடியாது... இப்போ... இப்பவே அதை எறியணும். கார்த்தால வரைக்கும் அது என்னை விட்டு வச்சிருக்காது..."

"நான்சென்ஸ்..."

"எதுடா நான்சென்ஸ்... நீதாண்டா நான்சென்ஸ்... உன் அறிவுதாண்டா நான்சென்ஸ்... அது என்னைக் கொல்ல வந்ததைப் பார்க்கலை... உனக்கு அது கூட புரியலையா...." அவள் இன்னமும் கத்திக் கொண்டிருந்தாள்...

(தொடரும்)

பாராளுமன்றத்தின் ராஜ்ய சபைத் துணைத் தலைவராக நான்காம் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் நஜ்மா ஹெப்துல்லா. அவர் ஒரு கலர்ஃபுல் பர்சனாலிடி. மௌலானா அபுல் கலாம் ஆசாதின் குடும்பத்தைச் சேர்ந்த இவர், இந்திரா காந்தி குடும்பத்துக்கு நெருக்கமானவர். இவரது பயோடேட்டாவைப் பார்த்தால், இவர் போகாத நாடுகளே இல்லை என்று சொல்லும் அளவுக்கு, உலகம் சுற்றியவர் என்பது புலப்படும்.

"ராஜ்யசபை உறுப்பினர்கள் அனைவருக்கும், அயல்நாடுகளுக்குச் சென்று, சுற்றிப் பார்த்து வர, வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும்.

# நான்காம் முறையாக நஜ்மா ஹெப்துல்லா!



ஆனால், ராஜ்ய சபை துணைத் தலைவராக இருக்கும் நீங்கள், அத்தகைய வாய்ப்புகளைக் குறைத்துக் கொண்டால்தான், அது சாத்தியம்'' என்று ஒரு தடவை ராஜ்ய சபையிலேயே அ.தி.மு.க. உறுப்பினராக இருந்த ஜி. சுவாமிநாதன் குறிப்பிட்டிருக்கிறார்.

"நான் ராஜ்யசபை உறுப்பினராக இருந்த பீரியடில் (1972-78) அந்த சபை அறிவு ஜீவிகளின் சபையாக இருந்தது. அனுபவம் மிகுந்த அரசியல்வாதிகள் அவையாக இருந்தது. விவாதங்களிலே ஒருவித மெச்சூரிடி, பொதுநல நோக்கம் இருந்தது. இப்போது அதெல்லாம் பழங்கதையாகி விட்டது வருத்தமான விஷயம். எனவே, முன்னை விட இப்போது ராஜ்ய சபையை நடத்திச் செல்ல மிகுந்த பொறுமையும், அசாத்திய திறமையும் தேவை. அந்தப் பணியை நஜ்மா மிகத் திறமையாகச் செய்து வருகிறார்; அவரது நகைச்சுவை உணர்வு பாராட்டுக்குரியது!'' என்கிறார் முன்னாள் தமிழக அமைச்சர் கே. ஏ. கிருஷ்ணசாமி.

கே. ஆர். நாராயணன், துணை ஜனாதிபதியாக இருந்த போது, ராஜ்ய சபையில் கேள்வி நேரத்தின் போது, சுமார் ஒரு மணி நேரம் இருந்து விட்டுப் புறப்பட்டு விடுவார். அதன் பின் நஜ்மாவின் ராஜ்ஜியம்தான்! கண்டிக்கும் போது கூட, மென்மையாக இருப்பது இவரது பழக்கம். 'ப்ளீஸ்!' இதுதான் நஜ்மா அதிகமாகப் பயன்படுத்தும் வார்த்தை!

இவருடைய நகைச்சுவை உணர்வுதான் இவருக்குப் பெரிய பலம். டென்ஷனான பல சமயங்களில் அவையை சகஜ நிலைமைக்குக் கொண்டு வர, இவர் பயன்படுத்தும் அஸ்திரம் நகைச்சுவைதான்! அரசியல் கட்சி உறுப்பினர்களுக்கு, பாராளுமன்றத்துக்குள்ளே தம் கருத்துக்களை வெளியிட ஜனநாயக மரபுப்படி உரிமை உண்டு என்றாலும் அது ஒருசில வரைமுறைகளுக்குட்பட்டே இருக்க வேண்டும். அந்த எல்லையை எம்.பி.க்கள் மீறுகிற போது தான் இவருக்கு வேலை!

பல சமயங்களில், ஓர் உறுப்பினர் ஏதாவது சொல்ல, இன்னொருவர் அதற்கு ஆட்சேபணை எழுப்பி, சம்பந்தப்பட்ட உறுப்பினர் 'மன்னிப்புக் கேட்டால் தான் ஆச்சு!' என்று அடம் பிடிக்க, அவரோ மறுக்க, ஏகப்பட்ட குழப்பமும், கூச்சலும் ஏற்படும். அது போன்ற சமயங்களில், நஜ்மா துளியும் ஈகோ பார்க்காமல், 'குறிப்பிட்ட உறுப்பினரின் சார்பாக நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன்; சபை நடவடிக்கைகள், இனி, இடையூறு இன்றித் தொடரட்டும்' என்று சமாளிப்பது ஒரு தனி ஸ்டைல்!

ஒரு தடவை, ராஜ்ய சபாவில் சென்னையில் மீனவர்கள் மீது நடத்தப்பட்ட துப்பாக்கிச் சூடு பற்றி ஓர் எம்.பி. பேசிக் கொண்டிருந்த போது, இன்னொரு எம்.பி. எழுந்து, ஏதோ பதில் சொல்ல, வாக்குவாதம் வளர்ந்து உச்சத்தை அடைந்தது. நிலைமை சூடாவதை உணர்ந்த நஜ்மா, 'சென்னையில் என்ன நிலைமை என்பதை இங்கே உங்கள் இருவருக்குமிடையே நடக்கிற மோதலை வைத்தே என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. எனவே, இனியும் சண்டை போட்டு, விஷயத்தை விளக்க வேண்டிய அவசியமில்லை!' என்று அமைதிப்படுத்தியதும், அவையில் சிரிப்பலை எழுந்தது. ●

— கௌதம்







# ருசி ஊறுகாய்கள் வீட்டில் செய்த சுவை போல

**RUCHI AGRO PRODUCTS PRIVATE LIMITED**

50, GIRIAPPA ROAD, CHENNAI - 600 017. PH. 8269290, 8269438, 8241348

---

# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

## குணு கூந்தல் தைலம்

**குணு கூந்தல் தைலம்**

உபயோகிப்பதன் மூலம்

- தலைமயிர் நீண்டு, கறுத்து, அடர்த்தியாய் வளரும்
- தலைமயிர் உதிர்தல், செம்பட்டை நிறம், இளம் பித்த நரை, தலை அரிப்பு, பொடுகு, சொரிந்தால் செதில் உதிர்தல் குணமாகும்.
- ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் ஏற்றது

இயற்கை தரும் அதி உன்னத மூலிகைகளால் சித்த மருத்துவ முறையில் தயாரிக்கப்பட்டது.



இப்பொழுது 100 ml, 200 ml Packing-களில் கிடைக்கின்றது.

வியாபார விசாரணைகளுக்கு கீழ்காணும் முகவரிக்கு தொடர்பு கொள்ளவும்

விபரங்களுக்கு



*Agasthiar Pharmaceuticals*

P.B.No. 588, Salem - 636 005.

இப்போது எல்லா மளிகை, மருந்து மற்றும் ஜெனரல் ஸ்டோர் கடைகளிலும் கிடைக்கிறது

## தமிழக காங்கிரஸ்:

# தலைமை மாறினாலும் தலைவலி தீராது!

ஜெயலலிதா போக்கினால் கலங்கிக் கொண்டிருக்கும் தேசிய மற்றும் தமிழ்நாட்டு பாலிடிக்ஸை தன் பங்குக்குக் கொஞ்சம் கலக்கியிருக்கிறது காங்கிரஸ் தலைமை.

"தங்கபாலுவுக்கு கல்தா கொடுத்தால் அடுத்து யார்?" என்ற கேள்விக்குப் பதிலாக, குமரி அனந்தன், பிரபு, அன்பரசு, திண்டிவனம் ராமமூர்த்தி என்று பெயர்கள் அடிபட்டுக் கொண்டிருக்க, தலைவியின் கரிசனத்துக்கு ஆளாகும் பாக்கியம் திண்டிவனத்துக்குக் கிடைத்திருக்கிறது. "எங்க ஐயோவோட முழு சிபாரிசின் பேரில்தான் திண்டிவனத்துக்கு இந்த வாய்ப்பு வந்திருக்கிறது!" என்று நம்மிடம் சொன்னார் பிரபுவின் அணுக்கத் தொண்டர் ஒருவர்.

**தலைவர் பதவியிலிருந்து தம்மைத் தூக்கக் கூடாது என்பதற்காக பல வழிமுறைகளைத் தங்கபாலு கையாண்டாலும், ஒரு மாதத்துக்கு முன்னரே அவரிடமிருந்து ராஜினாமா கடிதம் வற்புறுத்திப் பெறப்பட்டதாம்.**

தொழிலதிபரான பிரபுவால் தலைவர் பதவியைப் பெற முடியும் என்றாலும் "முழு நேர அரசியல்வாதியாகத் தம்மால் நேரத்தை ஒதுக்க முடியாது'' என்பதால்தான் திண்டிவனத்துக்கு சிபாரிசு செய்து விட்டாராம் பிரபு! "இனி புதிய பாதையில் எழுச்சியுடன் தமிழக காங்கிரஸ் செயல்படும்'' என்கிறார் பிரபுவின் வலது கரமான கோ. கலிவரதன். ராஜேஷ் பைலட்டும், ஷரத் பவாரும் குமரிக்கு அழுத்தமாக சிபாரிசு செய்தும் பயனில்லாமல் போய் விட்டதாம். அன்பரசு முழு மூச்சுடன் மோதவில்லையாம்.

''என்னுடைய தகுதிகளையெல்லாம் சொல்லி நானும் முயற்சி செய்தேன் என்பதைச் சொல்ல எனக்கு வெட்கமில்லை. சோனியா அவர்கள் தலைவியாக இருக்கும் இந்தத் தருணத்தில் எனக்கு மாநிலத் தலைமை கிடைத்தது மிக்க மகிழ்ச்சியைக் கொடுக்கிறது'' என்று நம்மிடம் சொன்னார் திண்டிவனம். கருணாகரன், அர்ஜுன் சிங், மணிசங்கர் அய்யர் ஆகியோர் ஸ்ட்ராங்காக திண்டிவனத்துக்கு சிபாரிசு செய்தார்களாம்.


• தங்கபாலு

தலைவர் போட்டியில் தோற்றாலும் அன்பரசுக்கு மனவருத்தம் இல்லை. ''தங்கபாலுவைவிட ஆயிரம் மடங்கு உயர்ந்தவர் திண்டிவனம்!'' என்கிறார் அன்பரசு.

'உட்கட்சித் தேர்தலில்' வென்ற தலைவராகத் தங்கபாலு இருந்தாலும், கடந்த பாராளுமன்றத் தேர்தலில், வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பது, செலவுக்குப் பணம் கொடுப்பது போன்றவற்றால் அவர் செய்த குளறுபடிகள் காரணமாக எல்லா

கோஷ்டிகளும் வரிந்து கட்டிக் கொண்டு நின்றன. உச்ச கட்டமாக தேர்தலில் அடைந்த மோசமான தோல்வி, அவரது பதவிக்கு வந்த ஆபத்தை துரிதப்படுத்தியது. மூப்பனாருடன் ரொம்பவும் "குழைந்து" செயல்படுவதாகவும் மேலிடத்துக்குப் புகார் போயிற்று. இது தவிர முக்கியமாக சத்திய மூர்த்தி பவன் விவகாரத்தில் கோர்ட்டு மூலம் நடவடிக்கை எடுத்து அதை த.மா.



• திண்டிவனம் ராமமூர்த்தி

காவிடமிருந்து மீட்க வேண்டும் என்ற காங்கிரஸ் மேலிடத்தின் விருப்பத்தைக் கொஞ்சமும் சட்டை செய்யாமல் இருந்தாராம் தங்கபாலு.

கல்கத்தா காங்கிரஸ் மாநாட்டின் போது, தங்கபாலு அருகில் இருக்கும்போதே சோனியாவிடம் அவரைப் பற்றி கடுமை யான சொற்களில் புகார் சொல்லப்பட்ட தாம். தலைவர் பதவியிலிருந்து தம்மைத் தூக்கக் கூடாது என்பதற்காகப் பல வழி முறைகளைத் தங்கபாலு கையாண்டாலும், ஒரு மாதத்துக்கு முன்னரே அவரிடமிருந்து ராஜினாமா கடிதம் வற்புறுத்திப் பெறப் பட்டதாம். போதாததற்கு எம்.ஜி.ஆர். அ.தி.மு.க. திருநாவுக்கரசு தங்கபாலுவைப் பற்றி ஒரு மூட்டை புகார்களை சோனியா விடம் கொடுத்திருக்கிறாராம்.

**தலைவர் போட்டியில் தோற்றாலும் அன்பரசுக்கு மனவருத்தம் இல்லை. "தங்கபாலுவைவிட ஆயிரம் மடங்கு உயர்ந்தவர் திண்டிவனம்!" என்கிறார் அன்பரசு.**

தங்கபாலுவை மாற்றி திண்டிவனத்தை நியமித்தது பல செய்திகளைச் சொல்கிறது. மூப்பனார் இணைந்து செயல்பட விருப்பம் தெரிவித்தாலும், காங்கிரஸ் தலைமை அதை ஏற்றுக் கொள்ளும் நிலையில் இல்லை. சிறிது நாட்கள் முன்னர் சோனியா அவர்கள் மிகத் தெளிவாகவே "இணைந்து" செயல்படுவது வேண்டாம். மீண்டும் முழுவதுமாகக் காங்கிரஸில் இணைந்து விடுங்கள்" என்று மூப்பனாரிடம் தெளி வாகவே சொல்லி விட்டார். ஆனால் த.மா.கா தலைவர்கள் இதை ஏற்கத் தயாரா யில்லாததால் மூப்பனார் தடுமாறிக் கொண் டிருக்கிறார்.

"தமிழ் நாட்டில் இரண்டு காங்கிரஸ் செயல்படுவதை சோனியா விரும்ப வில்லை. ஒரு காலத்தில் மூப்பனாரின் அத்யந்த சிஷ்யராக இருந்தாலும் தற்போது அவரை கடுமையான எதிரியாகக் கருதும் திண்டிவனத்தைத் தலைவராக நியமித்ததன் மூலம், மூப்பனாரை சங்கடப்படுத்தியிருக் கிறார் சோனியா. இனி த.மா.கா தலைவர் கள் ஒவ்வொருவராக காங்கிரஸுக்குத் திரும்பப் போகிறார்கள். மூப்பனார் சற்றும் தாமதிக்காமல் காங்கிரஸில் இணைந்து விட வேண்டும். இல்லையேல் த.மா.கா. தன் னாலே கரைந்து விடும்!" என்று எச்சரித்தார் காங்கிரஸ் மேலிட அணுகு முறைகளைப் பற்றித் தெரிந்து கொள்ளும் நிலையிலுள்ள தமிழக காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

நீண்ட அரசியல் அனுபவம் பெற்றவர் திண்டிவனம். ராஜாஜி, காமராஜ் ஆகியோரின் வழியொட்டி நடப்பவர். "பிரிந்து போன காங்கிரஸாரை மீண்டும் கொண்டு வந்து சேர்ப்பது தான் என் முதல்



''எதுக்கு உன்னைவிட பத்து வயசு பெரிய பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறே?''

''நாளைக்கு அடங்கிப் போக நேரும்போது. வயசுக்கு மரியாதை கொடுக்கிறேன்'னு சொல்லிவிடலாம் பாரு!''

– வெ. ராஜாராமன்



''உணர்ச்சி ததும்பும்படியா உங்களுக்குக் காதல் கதை எழுத வருதே... எப்படி?''

''கொஞ்சநாள் பீச்சில் சுண்டல் வித்துக்கிட்டிருந்தேன்!''

– கே. அனிதா




'''பஸ்ஸில் இருந்து இறங்கிய அவர், 'கண்டக்டர் வாழ்க, கண்டக்டர் வாழ்க!'ன்னு கத்திண்டு போறாரே!''

''பாக்கிச் சில்லரை 'பத்துப் பைசா'வை மறக்காம கொடுத்திட்டாராம்!''

– எஸ்.என். மாடசாமி

பணி!'' என்று சொன்ன திண்டிவனத்திடம் மூப்பனாரின் 'இணைந்து செயல்படும்' யோசனை பற்றி நாம் கேட்டபோது சிரித்துக் கொண்டே சமாளித்து விட்டார்.

''தமிழ்நாடு காங்கிரஸின் தலைவிதி அல்லது தலைவலி என்னவென்றால், ஒரு தலைவரை மாற்றும் வரையில் மற்ற கோஷ்டியினர் ஒன்றாக இருப்பார்கள். புதிய தலைவர் நியமிக்கப்பட்ட சில காலத்துக்குப் பின்னர் பல்வேறு அதிருப்திகளின் காரணமாக பழைய தலைவர் செயல்பட, மீண்டும் அனைத்துக் கோஷ்டிகளும் உயிர் பெற்று மோதிக் கொள்ளத் துவங்கும்!'' என்கிறார் காங்கிரஸில் விவகாரங்களை கவனித்து வரும் மூத்த பத்திரிகையாளர் ஒருவர்.

வெளியேற்றப்பட்ட தலைவரான தங்கபாலு "புதிய தலைவருக்கு என் ஒத்துழைப்பு உண்டு!'' என்று சொன்னாலும் தமது ஆதரவாளர்களோடு கட்டுக் கோப்பாக இருக்க முடிவு செய்திருக்கிறார் என்கிறது ஒரு தகவல். தாம் டில்லியிருந்து பதவியை இழந்து சென்னை திரும்பும் முன்னர் அவரது ஆதரவாளர்களான மாவட்டத் தலைவர்களுக்கு போன் செய்து விமான நிலையத்துக்கு ஆட்களைத் திரட்டி வரச் சொல்லியிருக்கிறார் தங்கபாலு. "தமக்கும் ஒரு செல்வாக்கு இருக்கிறது என்பதை தலைமைக்கு தெரிவிக்கத் தானே இந்த ஏற்பாடு!'' என்று கேட்கிறார் திண்டிவனத்தாரின் தோழர் ஒருவர்.

இதற்கிடையில் திண்டிவனத்தாரின் பார்வை நம்மீது திரும்பாதா என்று தங்கபாலு கோஷ்டி ஏங்கத் துவங்கியிருக்கிறது. "அவரால் (தங்கபாலு) எங்களுக்கு ஒரு பயனும் இல்லை. பொறுப்புகளுக்கு ஆட்களை நியமிக்கும் போது எங்களையும் திண்டிவனம் கண்டு கொள்ள வேண்டும்'' என்று வேண்டுகோள் வைக்கிறார் தங்கபாலுவின் நெருங்கிய சகா ஒருவர்.

— தில்லப்பா

1. மாபலம் பொருந்திய வாயுக் கோளம்.

2. சூறைக் காற்றாய்ச் சுழன்று சென்ற இக் கோளத்தின் சுழல் குணத்தால் உள்ளே ஈர்க்கப்படும் பிறவாயுக்கள்.

3. ஒளி வீசிப் பிறக்கும் சூரியன்.

4 இவ்வாயுக் கோளத்திலிருந்து பிய்ந்து சென்று, தத்தம் சுற்றுப்பாதை அமைத்து இயக்கம் தொடங்கிய, ஆரம்ப கால வடிவம் முற்றுப் பெறாத கோள்கள்.

5 இன்றைய, நம், சூரியக் கோள் மண்டலம்.




நாஸா சுடச்சுட வெளியிட்டுள்ள – உலகம் முழுவதும் இன்று பேசப்பட்டுக் கொண்டிருக்கும் விஷயம், புதுச் சூரியனும் புது பூமியும் பிறந்துள்ள விஷயம்தான்.

# பிறந்து விட்டது புதுச் சூரியன்; புது பூமி!

*கடந்த காலம்... 4,500 மில்லியன் வருடங்களுக்கு முன்பு, அதற்கும் முன் கிட்டத்தட்ட 15000 மில்லியன் வருடங்களுக்கு*

முன்பு உருவாகியிருந்த அண்ட சராசரத்தில், அளவிட முடியாத பன்னாயிரங்கோடி கிலோ மீட்டர் விட்டத்தோடு, எஃகு பலம் கொண்ட வாயுக் கோளமொன்று உருவாகி சூறைக்காற் றாய் சுழன்றடித்தது! அது முன்னேறிய போது, தன் சுழல் குணத்தால் வெளியிலிருந்த இன்ன பிற வாயுக்களையும் கிரகித்துக் கொள்ள, ஒரு கட்டத்தில், சுழலின் 'கண்' என்கிற மையத்தில் அவை குழுமின.

இவ்வாயுக்களனைத்தும், தங்களிடையே ஏற்பட்ட அபரிமித உராய்வின் போது உண் டான உஷ்ணத்தால் இளகி, ப்ளாஸ்மா என்ற தோற்றமடைந்தன. வெப்பமும் கூடிக் கொண்டே போக, அப்போது, அந்த மையத் தில், நெருப்பாகவே ஒரு நட்சத்திரம் தனியாய் அவிழ்ந்து போய் நின்றது. நிலைத்தது. அதுவே சூரியன். சூரியனை மையமாய்க் கொண்ட இச் சுழலை சுற்றியியங்கிய பல தூசுத் தட்டுகளுமே காலப்போக்கில் இன்று நாம் காணும் கோள் மண்டலமாயின.

புத்தம் புதிதாய் பூமி உருவான இந்த நிகழ்ச் சியை ஆங்கிலத்தில் Big Bang theory என்பார் கள். 4500 மில்லியன் வருடங்களுக்கு பிறகு இன்று அது மீண்டும் நிகழ்ந்துள்ளது!

**கா**மா கதிர் வெடிப்பு (Gamma Ray Burst - GRB) தினந்தோறும் வான ஆழத்தில் நிகழ்ந்து கொண்டேயிருக்கும் மாபெரும் சீற்றமாகும். பல தொடர் அணுகுண்டுகள் வெடித்து உருவாகும் சக்தி போல இன்னும் பல்லாயிரம் மடங்கு சக்தியினை வெளியிடும் பிரளயம் இது. நொடி யின் சில பாகங்கள் மட்டுமே உயிர் வாழும் சீற்றமிது. ஆகவே, இதனைப் படம் பிடித்துப் பார்ப்பதென்பது கஷ்டம்! ஒரு நொடியின் பின்ன அளவிலான தன் ஆயுளையும் கடந்து, ஒரு GRB தலைதூக்கும் போதுதான் மேற் சொன்னது போல ஒரு சூரியக் குடும்பம் சாத்தியமாகின்றது; பின் அதுவே சாஸ்வதமா கின்றது! நம் சூரிய மண்டலத்தை நாலரை பில்லியன் வருடங்களுக்கு முன்பு உருவாக்கிய GRB போல 1997 வரை நிகழ்ந்ததேயில்லை. ஆனால் 1997-ல்....

**இ**ன்னும் துரித காலத்தில் சர்வ வல் லமை வாய்ந்த GRB வெடிப்புக்குச் சாத்தியக் கூறுகள் தென்பட, மார்ச் '97ல் தேடுதல் வேட்டை துவங்கியது. உலகின் உயரமான ஹவாய் நகரிலிருந்து தொலைநோக்கி மூலம் - விண்ணின் இண்டு இடுக்கெல்லாம், சந்து பொந்தெல்லாம், 24 மணி நேரமும் - அந்த புதிய சூரிய குடும்பப் பிரசவத்தின் தரிசனம் தேடப்பட்டது.

அட்சர சுத்தமாய் GRB 971214 என்று பெய ரிடப்பட்டுள்ள காமா கதிர் வெடிப்பின் காட்சி, டிசம்பர் '97ல் கிட்டியது. அண்ட சரா சரம் முழுவதுமுள்ள கோள்கள், நட்சத்திரங்கள் இத்யாதிகளின் ஒட்டு மொத்த வெளிச்சத்தை விட (மெகா வெளிச்சம் கொண்ட வெடிப் பாய் விஸ்வரூபம் காட்டியது, இது...!

உலக அணுகுண்டுகள் அனைத்தையும் ஒரே நேரத்தில் சேர்த்துப் போட்டு வெடித் தால் உருவாகும் சக்தியானது, ஒரு நொடியில் சூரியன் வெளியிடும் சக்தியின் லட்சத்தில் ஒரு பங்காகும்; ஆனால் தனக்குள்ள பத்து பில்லியன் வருட ஆயுளின் முடிவில் நம் சூரியன் வெளியிட்டு முடிக்கும் மொத்த சக்தியானது, இந்த GRB 971214 வெடிச் சக்தி யின் 1 சதமாக மட்டுமேயிருக்கும்... ஈஸ்வரா...!

**GRB** வெடிப்பு சில நொடிகளில் பூரண மானதும், ஒளியின் வேகத்தோடு, நியூட்ரான், எலக்ட்ரான் ஆகிய அயனிகள் சீறிச் சுழன்று பாயும்; ஓரிரு நாட்கள் கழிந்ததும் சுழல் உராய்வு சூட்டால் இவை இளகி வாயுக்களா கவும் துகள்களாகவும் உருமாறும்; க்ளை மாக்ஸில், புற ஊதா - எக்ஸ் கதிர்கள் உருவாகி பின்பு கண்ணுக்குப் புலப்படும் ஒளி நிலை பெறும். இதுவே சூரியன். இக்கட்டமே இவ் வியக்கத்தின் முடிவு.

971214 வெடித்த மறுநாள், அது வெடித்த இடத்தில், கண்ணுக்குப் புலப்பட்டது - பிர காச ஒளி! இதுவே புதுச் சூரியன்! அதனைச் சுற்றி, வெடிப்பின் சீற்றத்தில் உருவான தூசுக் கூட்டங்கள், கும்பல் கும்பலாக, நீள் வட்டப் பாதையில் சுழலத் தொடங்கியுள்ளன; புதுக் கோள் மண்டல உதயம்...! கனவில் கூட கிட் டாத - கற்பனையென்றெண்ணப்பட்ட வொன்று இதோ உருவாகியுள்ளது! சத்தியமாய்!

**ந**ம் சூரியக் கோள் மண்டலம் தவிர வேறொன்றுமில்லை என்ற ஸ்தானம் போய் விட்டது. அன்று, இதே போன்ற சீற்றத் தூண்டு தலால் உருவான நம் சூரியக் கோள் மண்டலத் தில், நாகரிக மனிதன், இதோ, ஓரிரு மில்லியன் வருடங்களுக்கு முன்தான், பூமியில் பிரத்யட்ச மானான். கால ஓட்டத்தில், நிகழ்ந்துள்ள இந்த இரண்டாவது Big Bang காரணமாக பூமி உரு வாகி அதில் வேறு இனம் அல்லது மனிதனே தோன்றி விடலாம்... கடந்த காலம் கற்றுத் தந்த பாடம் இதுதான். எல்லாம், just a matter of time....!! ●

— கொரட்டூர் ஸ்ரீனிவாஸ்

# புதுப்பார்வை



மனித மந்தையிலா
இடம்தேடி அலைந்ததுண்டா

பழத்தோட்ட நிழல் பார்த்துப்
பசிதீர அமர்ந்ததுண்டா

தன்னைத்தான் தன்முன்னே
கொண்டுவர முயன்றதுண்டா

நேருக்கு நேர் நிறுத்தி
நிசம்பேசிக் களித்ததுண்டா

நிறைகுறையைக் கூறுகட்டி
நேர் செய்து பார்த்ததுண்டா

தவறுணர்ந்து தனை மறந்து
அழுதழுது துவண்டதுண்டா

சரியறிந்து தலை நிமிர்ந்து
நிலையுயர எழுந்ததுண்டா

விலங்கினின்றும் விலகி வர
விருப்போடு முயன்றதுண்டா

உள்ளுறை தெய்வத்தை
உணர்ந்தறிய வாய்த்ததுண்டா

மனம்விட்டு மனந்தொட்டு
மகிழ்ச்சிக்கரை தொட்டதுண்டா

மனிதர் நாம் மனிதரெனும்
மகத்துவத்தை உணர்ந்ததுண்டா

புனிதமிந்தப் பிறவியெனும்
புதுப்பார்வை பெற்றதுண்டா?

— ம. திருவள்ளுவர்

# காதல் கனவுகள்

**வ**ழக்கம் போல வருடா வருடம் ஆகஸ்ட் அல்லது செப்டெம்பரில் புது அப்பரெண்டிஸ்கள் டிப்ளமா படித்த கம்ப்யூட்டர் பயிற்சி யாளர்கள் நியமிக்கப் படுவார்கள்.

பொதுவாக வள்ளி யூர் அல்லது மீன் கருட்டி பக்கத்தில் இருந்து வந்த, அலு வலகத்தை வாய் பிளந்து பார்க்கிற கிராமத்து அத்தியாயங்களாகவே நிறைய பேர் இருப்பார்கள்.

சில நாட்களில் ஆர்வமாக இயந்திரத்தை இயக்கப் பழகி அன்புடன் பேச ஆரம்பித்து விடுவார்கள்.

இந்தத் தடவை விதிவிலக் காக மதுரையில் இருந்து மனீஷா கொய்ராலா ஜாடையில் மதுமிதா என்ற பெண் வெள்ளை நிற தேவதையாய் சிவப்பு நிற உடை பறக்க, படபடக்கும் விழிகளுடன் கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு



# நா. நாகராஜன்

உள்ளே நுழைந்ததும் உயர் அதிகாரியிலிருந்து உட்காரச் சொல்லும் பியூன் வரை உலகத்தை மறந்து போனார்கள்.

தேவராஜன் தான் முதலில் தன் நிலைக்குத் திரும்பி, "பார்ட்டி டக்கர் இல்லே..." என்றான்.

"நிஜமாவே அழகுதான்..." என்றார் சீனியர் ஆபரேட்டர்.

அவர் வயதுக்கு அதுதான் சொல்ல முடியும்.

என் பக்கத்து சீட் ஒதுக்கப்பட்டதும் வேலையை என்னிடம் கற்றுக் கொள்ளச் சொன்னதும் பலருக்கு எரிச்சலை ஏற்படுத்தியிருக்கும்.

முக்கியமாக தேவாவுக்கு.

செக்ஷனில் அவன்தான் பணக்கார வீட்டுப் பிள்ளை.

விதவிதமான உடைகள் காலணிகள், பிரேஸ்லெட்டுகள் என்று அசத்துவான்.

புதிதாக வந்த எந்த வண்டியையும் 'வாங்கிவிடுவான்.

ஹீரோ ஹோண்டாவிலிருந்து ஸ்ட்ரீட் வரை வைத்திருக்கிறான்.

தாராளமாகக் கடன் தருவான்.

அடிக்கடி பார்ட்டி வைப்பான்.

"எல்லாம் பெண்களைக் கவர" என்று சிலர் அவன் காதுபட பேசுவதைப் பற்றிக் கவலைப்பட மாட்டான்.

பாருக்கு போவதாகவும், நிறைய பெண் சிநேகிதம் உண்டு என்று கூட பேச்சு.

"அவனுக்கு என்னய்யா... கல்யாணமா, குடும்பம் பற்றிய கவலையா.. அனுபவிக்கப் பிறந்தவன்."

"சார்..." மதுமிதா.

"என்ன..."

"டெர்மினல் ஒர்க் பண்ண மாட்டேங்குது சார்."

"ஒரு அஞ்சு நிமிஷம். எல்லாம் சரியாயிடும். இப்போ எந்த மிஷினும் ஒர்க் பண்ணாது."

"ஏன் சார்..."

விளக்கினேன்.

"என்ன மதுமிதா.. பார்ட்டி இடை





''வயிற்றுவலி தாங்கலே!''

''வேணும் உங்களுக்கு! சத்துணவு கூடத்தைத் திறந்து வைத்தது போதாதுன்னு குழந்தைகளோட அமர்ந்து உங்களைய யார் சாப்பிடச் சொன்னது?''

– உ. ராஜாஜி

யாதா...'' தேவா.

"என்ன பார்ட்டி சார்..."

"ஜாய்ன் பண்ணினதுக்கு..."

"இன்னும் சேலரி வரலியே சார்..."

"பணத்தைப் பத்தி என்ன கவலை. உனக்குத் தர சம்மதமா சொல்லு. பணம் மெதுவா தந்தா போதும்..." என்றான் தேவா.

"எவ்வளவு ஆகும் சார்..."

"ஆபீஸர்களை விட்டுடு. நாம ஏழு பேர் ப்யூனை சேர்த்து எட்டு. எட்டு எஸ்.கே.சி."

"எஸ்கேசின்னா..."

"ஸ்வீட், காரம், காப்பி. நாற்பது ரூபாய் ஆகும் கேண்டீன்ல வைச்சா.. ஓகேயா?"

"ஓ.கே. சார்."

"சங்கடம் ஒண்ணும் இல்லியே..."

"நீங்க இப்படி வெளிப்படையா கேட்டது தப்பே இல்லை சார்.."

தித்திப்பு கசந்தது.

தேவா மனோகரிடம் ஜோக் சொல்ல, மதுவும் அதைக் கேட்டுச் சிரித்தாள்.

"ஆபீஸ்ல வேலை பார்க்கவா வராங்க. பார்க் மாதிரி ஆயிப் போச்சு..." என்றேன்.

"சாரி சார். இப்போ ஃபீடிங்க ஆரம்பிச்சுடறேன்."

"மது..."

"என்ன சார்..."

"என்னை ராஜான்னே கூப்பிடலாம். எனக்கும் தேவா வயசுதான்."

"அப்படி இல்லை சார். அவர் கல கலன்னு பழகறார்..."

"அவன் எல்லாப் பெண்கள்ட்டயும் அப்படித்தான் பழகுவான்."

"தப்பில்லே சார்..."

பொட்டில் அடித்த மாதிரி இருந்தது.

என்ன பெண் இவள்! விட்டிலா...

முதல் மாத ஸ்டைபண்டில் மதுமிதா புது சாரியில் வந்ததும்,

"என்ன பிறந்த நாளா..." தேவா.

"எப்படிக் கண்டுபிடிச்சீங்க..."

"உங்க உடை புதுசு. முகத்துல ஒரு சந்தோஷம். மெனி ஹாப்பி ரிடர்ன்ஸ். ஸ்வீட் கிடையாதா..."

"எல்லாருக்குமா..."

"உங்களுக்கு யார் யாருக்குக் குடுக்கணும்னு தோணுதோ அவங்களுக்குக் கொடுக்கலாம்."

"விட மாட்டீங்க போல."

"இல்லேன்னா கௌரில நான் தர்றேன்."

"ஏன், என்ன விசேஷம்?"

"எனக்கு ரொம்பப் பிடிச்சவங்களுக்கு இன்னிக்குப் பிறந்த நாள்.."

"ச்சீ."

"ஒண்ணு தெரியுமா, இந்த ச்சீன்னு வெட்கப்பட்டுச் சொல்ற நேரத்துல பெண்கள் நிஜமாகவே ரொம்ப அழகா இருக்காங்க."

"நீங்க ரொம்ப மோசம் தேவா. மனசுல பட்டதைப் பேசிடறீங்க."

"இன்னும் எல்லாத்தையும் சொல்லலை."

அவள் அவனை ஒரு நிமிடம் இமைக்காமல் பார்த்தாள்,

விழுங்கி விடுகிற மாதிரி.

கடித்துத் தின்கிற மாதிரி.

கைது செய்து உள்ளேயே அடைத்துக் கொள்கிற மாதிரி.

"மது... கொஞ்சம் வேலையும் பார்க்கலாமா..."

"சாரி சார்."

"இதோ பாரும்மா. சம்பளக் கவர் தயார் பண்ணுகிற நேரம். பத்து நாள் அசையக் கூட நேரம் இருக்காது. கவனமா வேலை

பார்க்கணும். தேவா தப்புப் பண்ணினா டிடி திட்ட மாட்டார். நீ அப்படி இல்லே."

அவள் வருந்துகிற மாதிரி தெரிந்தது. அனாவசியமாக தேவாவின் பெயரை இழுத்திருக்க வேண்டாம்.

"சாரி புதுசா மதுமிதா..."

"ம்..."

"சுடிதாரை விட சாரில நீ கொஞ்சம் உயரமா, அழகா தெரியறே. ஸ்வீட் கிடையாதா..."

"வேலை நிறைய இருக்கு சார். ப்யூனை விட்டு வேணா ஸ்வீட் டோக்கன் எல்லாருக்கும் வாங்கித் தரச் சொல்றேன்" என்றாள் மிஷினில் இருந்து கவனத்தை திருப்பாமலே, மிஷின் மாதிரியே!

தேவாவிற்கு ஒரு பதில்.

எனக்கு ஒரு பதிலா

இருக்கட்டும். இவளை மடக்க வேண்டிய இடத்தில் மடக்க வேண்டும்.

வீட்டிற்கு வந்த பிறகும் கூட காதல் கதைகளைப் படித்தால் அவள் ஞாபகம்.

சினிமாக் காட்சிகள் டீ.வி.யில் வந்தால் அவள் ஞாபகம்.

கனவில் அவள் முகம்.

தெருவில் கூட முன்னால் அவள் நடந்து போகிற மாதிரி.

அம்மாதான் கண்டுபிடித்துக் கேட்டாள்.

"ஏன் ராஜா ஒரு மாதிரி இருக்கே..."

"நீதானே நாம எல்லாருக்கும் ஒரு மாதிரியா – உதாரணமா இருக்கணும்னு சொன்னே."

சிரித்தாள்.

"சரி.. உன் கல்யாண விஷயமா ஏதாவது அபிப்ராயம் இருக்கா..."

"எங்க ஆபீஸ்ல ஒரு பெண் இருக்கும்மா."

"நல்லது. நம்ம ஆட்கள்தானா..."

"பார்த்தா அப்படித்தான் தெரியறது. இல்லாட்டியும் பரவாயில்லை. அவ கெடைச்சா போதும்."

"ஊரு..."

"மதுரை..."

"அட உன் சித்தப்பா ஊரு..."

"ஆமாம்."

"அட்ரஸ் தெரியுமா..."

"எதுக்கு..."

"விசாரிக்கத்தான்."

"நடக்குமாம்மா."

"இத்தனை வருஷம் வேண்டாம் வேண்டாம்னு இருந்த நீயே சம்மதிச்சுட்டே. இது நடக்காதா..."

மறுநாள் அலுவலகம் நுழைந்த போது மதுமிதா லீவில் இருந்தாள்.

"என்ன தேவா டல்லா இருக்கீங்க?"

"உடம்பு சரியில்லே சார்."

"லீவு போட வேண்டியதுதானே..."

"அட மதுவுக்கு உடம்பு சரியில்லே. அவ இருந்தா ஜாலியா பேசி பொழுதுபோகும். அதான் போரடிக்குது."



**"தலைவர் சரியான கற்பனாவாதி தான்!"**
**"என்ன சொல்ற?"**
**"காலியா கிடக்கற மைதானத்தைப் பார்த்து, 'அலைகடலென திரண்டு வர இருக்கும் பொது மக்களே'ன்னு பேச்சை ஆரம்பிச்சுட்டாரே!"**
**– அம்பை தேவா**

"ஓ..." என்ற என் பதிலில் அவள் – நான் மேலும் ஏதாவது கேட்பேன் என்று எதிர்பார்த்திருக்க வேண்டும்.

'சே... இன்றைக்குப் பார்த்தா லீவு போட வேண்டும்... பழைய அப்ளிகேஷனை தேடி முகவரி கண்டுபிடிக்க வேண்டும்.'

கம்ப்யூட்டரில் எல்லார் முகவரியும் பதிவுசெய்து வைத்திருப்பது நினைவுக்கு வர சட்டென்று பட்டனைத் தட்டினேன்.

அம்மா கேட்டாள்,

"கிடைச்சுதா..."

"ராஜாவா கொக்கா..."

"நேர்ல கேட்டியா..."

"ஆபீஸ்ல பார்த்தேன்."

அம்மா ஞாயிறு கிளம்பிப் போனாள். சித்தப்பாவின் பையனை விட்டு விசாரித்து, முடிந்தால் வீட்டில் போய் பேசி முடித்து வருவதாகச் சொல்லிவிட்டு சந்தோஷமாகக் கிளம்பிப் போனாள்.

அம்மா இல்லாமல் வீடு போரடித்தது.

சினிமாவிற்குப் போனால் மதுவும் தேவாவும் தியேட்டர் வாசலில்.

கோவிலுக்குப் போய் விட்டு வீட்டிற்குத் திரும்பி விட்டேன்.

மனம் கொதித்தது.

என்ன துணிச்சல் இந்தப் பெண்களுக்கு! வெளியூர் வந்ததும் வெட்கம் மானம் பறந்து விடுமா?

எவ்வளவு சகஜமாக அந்நிய ஆட வனுடன் சிரித்துப் பேசி...

அலுவலகம் என்றால் பரவாயில்லை.

திட்டம் போட்டு வந்தார்களா, இல்லை யதேச்சையான சந்திப்பா.. இன்னும் எங்கு எங்கு சந்தித்துக் கொண்டார்களோ...

இன்று ஏன் வெளியில் போனேன். அம்மா என்ன பதிலுடன் வரப் போகிறாள்?

சம்மதம் என்றாலும் கூட சந்தோஷப்பட முடியுமா...

மறுநாள் அலுவலகத்தில் இருவரையும் சந்தித்த போது இயல்பாக இருந்தார்கள். எதுவுமே நடக்காத மாதிரி. யாரும் சந்திக் காத மாதிரி.

"சார் உங்களுக்கு விஷயம் தெரியுமா?"

"என்ன மது..."

"தேவா சாருக்குக் கல்யாணம்..."

"வெரிகுட்... பொண்ணு யாரு..."

"நான்..."

"வாட்..."

"நான் செலக்ட் பண்ணின பொண்ணு. ரொம்ப நாள் ரெண்டு பேரும் பழகி இருக் காங்க. நேற்று தியேட்டர்ல சந்திச்சோம். ரொம்ப ப்ராங்க் டைப். தேவா சாருக்கு நல்ல பொருத்தம்."

தேவா பதிலின்றிச் சிரித்தான்.

"உன் கல்யாணம் எப்பம்மா..."

"அது ஏற்கெனவே ஃபிக்ஸ் ஆன மாதிரிதான். அவர் வெளிநாட்ல இருக்கார். உறவுதான். எனக்கும் விசா ட்ரை பண்றார். அது கிடைச்சதும்.. பறந்துட வேண்டி யதுதான்..." என்றாள் மதுமிதா.

"சரி.. உங்க கல்யாணம் எப்போ சார்..."

"பார்க்கணும்... என்ன அவசரம்" என் றேன் முகத்தை நிமிர்த்தாமல். ◯



# ஜெய் சூர்யா!

தற்போது நடந்து முடிந்த இலங்கை சுதந்தர தினக் கோப்பை ஒரு நாள் போட்டிகளில் சரியாக ஆடா விட்டாலும், ''சியட் இன்டர் நேஷனல் கிரிக்கெட்டர்'' விருதுக்கு இந்த வருடம் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் ஸ்ரீலங்கா அணியின் சனத் ஜெயசூர்யா. இவருடன் பரிசீலிக்கப்பட்டு, விருதினை மயிரிழையில் தவறவிட்டவர் சச்சின். பரிசுத் தொகை எவ்வளவு தெரியுமா? ஐந்து லட்சம் ரூபாய்.

இதற்கு முந்தைய இரண்டு ஆண்டுகளில் இவ்விருதினைப் பெற்ற கிரிக்கெட் வீரர்கள், பிரய்ன் லாராவும், வெங்கடேஷ் பிரசாத்தும்.

— சி.எம்.

# பொன்னியின்

## பூர்வ கதை

இன்றைக்குச் சுமார் 970* ஆண்டுகளுக்கு முன்பு சோழ சாம்ராஜ்யம் குமரி முனையிலிருந்து வடபெண்ணை வரையில் பரவியிருந்தது. இரண்டாவது பராந்தகர் என்றும் பழையாறைச் சுந்தர சோழர் என்றும் பெயர் பெற்ற சக்கரவர்த்தி, அந்தப் பெரிய ராஜ்யத்தை ஆண்டு வந்தார். முத்தரைய வம்சத்தை முறியடித்து, அவர்களிடமிருந்து விஜயாலய சோழன் கைப்பற்றிய தஞ்சாவூர் நகரம், சுந்தர சோழரின் காலத்தில் சோழ நாட்டுக்குத் தலை நகரமாயிற்று. அதற்கு முன்பு நூறு ஆண்டு காலமாகக் குடந்தைக்கு அருகிலிருந்த பழையாறை, சோழர்களின் தலைநகரமாயிருந்தது.

சுந்தர சோழர் திருக்கோவலூர் மலையமானின் மகள் வானவன்மாதேவியை மணந்திருந்தார். அவர்களுக்கு இரண்டு புதல்வர்களும் ஒரு புதல்வியும் இருந்தனர். மூத்தவன் ஆதித்த கரிகாலன்; அடுத்தவள் குந்தவை; கடைக்குட்டிப் புதல்வன் பின்னால் சரித்திரத்தில் இராஜராஜ சோழன் என்று புகழ்பெற்ற அருள்மொழி வர்மன்.

சுந்தர சோழர் சிலகாலமாக நோய்வாய்ப்பட்டுத் தஞ்சாவூர் அரண்மனையில் படுத்த படுக்கையாயிருந்தார். பாரிச வாயுவினால் இரண்டு கால்களும் வலுவிழந்து விட்டபடியால் நடமாடவும் பிரயாணம் செய்யவும் முடியாத நிலையில் இருந்தார்.

அண்ணன் தம்பிகளான பெரிய பழுவேட்டரையரும், சின்னப் பழுவேட்டரையர் காலாந்தக கண்டரும் சோழ சாம்ராஜ்யத்தில் அப்போது பேரதிகாரம் படைத்திருந்தார்கள். சாம்ராஜ்யத்தின் பொக்கிஷமும் தானிய பண்டாரமும் வரி விதிக்கும் அதிகாரமும் பெரிய பழுவேட்டரையரிடம் இருந்தன. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் காவற் படைக்கு அதிபதியாக விளங்கினார்.

இளம் வயதிலேயே போர்க்களம் சென்று வீராதி வீரன் என்று பெயர் வாங்கிய ஆதித்த கரிகாலன், இளவரசுப் பட்டம் சூட்டப் பெற்றுக் காஞ்சியில் வடதிசைச் சைனியத்தின் அதிபதியாகத் தங்கியிருந்தான்.

தென் திசைப் படையின் மாதண்ட நாயகனாகிய அருள்மொழிவர்மன், இலங்கைத் தீவுக்குப் பெரும் படையுடன் சென்று போர் புரிந்து கொண்டிருந்தான்.

அவர்களுடைய சகோதரி குந்தவைப் பிராட்டியும் மற்றும் பல சோழ குலத்து அந்தப்புர மாதரும் பழையாறை நகரில் இருந்தார்கள்.

இத்தகைய சமயத்தில் நாடு

* 1950-ல் எழுதியது

# செல்வன்

ஆதிக்கத்திலிருந்து சுந்தர சோழரை மீட்டுக் காஞ்சிக்குக் கொண்டுவர விரும்பினான்.

காஞ்சியில் ஆதித்த கரிகாலன் புதிதாகப் பொன் மாளிகை கட்டியிருந்தான். சுந்தர சோழர் காஞ்சிக்கு வந்து, சில காலம் அப் பொன் மாளிகையில் தங்கியிருக்க வேண்டும் என்று பிரார்த்தித்து ஓலை ஒன்று எழுதினான். அதை வல்லவரையன் வந்தியத்தேவன் என்னும் தன் அந்தரங்க நம்பிக்கைக்குரிய வீரனிடம் கொடுத்து அனுப்பினான்.

ஆதித்தன் தன் இளம் வயதில் நந்தினி என்னும் அர்ச்சகர் வீட்டுப் பெண்ணைக் காதலித்தான். அது தகாத காதல் என்று செம்பியன் மாதேவி அவனுக்குப் போதனை செய்தாள். பிரசித்தி பெற்ற சிவஞான கண்டராதித்தரின் பட்ட மகிஷி செம்பியன் மாதேவி. சோழ வம்சத்தைச் சேர்ந்த அனைவரும் அந்த மூதாட்டியிடம் பக்தி கொண்டு நடந்தனர். ஆதித்த கரிகாலனும் தன் பெரிய பாட்டியின் கட்டளைக்குக் கீழ்ப் படிந்தான். ஆனால் நந்தினியை அவனால் அடியோடு மறக்க முடியவில்லை.

நகரமெங்கும் ஓர் அதிசயமான வதந்தி பரவியது. சுந்தர சோழருக்கும் அவருடைய குமாரர்களுக்கும் எதிராக ஒரு பெரிய சதி நடக்கிறது என்பதுதான் அவ்வதந்தி. பழுவேட்டரையர்களும் மற்றும் சம்புவரையர் முதலிய சோழ நாட்டுப் பிரமுகர்கள் பலரும் அச்சதி யில் கலந்து கொண்டிருந்தனர்.

சுந்தர சோழரின் பெரிய தந்தையும் சிவஞானச் செல்வருமான கண்டராதித்தரின் குமாரன் மதுராந்தகன், சில காலத்துக்கு முன்பு வரையில் சிவபக்தியில் திளைத்த வைராக்ய சீலனாக விளங்கினான். சின்னப் பழுவேட்டரையரின் மகளை மணந்து கொண்டதிலிருந்து அவனுடைய மனம் மாறி உலக வாழ்க்கையில் ஈடுபட்டது. சுந்தர சோழச் சக்கரவர்த்திக்குப் பிறகு மதுராந்தகனைச் சிம்மாசனம் ஏற்றுவது என்று, சதி செய்தவர்கள் தீர்மானித்திருந்தார்கள்.

வானத்தில் சில காலமாகத் தூமகேது என்னும் வால் நட்சத்திரம் காணப்பட்டு வந்தது. இதை ஓர் உற்பாதமாக மக்கள் கருதினார்கள். இராஜ வம்சத்தில் ஏதோ விபரீதம் நிகழப் போகிறது என்று நாடு நகரமெல்லாம் ஜனங்கள் மிகுந்த கவலையுடன் பேசிக் கொண்டார்கள்.

**கா**ஞ்சியில் இருந்த இளவரசன் ஆதித்த கரிகாலன் காதுக்கு இச் செய்திகள் எட்டின. தன் தந்தையைப் பற்றி அவன் மிக்க கவலை கொண்டான். பழுவேட்டரையர்களின்

**பெ**ரிய பழுவேட்டரையர் அறுபது பிராயத்துக்கு மேலே நந்தினியை மணந்து கொண்டார். நந்தினி பழுவூர் அரண்மனையில் சர்வாதிகாரியானாள். தன்னை நெருங்கிய யாரையும் தன் இஷ்டப்படி செய்விக்கும் மாய மோகன சக்தியை நந்தினி பெற்றிருந்தாள்.

## அமரர் கல்கி

ஒருமுறை அவள் ஆதித்த கரிகாலனிடம் தன் சக்தியைச் செலுத்தினாள். சுந்தர சோழரைச் சிறையில் அடைத்து விட்டு, கிழவர் பழுவேட்டரையரைக் கொன்றுவிட்டு, தன்னை மணந்து தஞ்சை சிம்மாசனத்தில் ஏற்றுவிக்கும்படி ஆதித்தனைக் கேட்டாள். அந்தப் பயங்கரச் செயலுக்குக் கரிகாலன் உட்பட மறுத்து விட்டான். ஆயினும் இப்போது தஞ்சாவூருக்குப் போவது என்றாலே கரிகாலனுக்கு அச்சமாயிருந்தது. ஆகையினாலேயே வந்தியத் தேவனை அனுப்பினான்.

வந்தியத்தேவன், வழியில் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் தங்கியிருந்தபோது, சோழ நாட்டுப் பிரமுகர்களின் சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்டான். பிறகு, தஞ்சாவூர் போய்ச் சேர்ந்தான். அங்கே நந்தினியைச் சந்தித்துப் பனை இலச்சினையுள்ள முத்திரை மோதிரத்தை வாங்கிக் கொண்டான். அதன் உதவியால் சுந்தர சோழரைப் பேட்டி கண்டான். அவரைச் சூழ்ந்திருந்த அபாயங்களைப் பற்றி எச்சரிக்கை செய்ய எண்ணிய சமயத்தில் சின்னப் பழுவேட்டரையர் வந்து குறுக்கிட்டார்.

**வ**ந்தியத்தேவன் தற்செயலாகத் தஞ்சாவூர்ப் பொக்கிஷம் வைத்திருந்த நிலவறையைப் பார்க்க நேர்ந்தது. இதை அறிந்த பழுவேட்டரையர்கள் அவன் தப்பிச் செல்லாமல் கைப்பற்ற முயன்றார்கள். அவர்களுடைய வீரர்களுக்கு அவன் 'டிமிக்கி' கொடுத்து விட்டுப் பழையாறையை அடைந்தான். குந்தவை தேவியைப் பார்த்து ஓலையைக் கொடுத்தான்.

ஏற்கெனவே குந்தவையைப் பற்றிக் கேள்விப்பட்டு, வந்தியத்தேவன் தன் உள்ளத்தை அவளுக்குப் பறிகொடுத்திருந்தான். குடந்தையிலும் அரிசிலாற்றங்கரையிலும் அவளைச் சந்தித்தும் இருந்தான். இலங்கைக்குப் போக வேண்டும் என்ற ஆசையும் அவன் மனத்தில் குடிகொண்டிருந்தது. எனவே குந்தவை சொன்னபடி அவன் ஈழத்துக்கு உடனே செல்ல ஆயத்த மானான். ''பொன்னியின் செல்வ! இராஜ்யத்துக்குப் பேரபாயம் வந்திருக்கிறது. உடனே புறப்பட்டு வா!'' என்று குந்தவை ஓலை எழுதிக் கொடுத்தாள். அதை எடுத்துக் கொண்டு வந்தியத்தேவன் புறப்பட்டான்.



**ஆ**தித்த கரிகாலனுடைய உள்ளம் மிகக் குழம்பியிருந்தது. வந்தியத்தேவனைப் பற்றித் தகவல் ஒன்றும் தெரியாதபடியால் அவனுடைய கவலை அதிகமாயிற்று. தம்பிக்கு இளவரசுப் பட்டம் கட்டிவிட்டுத் தான் வெளி நாடுகள் பலவற்றுக்கும் சென்று தமிழர் வீரத்தையும் சோழர் புகழையும் நிலைநாட்ட விரும்பினான். ஆகையால் தான் தன் சகோதரன் அருள்மொழிவர்மனைத் தருவித்துக் காஞ்சியில் இளவரசுப் பட்டம் சூட்டிவிட்டுத் தான் ஈழத்துக்கும், சாகவகம், புட்பகம், கடாரத்துக்கும் போக விரும்பினான். அவனுடைய மற்றோர் அந்தரங்க நண்பனான பல்லவ குல பார்த்திபேந்திரனை அழைத்துத் தன் மனக் கவலைகளை வெளியிட்டான்.

இலங்கைக்குச் சென்று அருள்மொழிவர்மனை உடனே காஞ்சிக்கு அழைத்து வரும்படி பணித்தான். பார்த்திபனும் அதற்குச் சம்மதித்தான்.

வந்தியத்தேவன் தன் பிரயாணத்தில் ஆழ்வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவனைச் சந்தித்தான். ஆழ்வார்க்கடியான் நாடெங்கும் சஞ்சரித்துத் துப்பறிந்து வந்தான். ஆனால் யாருடைய சார்பில் அவன் வேலை செய்கிறான் என்று தெரியவில்லை. ஆகையால் அவன் பேரில் வந்தியத்தேவனுக்கு ஐயம் உண்டாகியிருந்தது.

இனி, இவ்விதழில் ஆரம்பமாகும் ''பொன்னியின் செல்வன்'' இரண்டாம் பாகத்தைப் பழைய நேயர்களோடு புதிய வாசர்களும் சேர்ந்து படிக்கத் தொடங்கலாம்.



## முதல் அத்தியாயம்

# பூங்குழலி

அந்த நேரம் அமைதி பெற்று விளங்கியது. கோடிக் கரையின் ஓரத்தில் கடல் அலை அடங்கி ஒய்ந்திருந்தது. கட்டு மரங்களும் படகுகளும் கரையை நெருங்கிக் கொண்டிருந்தன. கடலில் இரை தேடச் சென்ற பறவைகள் திரும்பி வந்து கொண்டிருந்தன. கரையில் சிறிது தூரம் வெண் மணல் பரந்திருந்தது. அதற்கு அப்பால் வெகு

தூரத்துக்கு வெகு தூரம் காடு படர்ந்திருந்தது. காட்டு மரங்களின் கிளை ஆடவில்லை; இலைகள் அசையவில்லை. நாலாபக்கமும் நிசப்தம் நிலவியது. செங்கதிர்த் தேவன் கடலும் வானும் கலக்கும் இடத்தை நோக்கி விரைந்து இறங்கிக் கொண்டிருந்தான். மேகத்திரள்கள் சில சூரியனுடைய செங்கதிர்களை மறைக்கப் பார்த்துத் தாங்களும் ஒளி பெற்றுத் திகழ்ந்தன.

கரை ஓரத்தில் கடலில் ஒரு சிறிய படகு மிதந்தது. கடலின் மெல்லிய அலைப் பூங்கரங்கள் அந்தப் படகைக் குழந்தையின் மணித் தொட்டிலை ஆட்டுவது போல மெள்ள மெள்ள அசைத்தன. அந்தப் படகில் ஓர் இளம் பெண் இருந்தாள். அவளைப் பார்த்ததும் சேந்தன் அமுதன் தன் மாமன் மகளைக் குறித்து வர்ணனை செய்தது நமக்கு நினைவு வருகிறது. ஆம்; இவள் **பூங்குழலியாகத்** தான் இருக்க வேண்டும். பெயருக்குத் தகுந்தாற் போல் இவள் கூந்தலில் ஒரு தாழம்பூவின் இதழ் அழகு பெற்றுத் திகழ்ந்தது. நீண்ட கரிய கூந்தல் சுருண்டு சுருண்டு விழுந்து, அவளுடைய கடைந்தெடுத்த தோள்களை அலங்கரித்தன. கடல் அலைகள் கரையில் ஒதுக்கும் சங்குகள், சிப்பிகள் முதலியவற்றை ஆரமாக்கி அவள் அணிந்து கொண்டிருந்தாள். ஆனால் இவையெல்லாம் அவளுடைய மேனியில் பட்டதனால் தாங்களும் அழகு பெற்றனவேயன்றி, அவளை அலங்கரித்ததாகச் சொல்ல முடியாது. அழகே ஒரு வடிவம் தாங்கி வந்தால், அதற்கு எந்த ஆபரணத்தைக் கொண்டு அழகு செய்ய முடியும்?

பூங்குழலி படகில் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டு பாடினாள். அவளுடைய கானத்தைக் கேட்பதற்காகவே கடலும் அலை அடங்கி ஒய்ந்திருந்தது போலும்! அதற்காகவே காற்றும் வீசி அடிக்காமல் மெள்ளத் மெள்ளத் தவழ்ந்து வந்தது போலும்! தூரத்தில் தெரிந்த காட்டு மரங்களும் இலை அசையாமல் நின்று அவளுடைய கானத்தைக் கவனமாகக் கேட்டன போலும்! வானமும் பூமியும் அந்த கானத்தைக் கேட்டு மதி மயங்கி அசைவற்று நின்றன போலும்! கதிரவன் கூட அந்த கானத்தை முன்னிட்டே மூலைக் கடலை அடைந்தும் முழுகி மறையாமல் தயங்கி நிற்கிறான் போலும்!

தேனில் குழைந்து வானில் மிதந்து வந்த அப்பாடலை நாமும் சற்றுச் செவி கொடுத்துக் கேட்கலாம்:

**"அலை கடலும் ஓய்ந்திருக்க**
**அகக் கடல்தான்**
**பொங்குவதேன்?**
**நில மகளும் துயிலுகையில்**
**நெஞ்சகந்தான் பதைப்பது மேன்?**
**காட்டினில் வாழ் பறவைகளும்**
**கூடுகளைத் தேடினவே!**
**வேட்டுவரும் வில்லியரும்**
**வீடு நோக்கி ஏகுவரே!**
**வானகமும் நானிலமும்**
**மோனமதில் ஆழ்ந்திருக்க**
**மான்விழியாள் பெண்ணொருத்தி**
**மனத்தில் புயல் அடிப்பதுமேன்?**
**வாரிதியும் அடங்கி நிற்கும்**
**மாருதமும் தவழ்ந்துவரும்**
**காரிகையாள் உளந்தனிலே**
**காற்று சுழன் றடிப்பதுமேன்?"**

அந்த இளமங்கையின் உள்ளத்தில் அப்படி என்ன சோகம் குடிகொண்டிருக்குமோ, தெரியாது! அவளுடைய திங்குரலில் அப்படி என்ன இன்ப வேதனை கலந்திருக்குமோ, தெரியாது! அல்லது அப்பாடலின் சொற்களோடு ஒருவேளை கண்ணீரைக் கலந்துதான் பாடலை அமைத்துவிட்டார்களோ, அதுவும் நாம் அறியோம். ஆனால் அந்தப் பாடலை அவள் பாடுவதைக் கேட்கும்போது நமக்கு நெஞ்சம் விம்மி வெடித்து விடும் போன்ற உணர்ச்சி ஏனோ உண்டாகிறது.

பூங்குழலி கானத்தை நிறுத்தினாள். படகின் துடுப்பை நாலு தடவை வலித்தாள். படகு கரை அருகில் வந்து சேர்ந்

தது. பூங்குழலி படகிலிருந்து துள்ளிக் குதித்துக் கரையில் இறங்கினாள். படகைக் கரையில் இழுத்துப் போட்டாள். கரையில் சில கட்டு மரங்கள் குப்பலாகக் கிடந்தன. அவற்றின் மீது படகு சாய்ந்து நிற்கும்படி தூக்கி நிறுத்தினாள். சாய்ந்து நின்ற படகில் தானும் சாய்ந்து கொண்டு ஒருமுறை சுற்றுமுற்றும் பார்த்தாள்.

அதோ! கலங்கரை விளக்கின் உச்சி மண்டபத்தில் தீ மூட்டியாகி விட்டது. தீ ஜுவாலை விட்டு எரிகிறது. இனி இரவெல்லாம் அந்த ஜோதி எரிந்து கொண்டிருக்கும். கடலில் செல்லும் மரக்கலங்களுக்கு அது "அருகில் நெருங்க வேண்டாம்!" என்று எச்சரித்துக் கொண்டிருக்கும். கோடிக் கரை ஓரத்தில் கடலில் ஆழமே கிடையாது. கட்டு மரங்களும் சிறிய படகுகளும்தான் அந்தப் பகுதியில் கரை ஓரமாக அணுகி வரலாம். மரக்கலமும் நாவாயும் நெருங்கி வந்தால் தரை தட்டி மணலில் புதைந்து விடும். வேகமாகத் தரையில் மோதினால் கப்பல் பிளந்து உடைந்தும் போய்விடும். ஆதலின், கோடிக்கரையில் உள்ள கலங்கரை விளக்கம் கப்பல் ஓட்டிகளுக்கு மிகவும் அவசியமான உதவியைச் செய்து வந்தது. மற்றொரு பக்கத்தில் குட்டை மரங்கள் அடர்ந்த காட்டின் நடுவில் கோபுரம் ஒன்று தலை தூக்கி நின்றது. அதனடியில் கோடிக்கரைக் குழகர் கோவில் கொண்டிருந்தார். சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னால் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் இந்தக் கோடிக் கரைக்கு வந்தார். காட்டின் மத்தியில் தன்னந்தனியே கோயில் கொண்டிருந்த குழகரைத் தரிசித்தார். "அந்தோ! இறைவா! இப்படி இந்தக் கடற்கரைக் காட்டின் மத்தியில் துணையின்றித் தனியே இருந்திரே? இருக்க வேறு இடமாயில்லை? பக்தர்கள் கூட்டங் கூட்டமாக உமது புகழைப் பாடிக் கொண்டிருக்கும் ஸ்தலங்கள் எத்தனையோ இருக்க, இந்தக் கோடிக்கு வந்து பயங்கரக் காட்டிலே தனியே கோயில் கொண்டிருப்பதேன்? இக்கொடியேனுடைய கண்கள் இந்தக் காட்சியையும் காண நேர்ந்ததே!" என்று மனமுருகிப் பாடினார்.

"கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக்
கரைமேல்
குடிதானயலே இருந்தாற்
குற்றமாமோ?
கொடியேன் கண்கள் கண்டன
கோடிக் குழகீர்
அடிகேள் உமக்கார் துணையாக
இருந்திரே?"

"மத்தம் மலிசூழ் மறைக்காடதன்
றென்பால்
பத்தர் பலர் பாடவிருந்த பரமா!
கொத்தார் பொழில்சூழ் தருகோடிக்
குழகா
எத்தாற் றனியே யிருந்தாய்? எம்
பிரானே?"

ஸ்ரீ சுந்தர மூர்த்தி நாயனார் வந்து தரிசித்து விட்டுப் போன இருநூறு ஆண்டுகளுக்குப் பிறகும் கோடிக் கரைக் குழகர் அதே நிலையில்தான் இருந்தார்.* சுற்றிலும் இன்னும் கொஞ்சம் காடுகள் மண்டிப் போயிருந்தன. அக்காடுகளில் மரப் பொந்துகளில் ஆந்தைகளும் கூகைகளும் குழறின. பார்ப்பதற்குப் பயங்கரமான வேடுவர்கள் சிலர்தான் காட்டின் மத்தியில் ஆங்காங்கு குடிசை போட்டுக் கொண்டு வசித்தார்கள்.

ஆம்; ஒரே ஒரு வித்தியாசம் இருந்தது. ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் இங்கு வந்திருந்தபோது கலங்கரை விளக்கம் இல்லை. சில ஆண்டுகளுக்கு முன்பு, முதற் பராந்தகரின் காலத்திலேதான் அது கட்டப்பட்டது. கலங்கரை விளக்கத்தில் பணி செய்வோருக்கென்று சில ஓட்டு வீடுகள் அதைச் சுற்றிக் கட்டப்பட்டன. கோடிக்கரைக் குழகர் கோயிலில் பூஜை

---

* ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் இன்றைக்கும் கோடிக்கரைக் குழகர் அதே தனிமை நிலையில்தான் இருந்து வருகிறார்!

செய்யும் பட்டரும் அங்கே வந்து குடியேறினார்.

பூங்குழலி கடற்கரை ஓரத்தில் படகின் மீது சாய்ந்த வண்ணம் நாற்புறமும் பார்த்தாள். கலங்கரை விளக்கத்தைப் பார்த்து அந்தப் பக்கம் போகலாமா என்று யோசித்தாள். பிறகு, குழகர் கோயிலின் கோபுர கலசத்தை நோக்கினாள். அச்சமயம் கோயிலில் சேமங்கலம் அடிக்கும் ஓசை கேட்கவே, பூங்குழலி ஒரு தீர்மானத்துக்கு வந்தாள். அதற்குள் வீட்டுக்குப் போய் என்ன செய்வது? கோயிலுக்குப் போகலாம். பட்டரைத் தேவாரம் பாடச் சொல்லிக் கேட்கலாம். பிறகு பிரசாதமும் வாங்கிக் கொண்டு வரலாம்.

இப்படி முடிவு செய்து கொண்டு பூங்குழலி கோயில் இருந்த திசையை நோக்கி நடந்தாள். ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் துள்ளிக் குதித்துக் கொண்டும் நடந்தாள். வழியில் மான் கூட்டம் ஒன்றைக் கண்டாள். மான்கள் மணல் வெளியைத் தாண்டிக் காட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. ஏழெட்டுப் பெரிய மான்களோடு ஒரு சிறிய மான் குட்டியும் பாய்ந்து பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது. மான் கூட்டத்தைப் பார்த்ததும் பூங்குழலிக்கு உற்சாகம் உண்டாயிற்று. அவற்றைப் பிடிக்கப் போவது போல்



தொடர்ந்து குதித்து ஓடினாள். ஆனால் என்னதான் விரைவாக ஓடினாலும் மான்களோடு போட்டியிட முடியுமா! மான் கூட்டம் பூங்குழலியை முந்திக் கொண்டது.

முன்னால் சென்ற மான்கள் ஓரிடத்தில் நாலு கால்களையும் தூக்கி வானத்தில் பறப்பது போல் நீண்ட தூரம் தாவிக் குதித்தன. அங்கே புதை சேற்றுக் குழி இருக்கிறதென்று பூங்குழலி ஊகித்துக் கொண்டாள். பெரிய மான்கள் எல்லாம் அக் குழியை ஒரே தாண்டலில் தாண்டி அப்பால் பத்திரமாய் இறங்கி விட்டன. ஆனால் மான் குட்டியினால் முழுதும் தாண்ட முடியவில்லை. அக் கரை ஓரமாக அதன் பின்னங்கால்கள் சேற்றுக் குழியில் அகப்பட்டுக் கொண் டன. முன்னங் கால்களைக் கரையில் ஊன்றி, மான் குட்டி ஆன மட்டும் கரை ஏற முயன்றது. ஆனால் அதன் பின்னங் கால்கள் சேற்றில் மேலும் மேலும் புதைந்து கொண்டிருந்தன. தாய் மான் கரையில் நின்று குட்டியின் நிலையைக் கவலையுடன் நோக்கியது. அதனால் தன் குட்டிக்கு உதவி எதுவும் செய்ய முடிய வில்லை.

இதையெல்லாம் ஒரு நொடியில் பார்த்து அறிந்து கொண்ட பூங்குழலி, அந்தப் புதை சேற்றுக் குழி எங்கே





முடிகிறது என்பதைக் கண்டு தெரிந்து கொண்டாள். புதைகுழி ஓரமாக ஓடிச் சென்று கெட்டியான இடத்தின் வழியாகக் கடந்து எதிர்ப்புறத்தில் மான் குட்டி சேற்றில் அகப்பட்டுக் கொண்டு தவித்த இடத்தை அணுகினாள். தாய் மான் முதலில் அவளைக் கண்டு மிரண்டது. பூங்குழலிக்கு மானின் பாஷை தெரியும் போலும்! மிருதுவான குரலில் அவள் ஏதோ சொல்லவும் தாய் மான் பயம் நீங்கி நின்றது. பூங்குழலி புதை சேற்றுக் குழியின் கரை ஓரத்தில் முன்னங்கால்களை மடித்து உட்கார்ந்து, கைகளை நீட்டி மான் குட்டியைப் பற்றிப் பலமாக இழுத்துக் கரையேற்றினாள். சில வினாடி நேரம் அந்த மான் குட்டியின் உடம்பு வெட வெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது. தாய் மான் அதனருகில் நின்று மோந்து பார்த்துத் தைரியம் கூறியது போலும்! அவ்வளவுதான்! அடுத்த வினாடி தாயும் குட்டியும் மீண்டும் பாய்ந்தோடின.

"சீ! கொஞ்சமும் நன்றியில்லாத மிருக ஜன்மங்கள்!" என்று பூங்குழலி தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். "ஆனால் மனிதர்களை விட இந்த மான்கள் மட்டமாய்ப் போய் விடவில்லை!" என்று அவளே தேறுதலும் சொல்லிக் கொண்டாள்.

பிறகு மறுபடியும் குழகர் ஆலயத்தை நோக்கி நடந்தாள்.

மணல்வெளியைத் தாண்டியதும் மரஞ்செடிகள் அடர்ந்த காட்டு வழியில் போக வேண்டியிருந்தது. அந்தக் காட்டை இயற்கையின் விசித்திரங்களில் ஒன்று என்றே சொல்ல வேண்



டும். அங்கே கற்பாறைகளினால் அமைந்த மலைகளோ, குன்றுகளோ இல்லை. ஒரே மணல்வெளிதான். ஆங்காங்கு மணல் மேடிட்டு மணல் மேட்டின் மீது செடிகளும் மரங்களும் முளைத்ததினால் கெட்டிப்பட்டுக் குன்றுகளாகவே மாறிப் போயிருந்தன. குன்றுகளுக்குப் பக்கத்தில் பள்ளங்களும் இருந்தன. அத்தகைய காட்டில் வழி கண்டு பிடித்துப் போவது எளிய காரியமன்று. வெகு தூரம் நடந்து விட்டது போலத் தோன்றும்; ஆனால் திரும்பத் திரும்பப் புறப்பட்ட இடத்துக்கே வந்து கொண்டிருப்போம்.

பூங்குழலி அந்தக் காட்டு வழியில் புகுந்து அதி விரைவாக நடந்து ஆலயத்தினருகே வந்து சேர்ந்தாள். கோவிலுக்கு வெளியிலும் உட்பிராகாரத்திலும் கொன்னை, பன்னீர் முதலிய மரங்கள் ஓங்கி வளர்ந்து மலர்ந்து குலுங்கிக் கொண்டிருந்தன.

பூங்குழலி ஆலயத்துக்குள் போனாள். பட்டர் அவளைப் பார்த்து முகமலர்ந்தார். அந்தக் கோயிலுக்குள் சுவாமி தரிசனம் செய்வதற்காக வருவோர் அருமை. ஆதலின் அருமையாக வருகிறவரைப் பார்த்துப் பட்டர் மகிழ்வது இயல்பு தானே?

தேங்காய் மூடியும் பிரஸாதமும் கொண்டு வந்து பட்டர் கொடுத்தார். "அம்மா! கொஞ்சம் காத்திருக்கிறாயா! நானும் இதோ சந்நிதியைப் பூட்டிக் கொண்டு வீட்டுக்கு வருகிறேன்!" என்றார். இருட்டிய பிறகு அந்தக் காட்டு வழியில் செல்வது கொஞ்சம் சிரமமான காரியந்தான். ஆனால் வழி காட்டுவதற்குப் பூங்குழலி இருந்தால் கவலையே இடையாது.

"இருக்கிறேன், ஐயா! எனக்கு அவசரம் ஒன்றுமில்லை. மெதுவாகக் கோயில் கைங்கரியங்களை முடித்துக் கொண்டு புறப்படுங்கள்!" என்று பூங்குழலி கூறிவிட்டுக் கோயில் பிராகாரத்துக்கு வந்தாள். மரக்கிளை ஒன்றைப் பிடித்துக் கொண்டு, பிராகாரத்தின் மதில் சுவரின் மேல் தாவி ஏறினாள். மதில் மூலையில் நந்திபகவானுடைய பெரிய சிலை ஒன்று அமைந்திருந்தது. அந்தச் சிலை மீது சிறிது சாய்ந்தவண்ணம் மதில் மீது காலை நீட்டிப் படுத்தாள். தேங்காய் மூடியைப் பல்லினால் கறண்டிச் சாப்பிடத் தொடங்கினாள்.

நாலாபுறமும் இருள் சூழ்ந்து வரும் விசித்திரத்தைப் பூங்குழலி பார்த்துக் கொண்டேயிருக்கையில், குதிரையின் காலடிச் சத்தத்தைக் கேட்டாள். சத்தம் வந்த வழியே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தாள். குதிரைக் காலடியின் சத்தம் அவளுடைய உள்ளத்தில் ஏதேதோ பழைய ஞாபகங்களை எழுப்பி, அவளைக் கனவு லோகத்துக்குக் கொண்டு போயிற்று. எங்கிருந்தோ இனந்தெரியாத ஒரு துக்கம் வந்து நெஞ்சை அடைத்தது. வருகிறது யாரா

யிருக்கக் கூடும்? யாராயிருந்தால் நமக்கு என்ன கவலை? கொஞ்ச நாளாகப் புது ஆள்கள் வருகிறதும் போகிறதும் அதிக மாய்த்தானிருக்கிறது. இராஜாங்க காரிய மாக வருகிறார்களாம்; போகிறார்களாம். நேற்றைக்குக் கூட இரண்டு பேர் வந் திருந்தார்கள். அவர்களைப் பார்ப்பதற்கே அருவருப்பாயிருந்தது. அண்ணனைப் படகு வலிக்கச் சொல்லி ஈழத்துக்குச் சென்றார்கள். பணமும் நிறையக் கொடுத் தார்கள். அவர்களுடைய பணத்திலே இடி விழட்டும்! யாருக்குப் பணம் வேண் டும்! பணத்தை வைத்துக் கொண்டு இந்த நடுக்காட்டில் என்ன செய்வது? ஆனால் அண்ணனுக்கும் அண்ணிக்கும் பணம் என்றால் ஒரே ஆசை. எதற்கோ தெரிய வில்லை! சேர்த்துச் சேர்த்துப் புதைத்து வருகிறார்கள்.

குதிரைக் காலடிச் சத்தம் இதோ அருகில் நெருங்கி வருகிறது. ஒரு குதிரை அல்ல. இரண்டு குதிரை கள் வருவது போல் தோன்றுகிறது. இதோ அவை தென்படுகின்றன. பள்ளத்தி லிருந்து மெள்ள மெள்ள மேட்டில் ஏறி வருகின்றன. நெடுந்தூரம் பிரயாணம் செய்து களைத்துப் போன குதிரைகள். ஒவ்வொரு குதிரை மீதும் ஓர் ஆள் வரு கிறான். முதலில் வருகிற குதிரை மேல் வருகிறவன் வாலிபப் பிராயத்தவன். பார்க்க இலட்சணமாயிருக்கிறான். வாட்டசாட்டமாகவுமிருக்கிறான். முகத்தில் கம்பீரம் இருக்கிறது. ஆனால் அவனுடைய இருதய அந்தரங்கத்தில் குடிகொண்டிருக்கும் அந்த இன்னொரு முகத்தின் அழகும் கம்பீரமும் எங்கே? இவனுடைய முகம் எங்கே? பார்க்கப் போனால், இவனுடைய முகம் மரப் பொந்தில் இருக்கும் ஆந்தை முகம் மாதிரியல்லவா சப்பட்டையாயிருக்கிறது?

குதிரையின் மேல் வந்த இருவரில் முதலில் வந்தவன் நமது பழைய நண்ப னாகிய வல்லவரையன் வந்தியத்தேவன் தான். பின்னால் வந்தவன் வைத்தியரு டைய மகன். இருவரும் பழையாறையி லிருந்து இங்கே வந்து சேர்வதற்குள் இளைத்துக் களைத்துச் சோர்வுற்றுப் போயிருக்கிறார்கள். ஆயினும் வந்தியத் தேவனுடைய முகம், கோயில் மதில் மேல் காலை நீட்டிச் சாய்ந்து கொண்டிருந்த பூங்குழலியைக் கண்டதும் சிறிது மலர்ந் தது. அவள் தன்னுடைய முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று தெரிந்ததும் அவனுக்கு இயற்கையான உற்சாகமே பிறந்து விட்டது. அவனும் குதிரையை நிறுத்தி விட்டு அவளுடைய முகத்தை ஆர்வத்துடன் உற்றுப் பார்க்க லானான். தன் முகத்தை மரப் பொந்தி லுள்ள ஆந்தையின் முகத்தோடு அவள் ஒப்பிடுகிறாள் என்று மட்டும் அவன் அறிந்திருந்தால் அவ்வளவு உற்சாகப்பட் டிருக்க முடியாதுதான். ஒருவர் மனத்தி லுள்ளதை இன்னொருவர் முழுதும் அறிய முடியாமலிருப்பது எவ்வளவு அனு கூலமாயிருக்கிறது?

குதிரை மேல் வந்தவன் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதைப் பூங்குழலி அறிந்தாள். கையில் தான் தேங்காய் மூடி வைத்துக் கொண்டு பல்லினால் கறண்டித் தின்று கொண்டி ருப்பதையும் நினைத்தாள். உடனே எங்கிருந்தோ ஒரு நாண உணர்ச்சி வந்து அவளைப் பற்றிக் கொண்டது. பிராகார மதில் சுவரிலிருந்து வெளியே வெண் மணலில் குதித்தாள். மதில் சுவர் ஓரமாக ஓடத் தொடங்கினாள்.

அதைப் பார்த்த உடனே வந்தியத் தேவனுக்கும் குதிரை மேலிருந்து குதிக்கத் தோன்றியது. குதித்துப் பூங்குழலியைப் பின்தொடர்ந்து பிடிப்பதற்கு ஓட வேண்டும் என்றும் தோன்றியது. அவ் வாறே அவளைத் துரத்திக் கொண்டு ஓடி னான்.

இந்த அர்த்தமற்ற செயலின் காரண காரியங்களை யார் கண்டு பிடித்துச் சொல்ல முடியும்? ஆயிரம் பதினாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வந்த மனித குலத்தின் பரம்பரை இயற்கைதான் பூங் குழலியை ஓடச் செய்தது என்றும், அதுவே வந்தியத்தேவனைத் துரத்திப் பிடிக்கச் செய்தது என்றும் சொல்ல வேண்டியதுதான்.

(தொடரும்)

# பெண்குலத்தின் வெற்றி

அமரர் **கல்கி**

ஒரு சமயம் தென்னாட்டில் இணையில்லாத புகழ்பெற்றிருந்த கன்னையா நாடகக் கம்பெனியைக் குறித்து நேயர்கள் பலருக்கு நினைவிருக்கலாம். கிருஷ்ண லீலா, தசாவதாரம் முதலிய நாடகங்களின் மூலம் தமிழ் மக்களின் உள்ளங்களை அக் கம்பெனி கொள்ளை கொண்டது. ஸ்ரீரங்கம், திருப்பதி முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்கு ஸ்ரீ கன்னையா பெரும் போட்டியாயிருந்தார். அரங்க மேடையில் ஸ்ரீ கன்னையா ஸ்ரீரங்கத்தையும், திருப்பதியையும் காட்டினால், பார்க்கிறவர்களுக்கு அந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்று ஆலய தரிசனம் செய்தது போலவே இருக்கும். க்ஷேத்திரங்களைப் பற்றிச் சொல்லுவானேன்? சாக்ஷாத் வைகுண்டத்தையே அரங்க மேடைக்கு அவர் கொண்டு வந்து விடுவார். ஸ்ரீ மகாவிஷ்ணு நாடகம் பார்க்க வந்தாரானால், 'இதுதான் உண்மையான வைகுண்டம்' என்று பிரமிக்கும்படி இருக்கும்.

காட்சிகளைத் தத்ரூபமாகக் காட்டுவது போல, வேஷப் பொருத்தங்களின் விஷயத்திலும் ஸ்ரீ கன்னையா மிக்க கவனம் செலுத்துவதுண்டு. ஸ்ரீ ராமரையும், லக்ஷ்மணரையும், ஸ்ரீ கிருஷ்ணனையும், பலராமரையும், இதிகாசங்களில் உள்ள வர்ணனைக்கு உகந்தவாறு மேடையில் கொண்டு வந்து நிறுத்துவார்.

அத்தகைய ஸ்ரீ கன்னையா ஒரு தடவை தமது கம்பெனியைச் சேர்ந்த நடிகர்களைப் பார்த்துச் சொன்னார் : ''அரங்க மேடையில் நாம் இராம லக்ஷ்மணர்களைக் காட்டுவதென்றால், அதற்கு எவ்வளவோ பிரயத்தனப்பட்டு, தகுந்தவர்களைத் தேடிப் பிடித்து, சரியானபடி வேஷம் போட்டு, எத்தனையோ பயிற்சி அளித்த பிறகு கொண்டு வந்து நிறுத்த வேண்டியிருக்கிறது. ஆனால் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அம்மாள் காலட்சேபம் செய்யும் போது, கையை ஒரு பக்கம் காட்டி, **'அதோ இராம லக்ஷ்மணர்கள் வந்து விட்டார்கள்!'** என்று சொன்னால், உடனே இராம லக்ஷ்மணர்கள் நம் கண் முன்னால் நிற்கிறார்கள்!'' என்றார்.

இராம லக்ஷ்மணர்களை மட்டுந்தானா ஸ்ரீமதி சரஸ்வதி பாய் கொண்டு வருவார்? சீதா தேவியையும் கொண்டு வருவார்! நாடகை - சூர்ப்பனகையையும் கொண்டு வருவார்? சாக்ஷாத் தசகண்ட ராவணனையும் இலங்கையிலிருந்து கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு வந்து நம் முன்னால் நிறுத்துவார். ஸ்ரீமதி சரஸ்வதி பாய் 'திரௌபதி மான சம்ரக்ஷணம்' என்ற காலட்சேபம் செய்யும்போது, துரியோதனனுடைய மகாசபை நம் கண் முன்னால் நிற்கும். பீஷ்மப் பிதாமகர் முதலிய கிழவர்களும், வீமன் அர்ஜுனன் முதலிய வாலிபர்களும் செய்வதறியாது தலை குனிந்து நிற்பார்கள். பாஞ்சாலி அலங்கோலமாகச் சபையிலே கொண்டு வரப்படுவதையும், அவள் ஆடை குலைவுற்று நிற்பதையும், 'ஆ' என்று அழுது துடிப்பதையும், மாடு நிகர்த்த துச்சாதனன் அவள் மைக்குழல் பற்றி இழுப்பதையும் நம் கண் முன்னால் காண்போம். பாரதம் நடந்த காலத்தில் பாஞ்சாலி, கண்ணனை

எண்ணிக் கதறிய போது ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஒருவேளை சிறிது ஆலஸ்ய மாக இருந்தாலும் இருந்திருக்கலாம். ஆனால் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அம்மாள் பாஞ்சாலியின் நிலையைக் குறித்து உருகி அழைக்கும் போது, ஸ்ரீ கிருஷ்ண பர மாத்மா 'இதோ வந்தேன்!' என்று ஓட்ட மாக ஓடி வந்து விடுவார்!

அந்தகைய வாக்கு வன்மை பெற்றவர் ஸ்ரீமதி சரஸ்வதி பாய். வாக்கு வன்மை மட்டுந்தானா? சங்கீதக் கலையில் அபார தேர்ச்சி வாய்ந்தவர். தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, மகாராஷ்டிரம், ஹிந்தி, கன்ன டம் ஆகிய பல மொழிகளில் விற்பன்னர். ஒழுக்கத்தால் உயர்ந்தவர்; வினயத்தில் சிறந்தவர்; பகவானிடம் பரிபூரண பக்தி கொண்டவர்; அதற்கு ஒரு படி அதிக மாகக் குருவினிடம் பக்தி வாய்ந்தவர்.

"பெண் குலத்தின் வெற்றி" என்று மகாகவி பாரதியார் பாடினாரே, அவரு டைய அருள்வாக்கினுக்குப் பிரத்யட்சப் பிரமாணமாக இன்று நம் முன்னால் விளங்கி .வருகிறவர்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் சென்னை எழும்பூரில் உயர்குலத்துப் பெண்கள் சிலர் சேர்ந்து 'மாதர் சங்கம்' ஒன்று ஸ்தாபித்தார்கள். சங்கம் ஒருவா றாக நடந்து வந்தது. ஆனால் சங்கத்தில் மாதர்கள் கூடி என்ன செய்வது என்பது பற்றி ஒன்றும் தெளிவாகவில்லை. இத னால் 'மாதர் சங்கம்', அதில் சேர்ந்திருந்த பல மாதர்களுக்கு 'மாதர் சங்கடமாக' நடந்து வந்தது.

ஒருநாள் மாதர் சங்கத்தைச் சேர்ந்த பெண்மணி ஒருவர், பத்து வயதுச் சிறுமி ஒருத்தியைச் சங்கத்துக்கு அழைத்து வந்தார். "இந்தப் பெண் பிரசங்கம் செய் யப் போகிறாள்; எல்லாரும் கேளுங்கள்!" என்றார். ஏதோ தமாஷ் என்று நினைத் துப் பெண்மணிகள் வந்து கூடினார்கள். அந்தச் சிறுமி பிரசங்கம் செய்தாள். பிர சங்கத்துக்கு நடுவில் இரண்டொரு பாட்டுக்களும் பாடினாள். வேடிக்கை என்று எண்ணி வந்த பெண்மணிகள் மெய்மறந்து கேட்டு மகிழ்ந்தார்கள்.

தற்செயலாக அன்று மாதர் சங்கத் துக்கு ஸர் சங்கரன் நாயர் வந்திருந்தார். ஹைகோர்ட்டு ஜட்ஜு பதவி, காங்கிரஸ் அக்கிராசனர் பதவி முதலிய பெரிய பதவிகளை வகித்தவர். சமூக சீர்திருத்தங் களில் மிக்க அக்கறையுள்ளவர். மாதர் சங்கத்தில் என்ன நடக்கிறது என்று பார்த்துவிட்டு, லேடி சங்கரன் நாயரை வீட்டுக்கு அழைத்துப் போவதற்காக வந்தார் போலும். அவரும் அச்சிறுமியின் சங்கீத உபந்நியாசத்தைக் கேட்க நேர்ந்தது. "இந்தக் குழந்தையிடம் அபாரமான ஆற்றல் இருக்கிறது. அந்த ஆற்றலை வெளிக்கொணர்ந்து பிரகாசப்படுத்து வதற்கு முயற்சி செய்ய வேண்டும்" என்று ஸர் சங்கரன் நாயர் கூறிவிட்டுச் சென் றார். அவருடைய விருப்பம் அற்புதமான முறையில் நிறைவேறியது.

அதே சமயத்தில் அச் சிறுமியிடம் மறைந்து கிடந்த சக்திகளின் பெருமையை இன்னொருவரும் தெரிந்து கொள்ள நேர்ந்தது. அவர், அச்சமயம் கிறிஸ்துவக் கலாசாலையில் ஸம்ஸ்கிருதப் பேராசிரி யராயிருந்த திருவையாறு டி. கிருஷ்ணாச் சார் அவர்கள். சிறுமி சரஸ்வதிபாயைச் சங்கீதத் துறையிலும் காலட்சேபத் துறை யிலும் இணையற்றவராக விளங்கும்படி செய்யலாம் என்ற எண்ணம் பண்டித கிருஷ்ணாச்சார் அவர்களின் மனத்தில் உதயமாயிற்று. அதற்காகவே தம் வாணாளை அர்ப்பணம் செய்யத் தீர்மானித்தார். கலாசாலை ஆசிரியர் பதவியை விட்டு விட்டு, இந்த அரும் பெரும் பணியை மேற்கொண்டார்.

ஸ்ரீ கிருஷ்ணாச்சார் அவ்வாறு தீர் மானம் செய்த போது, தமக்கும் தமது சிஷ்யை சரஸ்வதி பாய்க்கும் எவ்வளவு சிரம சாத்தியமான இலட்சியத்தை ஏற் படுத்திக் கொண்டார் என்பதை அறிந்து கொள்வதே இந்தக் காலத்தில் கஷ்டமா யிருக்கும்.

காலட்சேபக் கலை அந்த நாளில் தமிழ்நாட்டில் மகோந்நதம் பெற்றிருந்தது. முதன் முதலில், தற்சமயம் வழங்கும் காலட்சேப பாணியை வகுத்துக் கொடுத்த தஞ்சாவூர் கிருஷ்ண பாகவதர், "இவருக்கு முன்னாலும் இப்படி ஒருவர் இருந்த தில்லை; இனியும் வரப் போவதில்லை" என்ற புகழை நிலைநாட்டி விட்டுச்



• சரஸ்வதி பாய்

சென்றார். ஆனால் அவருக்குப் பின்னால் வந்த பாகவதர்கள் சிலர் உண்மையில் தஞ்சாவூர் கிருஷ்ண பாகவதருடன் புகழுக்குப் போட்டியிட்டு வெற்றியும் கண்டார்கள். கும்பகோணம் பஞ்சாப கேச சாஸ்திரிகள், ஹரிகேசவ நல்லூர் முத்தையா பாகவதர், பண்டித லக்ஷ்ம ணாச்சார் ஆகியவர்கள் காலட்சேபக் கலையை மேலும் பிரசித்தி பெறச் செய் தார்கள். இவர்களுடைய பிராபல்யத்தைப் பார்த்து விட்டுச் சங்கீத வித்தையில் நிபுணர்களாயிருந்த கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதர், பாலக்காடு அனந்த ராம பாகவதர் முதலியோர் காலட்சேபத் துறையை மேற்கொண்டார்கள்.

இத்தகைய சூழ்நிலையிலேதான் பண்டித கிருஷ்ணாச்சார் சிறுமி சரஸ் வதிபாய்க்குக் காலட்சேபத் துறையில் பயிற்சி அளிக்க விரும்பினார்.

தென்னாட்டில் அப்போதிருந்த சமூக வாழ்வின் சூழ்நிலையும் அம் முயற்சிக்கு விரோதமாயிருந்தது. நாலு புருஷர்கள் உள்ள இடத்தில் பெண்கள் பேசுவதற்கே கூச்சப்படுவார்கள். பொது மேடையில் ஏறிப் பெண்கள் பேசுவதென்பது கனவி லும் கருத முடியாத காரியமாயிருந்தது. இதையெல்லாம் அறிந்திருந்தும் ஸ்ரீகிருஷ் ணாச்சார் அத்தகைய முயற்சியை மேற் கொண்டார்.

குருவுக்கேற்ற சிஷ்யையாக சிறுமி சரஸ்வதிபாய் விளங்கினாள். மூன்று நாலு வருஷங்களுக்குள் சங்கீதக் கலையைக் கற்று, பாஷா ஞானம் அடைந்து, இதிகாச புராணக் கதைகளையும் நன்கு அறிந்து, சபைகளில் காலட்சேபம் செய்வதற்குரிய தகுதியைப் பெற்று விட்டார். அப்போது ஒரு பெரிய இடையூறு குறுக்கிட்டது. 'சமுத்திரம் பொங்கி வந்து உலகத்தையே அழித்து விடப் போகிறது!' என்ற வதந்தி சென்னை நகரில் பரவியது. பதினாலு வயதுச்' சிறுமியான சரஸ்வதி பாய் அப்போது என்ன எண்ணினார் தெரி யுமா? "அடாடா! இவ்வளவு கஷ்டப் பட்டுச் சங்கீதக் கலையை அப்பியசித்துக் காலட்சேபம் செய்யவும் கற்றுக் கொண் டேனே? நாலு இடத்தில், ரஸிகர்கள் அடங்கிய சபைகளில், நான் காலட்சேபம் செய்த பிறகு கடல் பொங்கி வரக் கூடாதா? அதற்கு முன்னாலேயே கடல் பொங்கி வந்து உலகம் அழிந்து விட்டால், நான் கஷ்டப்பட்டுக் கற்ற கலை வீணாகி விடுமே?" என்று வருத்தப்பட்டார்.

நல்லவேளையாக, ஸ்ரீமதி சரஸ்வதி பாய் கவலைப்பட்டபடி விபத்து ஒன்றும் நேரிடவில்லை. குறித்த நாளில் கடல் பொங்கவும் இல்லை; உலகம்' அழியவும் இல்லை.

ஸ்ரீமதி சரஸ்வதிபாய் நாலு இடத்தில் நாலு சபைகளில் மட்டுமல்ல; – நாலா யிரம் இடங்களில் நாலாயிரம் சபைகளில்

காலட்சேபம் செய்து புகழ்பெற்றார். தென்னாட்டில் மட்டுமன்றி, வடநாட்டில் பூனா, பம்பாய், காசி, அயோத்தி, கல்கத்தா முதலிய இடங்களில் காலட்சேபம் செய்து ஆங்காங்குள்ள அறிவாளிகளான ரஸிகர்களைப் பிரமிக்கும்படி செய்தார். 1916-ம் ஆண்டில் பம்பாயில் காலட்சேபம் செய்தார். பம்பாய் கந்தர்வ மகா வித்யாலயத்தின் சார்பாகப் பண்டித விஷ்ணு திகம்பர் அவருக்குக் 'காயனபடு' என்ற பட்டத்தை அளித்தார். 1920-ல் பூனாவில் காலட்சேபம் செய்தார். பூனா மகா ஜனங்களின் சார்பாக **லோகமான்ய திலகர்** 'கீர்த்தனபாடு' என்னும் பட்டத்தை அவருக்கு நல்கினார். இன்னும் ஸ்ரீமதி சரஸ்வதி பாய் பல்வேறு இடங்களில் பெற்ற பட்டங்களின் ஜாபிதாவைப் பாருங்கள்:- சங்கீத சம்ஸ்கிருத வித்யாரத்ன, ஹரிகதாப் பிரசங்க மார்க்க தரிசினி, கீர்த்தன கண்டீரவ, சங்கீத மானிஷினி, சங்கீதரத்ன, சம்ஸ்கிருத பாஷா விசாரத அபிநவ சரஸ்வதி ஆகிய இவ்வளவு பட்டங்களையும், பண்டிதர்களும் வித்வான்களும் பிரமுகர்களும் ரஸிகர்களும் அடங்கிய சபையினர் வெவ்வேறு இடங்களில் அவருக்கு அளித்தார்கள்.

இத்தகைய மகோன்னத வெற்றியை ஸ்ரீமதி சரஸ்வதி பாய் சுலபமாக அடைந்து விடவில்லை. ஆரம்ப நாட்களில் கடல் பொங்கி வருவதைக் காட்டிலும் அபாயகரமான இடையூறுகள் எவ்வளவோ ஏற்பட்டன. "பெண்ணாய்ப் பிறந்தவள் ஒருத்தி புருஷர்கள் அடங்கிய சபையில் எழுந்து நின்று பேசுகிறதாவது? பாடுவதாவது? கலி முற்றிப் போய் விட்டது! கூடிய சீக்கிரத்தில் பிரளயமே வந்து உலகத்தை அழித்து விடப் போகிறது!" என்றெல்லாம் துர்மதியாளர்கள் சொன்னார்கள். ஸ்திரீகள் ஹரிகதை செய்வது என்று ஏற்பட்டு விட்டால் தங்களுடைய வியாபகத்துக்கும் பங்கம் வந்து விடுமோ என்று எண்ணிய பாகவதர்கள் மூர்த்தண்யமாக எதிர்த்தார்கள். "சரஸ்வதிபாயைக் கதைக்குக் கூப்பிட்டால் நாங்கள் வர மாட்டோம்" என்றார்கள்.

இத்தகைய எதிர்ப்புகளுக்கெல்லாம் ஈடுகொடுத்துத் தளர்வில்லாத மனோ தைரியத்துடன் நின்று ஸ்ரீமதி சரஸ்வதி பாய் மேலும் மேலும் முன்னேறி வந்தார்.

பெண்மணிகளில் தீரச்செயல்கள் புரிவோரை வீராங்கனைகள் என்று சொல்லுவதுண்டு. இதிகாசங்களில் சீதை, திரௌபதி, சுபத்திரை, சத்தியபாமா முதலிய வீராங்கனைகள் இணையற்று விளங்குகிறார்கள். இராஜபுத்திர நாட்டுப் பெண்கள் தங்கள் கணவன்மார்களையும், புதல்வர்களையும் போர்க்களத்துக்கு அனுப்பி விட்டுத் தாங்கள் தீயில் குதித்து இறந்து 'வீராங்கனைகள்' எனச் சரித்திரப் புகழ்பெற்றார்கள். ஜான்ஸி ராணி போன்று போர்க்களத்திற்கே சென்று போரிட்டு மடிந்த வீராங்கனைகளும் உண்டு.

சமூகத் துறையில் அர்த்தமற்ற சம்பிரதாயங்களையும் மூடத்தனமான கட்டுப்பாடுகளையும் உடைத்து எறிந்து விட்டு வந்து முன்னேற்றப் பாதையில் வழி காட்டுகிறவர்களையும் வீராங்கனைகள் என்று கூறலாம் அல்லவா? நம் காலத்தில் தென்னாட்டில் பிறந்த வீராங்கனைகளில் ஸ்ரீமதி சரஸ்வதி பாய் தலைசிறந்து விளங்குகிறார்.

ஸ்ரீமதி சரஸ்வதி பாயின் காலட்சேபங்களின் மூலமாக எத்தனையோ ஆயிரமாயிரம் ஜனங்கள் சங்கீத ரஸிகத் தன்மை பெற்றிருக்கிறார்கள்; இதிகாச புராணங்களின் சிறப்புக்களை அறிந்திருக்கிறார்கள். 'நந்தன் சரித்திரம்' ஒன்றின் மூலமாக மட்டும் ஸ்ரீமதி சரஸ்வதி பாய் தமிழ் மொழிக்குச் செய்திருக்கும் தொண்டு மகத்தானது.

ஸ்ரீமதி சரஸ்வதி பாய்க்கு இப்போது அறுபது பிராயம் ஆகிறது. இன்னமும் அவருடைய குரல் கணீரென்று ஒலித்து, எளிதில் எட்டமுடியாத இடங்களையெல்லாம் எட்டிச் சஞ்சரித்து, முத்து மழை பொழிவது போன்ற சங்கதிகளைப் பொழியக்கூடியதாயிருக்கிறது. அவருடைய வாக்கு வன்மையும் அவ்விதமே சிறந்து விளங்குகிறது. ●

**(கல்கி, மார்ச் 1, 1953)**

"மலேரியாவைப் பொறுத்தவரை, அரசாங்க மருத்துவர்கள் தேசிய மருந்துக் கொள்கை பற்றி நன்றாக, முழுவதுமாகத் தெரிந்து கொள்ளவே இல்லை. சுமார் 20 சதவிகித டாக்டர்கள், ப்ரைமா' - க்வினைன் மருந்தை கர்ப்பிணிப் பெண்களுக்குக் கொடுக்கக் கூடாது என்பதை அறிந்திருப்பதாகத் தெரியவில்லை. மலேரியா நோயாளிகள் இரத்த தானம் செய்யலாம் என்று ஐந்து சதவிகித மருத்துவர்கள் தெரிவித்திருக்கிறார்கள்! 'மலேரியாவா? ரொம்ப அபூர்வமான நோய் ஆயிற்றே!' என்று அபிப்ராயம் சொன்ன டாக்டர்களும் கிட்டத்தட்ட பத்து சதவிகிதம் பேர்!" - சென்னை மாநகராட்சி, சென்ற ஆண்டு வெளியிட்ட அதிர்ச்சியூட்டும் ஒரு புள்ளி விவரம்தான் இது.

கடந்த ஆண்டு ஏப்ரல் வரையிலான நான்கு மாதங்களிலேயே, மாநிலத்தில் தெரிவிக்கப்பட்ட பதினேழாயிரத்துச் சொச்சம் மலேரியா கேசுகளில், பத்தாயிரத்துக்கு மேல் சென்னை நகரில் மட்டுமே இருந்திருக்கின்றன. இந்த லட்சணத்தில், கிராமப் புறங்களைவிட நகரங்களில்தான் மலேரியா பற்றிய விழிப்புணர்வு அதிகம் இருக்கிறது என்று வேறு தெரிவிக்கிறது அந்த அறிக்கை!

**சென்னையில் மட்டும் இரண்டே கால் லட்சம் கொசு உற்பத்தி நிலையங்கள் இருப்பதாக ஒரு கணக்குச் சொன்னார் டாக்டர் கர். "என்ன கணக்கு இது?" என்று கேட்டோம்.**

சென்ற ஆண்டு மலேரியா ஒழிப்பு மாதம் கொண்டாடப்பட்ட போது, தேசிய மலேரியா ஒழிப்பு பிரசாரத் திட்ட இயக்குநர் டாக்டர் சிவலால், மலேரியா ஒழிப்புக்காக உலக வங்கி 800 கோடி ரூபாய் தர முன் வந்திருக்கிறது என்றார். இது ஏழு மாநிலங்களில் செலவிடப்படும் என்றும் சொன்னார். சரி, 'அதில் தமிழ்நாடும் உண்டோ?' என்று கேட்டோம். 'இப்போதைக்குக் கிடையாது. ஆனால் மலேரியா நோய் தீவிரமாகத் தாக்கும் பட்சத்தில், நிதி ஒதுக்குவது ஒன்றும்



## சென்னை நகரம் :

# கொசுக்களின் சாம்ராஜ்யம்; மலேரியாவின் கேந்திரம்!

பிரச்னையாக இருக்காது' என்றார். மலேரியா நோய்த் தடுப்புக்கும், மலேரியா பற்றிய விவரங்களைப் பிரசாரம் செய்வதற்கும் இந்த நிதி பயன்படுத்தப்படுகிறதாம்.

சென்னை முகப்பேரில் உள்ள மலேரியா ரீசர்ச் கண்ட்ரோல் நிலையத்துக்கு நாம் போனபோது, அதன் இயக்குநர் டாக்டர் இந்திரநீல் கர் (மலேரியா ஒழிப்பில் பணியாளர்கள் காட்டும் மெத்தனம் கண்டு வெறுத்துப் போன இவர், இப்போது இதிலிருந்து விலகி வேறு வேலைக்குச் சென்று விட்டார்!) சொன்ன தகவல் இன்னும் அதிர்ச்சியைத் தந்தது. 95-ஐக் காட்டிலும் 96-ல் மலேரியா கேசுகள் கிட்டத்தட்ட 43 சதவிகிதம் அதிகமாம்! அதிலும் இது



"நேற்று ஊர்வலத்தில், நீதானே எங்க தலைவர் கார்மேகம் 'ஒழிக - ஒழிக'ன்னு கத்தினது?"

"இல்லீங்களே, நான் 'கார்மேகம்'ன்னு மட்டும்தான் சொன்னேன்! கூட்டத்தில் உள்ள மத்தவங்கதான் 'ஒழிக - ஒழிக'ன்னு கத்தினாங்க!"

— எஸ்.என். மாடசாமி

மூளைப் பகுதியைத் தாக்கும் மலேரியா வகை.

ராயபுரம், சௌகார்பேட்டை, குறிப்பாகக் கொத்தவால்சாவடி, ஆகிய பகுதிகளில் மலேரியாத் தொற்று அதிகமாக இருக்கிறது. கொத்தவால்சாவடி ஒன்றே, இங்கே கொசுக்கள் பெருகக் காரணம் என்று சொன்னாலும், அதை அங்கிருந்து அகற்றிய பிறகு, சமீபத்திய புள்ளி விவரம் எதுவும் எடுக்கப் பட்டதாகத் தெரியவில்லை. அதனால் மலேரியா இந்தப் பகுதியில் குறைந்திருக்கிறதா என்று அறிந்து கொள்ள முடியவில்லை.

சென்னையில் மட்டும் இரண்டே கால் லட்சம் கொசு உற்பத்தி நிலையங்கள் இருப்பதாக ஒரு கணக்குச் சொன்னார் டாக்டர் கர்.

"என்ன கணக்கு இது?" என்று கேட்டோம்.

"ஓவர்ஹெட் டாங்குகள் 97,000. கிணறுகள் 89,000. நீர் சேமிக்கப்படும் 'சம்ப்' 23,000. சரிவர சுத்தம் செய்யப்படாமலும் மூடப்படாமலும் இருக்கிற இவையே இரண்டு லட்சத்தைத் தாண்டி விடவில்லையா?"

"இவற்றோடு, சுமார் ஒரு லட்சம் தண்ணீர்த் தொட்டிகள் திறந்தவாக்கில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவையும் கொசு உற்பத்தி ஆவதற்கு உகந்த இடம்தான்!" என்கிறார் கர்.

"ஹவுசிங் போர்டு தொகுப்பு வீடுகளில் - அதாவது அடுக்கு மாடிகள் கொண்ட வளாகங்களில் 71 சதவிகிதம் கொசு உற்பத்தியாவதைத் தடுக்க வழிவகை செய்யப்படாமலே இருக்கின்றன. குடிசைப் பகுதி மாற்று வாரியக் குடியிருப்புகளிலும் சுமார் 7000 இடங்கள் கொசு உற்பத்திக் கேந்திரங்கள் தாம். மாநில அரசின் நீர்த் தேக்க நிலைகளும் சரி, மத்திய அரசின் நீர்த் தேக்க நிலைகளும் சரி, கொசு உற்பத்தி ஆவதற்குச் சாதகமான சூழலில் அமைந்து இருக்கின்றன!"

வீடுகளில் திறந்தவாக்கில் சுமார் ஒரு லட்சம் தண்ணீர்த் தொட்டிகள் இருப்பதற்குக் காரணம், இம் மாதிரி வீடுகளில் தொடர்ந்து 24 மணி நேர நீர் வரத்து வசதி இல்லாததுதானாம்.

"சரி. சென்னை மாநகராட்சி இதற்கு ஏதும் நடவடிக்கை எடுக்கவில்லையா?"

"ஏழு அம்சத் திட்டம் ஒன்று கொண்டு வந்தது சென்னை மாநகராட்சி. கிணறுகளையும், 'சம்ப்'களையும், ஓவர் ஹெட் டாங்குகளையும் மூடி வைக்க உதவியது. மலேரியா கிளினிக்குகளை விரிவுபடுத்தியது. கொசு லார்வா (புழு) நிலையில் இருக்கும்போதே அவற்றை அழித்து விடுவது என்று தீவிரப்படுத்தியது" என்றார் டாக்டர் இந்திரநீல் கர்.

சுகாதாரத் துறை உதவி கமிஷனராயிருந்த போது மேற்படி ஏழு அம்சத் திட்டத்தை அறிமுகப்படுத்திய கே. கோபால், இப்போது வேறு துறைக்கு மாற்றப்பட்ட நிலையில், டாக்டர் எம். ராஜாராம் அந்தப் பதவியை ஏற்றுக் கண்காணிக்கத் தொடங்கியிருக்கிறார் – சமீபத்தில்.

"ஏழு அம்சத் திட்டம் என்ன ஆயிற்று?" என்று டாக்டர் ராஜாராமைக் கேட்டோம்.

"அறிமுகப்படுத்தியபோது இருந்த தீவிரம் இப்போது இல்லை என்றுதான் சொல்லுவேன். ஆனாலும் இப்படியே விட்டுவிடப் போவதில்லை. பணியாளர்களுக்கு உற்சாகம் ஊட்டியிருக்கிறோம். கூடவே, மலேரியா

ஒழிப்பு வேலையை 'லைட்'டாக எடுத்துக் கொண்டு மெத்தனமாக இருந்து விடாதீர்கள் என்றும் எச்சரிக்கை கொடுத்திருக்கிறேன். குறிப்பாக வட சென்னையில் தண்டையார் பேட்டையிலும், பேசின் பிரிட்ஜிலும் இப்போது அதிக மலேரியா கேசுகள் இருப்பதாக அறிகிறோம். இங்கே எங்கள் கவனம் இன்னும் அதிகமாக இருக்கும்!" என்றார்.

"ஒவ்வொரு மண்டலத்திலும் இருக்கும் துணை சுகாதார அதிகாரிகளை, தினசரி ரிப்போர்ட் தரும்படி கேட்டிருக்கிறோம். அன்றைக்கு என்ன செய்தார்கள் என்பதைப் பிற்பகல் கார்ப்பரேஷன் தலைமை அலுவலகத்துக்குத் தெரிவிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறோம். மலேரியா தடுப்பு ஒர்க் ஷாப் ஒன்றை நடத்த உத்தேசித்திருக்கிறோம். இது எல்லாம் தவிர, சலுகை விலையில் கிணறுகள், 'சம்ப்'புகள், ஓவர்ஹெட் டாங்குகள் இவற்றை மூட உதவும் சிமென்ட் மூடிகள் வழங்க மாநகராட்சி ஏற்பாடு செய்திருக்கிறது!"

சென்ற ஆண்டு, மலேரியா நோய் தீவிரமாகச் சென்னையை ஆட்டுவித்தபோது, டாக்டர் இந்திரநீர் கர் சென்னை மேயரைச் சந்தித்து நிலைமையை விளக்க முன் வந்தார். சுமார் 25 முறை அப்பாயின்ட்மென்ட் கேட்டு அலைந்தாராம். கடைசியில் ஓர் அதிகாரி, 'வேண்டுமானால் ஓர் ஐந்து நிமிடம் ஒதுக்குகிறோம். அதற்குள் மேயரைச் சந்தித்து 'விளக்கி' விட்டுப் போய்விட வேண்டும்' என்று ரொம்ப 'தாராள மனசு'டன் சொன்னாராம். டாக்டர் கர் நொந்து போய்த் திரும்ப வந்து விட்டாராம்!

**பா**ண்டிச்சேரியில் உள்ள 'வெக்டர் கண்ட்ரோல் ரீசர்ச் சென்டர்' என்கிற வி.ஸி.ஆர்.ஸி. நிறுவனத்துக்குப் போய் அதன் இயக்குநரான டாக்டர் பி.கே. தாஸ் என்பவரைச் சந்தித்துப் பேசினோம்.

"எண்பதுகளில் நாங்கள் இங்கே செயல்பட்டுக் கொண்டிருந்தபோது மக்கள் கொசுக்கடி இல்லாமல் நிம்மதியாகத் தூங்கினார்கள். யானைக் கால் நோயும் கட்டுப்பாட்டிலேயே இருந்தது...."

"அப்புறம் என்ன ஆயிற்று?"

"அப்புறம் அதற்கான நிதியை மாநில அரசிடம் கொடுத்தோம். அதாவது பாண்டிச்சேரி அரசிடம். அவர்கள் அத்தனை ஆர்வம் காண்பிக்கவில்லை. (எண்பதுகளில் அங்கே இயக்குநராக இருந்து, தற்போது ஓய்வு பெற்ற இயக்குநர் டாக்டர் ராஜகோபாலன் சொன்னார் : "எட்டு லட்ச ரூபாய் மான்யத்தையும் நாங்கள் அரசிடம் ஒப்படைத்தோம். ஆனால் அவர்கள் அந்தப் பணத்தில் வேறு டிபார்ட்மென்ட்டுக்கு ஆட்களைப் பணியில் அமர்த்திக் கொள்ள உபயோகித்துக் கொண்டு விட்டார்கள்!")

"தமிழ்நாட்டைப் பொறுத்தவரை உங்கள் அனுபவம் எப்படி?"

"உலக சுகாதார நிறுவனத்தின் உதவியுடன் தென்னாற்காடு, வடாற்காடு, நாகர்கோயில் பகுதிகளில் மலேரியா தடுப்புப் பணிகளை மேற்கொண்டோம். அப்போதெல்லாம் தமிழக அரசின் சுகாதாரத்துறை அக்கறையுடன் ஒத்துழைப்புத் தந்தது!" என்கிறார் தாஸ்.

"நம்மிடம் தொழில் நுட்பம் இருக்கிறது. திறமை இருக்கிறது. ஆட்கள் இருக்கிறார்கள். ஆனால் மேற்கத்திய நாடுகள் போல வேலை செய்ய மாட்டார்கள். அதுதான் பிரச்னை! மலேரியா வந்து சிரமப்படும் நபர்கள் அதிகம் யார்? கீழ்த்தட்டு மக்கள்தானே? கீழ்த்தட்டு மக்கள் பற்றி யார் இங்கே கவலைப்படுகிறார்கள்?" என்கிறார் தாஸ், காட்டமாக.

ஆக, மலேரியாவையும், யானைக்கால் நோயையும் முழுவதுமாக இல்லாவிட்டாலும், அதிக அளவு தடுக்கவும், குணமாக்கவும் முடியும். ஆனால் ஊழியர்களின் அக்கறை இன்மையும், மெத்தனமுமே முக்கிய காரணங்களாக இருக்கிறபோது, யாரை நொந்து கொள்வது? ●

— சாருகேசி



"நாம போன ஜென்மத்திலயும் காதலர்கள்தான் போல!"

"எதை வச்சி சொல்ற?"

"உங்கள எப்பவோ கைவிட்ட ஞாபகம் என் மனசுல அடிக்கடி வருது!"

– அம்பை தேவா

வையவன்

ரயில் போய் ஸ்டேஷன் காலியாகி, கடைசிப் பயணியாக நடந்து வந்தான் கான்ஸ்டபிள் ஜெயசீலன். வேண்டுமென்றேதான். ஹோவென்று ஸ்டேஷன் விளக்குகள் பளிச்சிட்டன.

முன்னால் ஃபாதர் பிரான்சிஸ் ஐந்தாறு அடி தூரத்தில் நடந்து போய்க் கொண்டிருந்தார். அவரைத் தவிர்க்க வேண்டும்.

அவர் தோளில் மாட்டியிருந்த பிளாஸ்டிக் பை அவரது அங்கியோடு உரசி உரசி ஒரு சீழ்க்கை ஓசை வந்தது. அந்த ஓசைக்குப் பின்னணியாக அவரது லெதர் ஷூ ஒரு தாள ஒலி கொடுத்தது.

அவருக்கும் தனக்கும் இடையிலான இடைவெளியைக் கூடுமானவரை அதிகரிக்க ஜெயசீலன் முயன்றான். முடிந்தது ஆறடிதான்.

ஜெயசீலனுக்கு ஃபாதர் பிரான்சிஸோடு அப்படி ஒன்றும் எந்த விரோதமோ பிணக்கோ இல்லை. இருவரும் காட்பாடியில் ஒன்றாகத்தான் ரயிலேறினார்கள். 'கவுண்டரில்' ரயில் டிக்கெட் வாங்க நீண்ட 'க்யூவில் அவர் நிற்பதைப் பார்த்து உதவக்கூட முன் வந்தான்.

தான் முகம் திருப்பிக் கொண்டு போயிருக்கலாம்தான்! முடியவில்லை. முடியுமா? சொந்த ஊரில் கண்ணுக்குத் தெரியாத ஓர் ஒளி வட்டம் பெற்ற பெரிய மனிதர், சராசரி நபராக க்யூவில் டிக்கெட் வாங்க நிற்கும்போது புறக்கணித்துப் போக முடியுமா?

"வேண்டாமே!" என்று ஒரு நன்றிப் புன்னகையோடு தலைசைத்து, அவன் செய்ய விரும்பிய சேவையை அவர் மறுத்து விட்டார்.

அதுதான் ஃபாதர் பிரான்சிஸ். டிபிகல் நீதிமான். தெரிந்ததுதான். தர்ம விரோதமான காரியங்களை அறவே ஒதுக்குகிற இவர் போன்றோருக்கு இன்று என்ன பெயர்?

அவரைத் தற்பொழுது மட்டுமல்ல; எப்போதுமே ஜெயசீலன் தவிர்க்க விரும்பியிருக்கிறான்.



# முகவரி தொலைந்த முகங்கள்

காரணம் சிம்பிள். தூக்கலான தூய்மை! வந்தனம்.

அதன் பீடத்தில் அது இருக்கட்டும். ஒரு கோயில் கோபுரம் போல ஒரு மியூஸியம் எக்ஸிபிட் போல. அவரவர் சுதந்தரம்.



தொந்தரவு எதற்கு? அது அவ்விடம். நாம் இவ்விடம். எல்லைகளுக்கு மரியாதை உண்டு. அது ஓர் அத்தியாவசியம்.

இப்படித்தான் ஜெயசீலன் இதுவரை அவரைத் தவிர்த்திருக்கிறான்.

ஃபாதர் பிரான்சிஸ் விவரமானவர். கனிவு, வினயம், மரியாதை இவற்றோடு ஒரு கூரிய உணர்திறன் சாமான்ய விஷயமில்லை. அவருக்கு வாய்த்திருந்தது.

அவன் தவிர்ப்பதை உணர்ந்து தாமும் தவிர்த்திருக்கிறார். எந்த மனவாட்டமும் இன்றி சகஜமாக.

நெருங்கிய எதிர்ப்படல் காட்பாடி க்யூவில்தான்.

அதுவும் நீர்ச்சுழி போல் மறைந்து போயிருக்க வேண்டும்.

தப்பு தன்னிடம். வாய் கொடுத்திருக்கக் கூடாது.

"எங்கே ஃபாதர்? சி.எம்.சி.க்கு வந்தீங்களா?" அவன் கேட்டான். ஒரு மரியாதைக்கு.

"இல்லே. சென்ட்ரல் ஜெயில் வரைக்கும்" என்று புன்னகையோடு பதில் சொன்னார் ஃபாதர் பிரான்சிஸ்.

அத்துடன் நிறுத்தியிருக்கலாம். அவரது தவிர்க்க முடியாத ஈர்ப்பு அவனை மேலே பேச விட்டது.

"யாராவது தெரிஞ்சவங்க இருக்காங்களா?"

"இல்லே."

அவர் கச்சிதமாக மீண்டும் சிரித்து நிறுத்தி, "ஓர்து சாமியைப் பார்க்கப் போயிருந்தேன்" என்றார்.

ஜெயசீலன் முகம் சட்டென்று மாறிற்று. அது ஓர் உதை. ஜெயசீலனின் பிடரி மேல் விழுந்த பலமான உதை. நாளைக்குத் தேதி இருபத்தியேழா?"

ஓர்துசாமிக்கு நாளைக் காலை தூக்கு. ஃபாதர் 'கன்ஃபெஷன்' வாங்கவும், அவனுக்காக ஜெபம் சொல்லவும் போயிருப்பார்.

சட்டென்று அவர் பார்வையில் சகல பாவங்களையும் மன்னிக்க மன்றாடுகிற ஒரு துயரம் கண்டான் ஜெயசீலன்.

இவருக்கும் தெரிந்திருக்கும்! ஊரில் பலருக்குத் தெரிந்தது இவர் காதிலும் விழுந்திருக்குமே. சட்டென்று தலையசைத்து அவன் அகன்றான். ஒரே பெட்டியில் பயணம் செய்ய நேருமோ என்று பயந்து தவிர்த்தான்.

சலவன்பேட்டை சாராயக் கிடங்கில் லூர்துசாமியைப் பிடித்தது அவன்தான். எப்.ஐ.ஆர். எழுதியதும் அவன்தான்.

ஏன்? கொலையுண்ட பிச்சுவா முருகேசனின் 'பாடி'யை போஸ்ட் மார்ட்டத்திற்குத் துணி சுற்றிக் கொண்டு போனதும் ஜெயசிலன்தான்.

இது தொழில். டூட்டி. ஆறு வருஷ சர்வீஸில் ஜெயசிலன் பக்குவமாயிருந்தான். அவன் பிடிக்கிற கேஸ்களுக்கு என்று ஒரு ராசியோ என்னவோ? இது எட்டாவது தூக்கு.

கொலையுண்ட முருகேசன் மனைவி கிதா ராணி விவகாரம்? அதுவும் இவர் காதில் விழுந்திருக்கலாம்.

முருகேசன் வழக்கில் ஜட்ஜ்மெண்ட் சொன்ன தேதியில் அவன் வேலூரில்தான் இருந்தான். ஒரு எஸ்கார்ட் டூட்டி. இன்றைக்கு மாதிரியே.


**"அதிக உயரத்துக்குப் போகாதீங்கன்னா, கேட்டீங்களா?"**

**"அதனால என்ன?"**

**"அதோ பாருங்க; மேனகை, ஊர்வசி இரண்டு பேரும் லிஃப்ட் கேட்டுக்கிட்டு நிற்கிறாங்க!"**

**– என்.வி. ரமணி**

வந்த வேலை முடிந்ததும் ஊர் திரும்பியிருக்கலாம். ஆனால் சவுத் ஸ்டேஷனில் லூர்துசாமிக்குத் தூக்கு விஷயம் பேச்சுவாக்கில் அடிபடவே அவன் அன்றிரவு வேலூர்லேயே தங்கிவிட்டான். மனசு கெட்டு விட்டது.

அதே கண்றாவி ஜே.கே.எம் வாட்ஜ்தான். அவன் அடிக்கிற கூத்தை அது ஒன்றுதான் தாங்கும்.

ஜெயசிலன் வந்திருக்கிறான் என்று கேள்விப்பட்டு, கிதா ராணி தேடிக் கொண்டு வந்து விட்டாள்.

மாலை ஏழு மணிக்கே தொடங்கி இரவு ஒரு மணி வரை ஜெயசிலன் குடித்தான்.

இரண்டு முறை 'ரூம் பாய்' போய் வங்கி வந்தான்.

இரண்டாவது முறையின்போது கிதா ராணி தடுக்க முயன்றாள்.

"ஒதைபடப் போறடீ கஸ்மாலம்" என்று ஆக்ரோஷமாக இரண்டு கெட்ட வார்த்தைகளைப் பிரயோகித்தான் ஜெயசிலன்.

ரூம் பாய் பழகியவன். பொருட்படுத்தாமல் போய் வாங்கி வந்தான்.

பாட்டில் வந்த பின்பு கிதாராணி தளரவில்லை. பயப்படவும் இல்லை. தடுத்தாள். உதைபட்டாள்.

ஜெயசிலனுக்கு அன்று ஓர் உபரி மிருகாம்சம் வேண்டியிருந்தது. கிதாராணியை பளார் பளாரென்று இரண்டு முறை கன்னத்தில் அறைந்தான்.

அவளைச் சுவர் ஓரம் தரதரவென்று இழுத்துப் போய், அவள் பின் மண்டையை மும்முறை சுவரில் இடித்தான்.

அவன் எந்த சித்திரவதை செய்தாலும் தாங்கத் தயார் என்று சவால் விட்ட அவளது உடல்வாகு, அவர் பார்வை, அடமூடமே என்ற அவளது சிரிப்பு எல்லாமே அவனை மிரட்டின.

அவன் கட்டிலுக்குத் திரும்பி வந்தான். அருகாமையில் மேஜையில் இருந்து மீண்டும் கிளாஸை நிரப்பிக் கொண்டான்.

"லூர்துசாமி உன்னை வெட்டியிருக்கணுண்டீ" என்று கத்தினான். கிளாஸைக் காலி செய்தான்.

"ஏன் அவனுக்கு நான் என்ன கட்டின பெண்டாட்டியா?"

அவள் சிரித்துக் கொண்டே சாவகாசமாகக் கேட்டாள். அந்தச் சிரிப்பில் அவன் மிருகாம்சம் குறித்து ஏளனமும் கேலியும் தென்பட்டு, தான் மிகவும் நீசமானதாக ஜெயசிலன் உணர்ந்தான்.

"ஆமாண்டீ, நீ சொல்றது சரி! முருகேசன் ஒன்னை வெட்டியிருக்கணும். அவன்தான் ஒனக்குத் தாலி கட்டினவன். அவன் ஒன்னை வெட்டியிருக்கணும்; இல்லே லூர்துசாமிய வெட்டியிருக்கணும்!" – ஜெயசிலன் வாய் குளறக் கத்தினான்.

கிதாராணி மறுபடியும் சிரித்தாள்.

"இப்ப என்னா கொறைஞ்சு போச்சு? நீ வேணும்னா என்னை வெட்டிடு!" கண்களை இடுக்கி அவனைப் பரிகாசம் செய்வது போல் பார்த்து, பெண்டுலம் போல் இரண்டு விழிப்பாவைகளையும் உருட்டி உருட்டி

மீண்டும் ஜிதாராணி சிரித்தாள்.

உன்னால் முடியுமா? திராணி உண்டா? எல்லாமே கேட்டன.

தான் சாக்கடைப் புழுவானதாக ஜெயசிலன் உணர்ந்தான். இனி மீட்சி இல்லை. நெளிந்து நெளிந்து அழுக வேண்டியதுதான்.

திடீரென்று ஒரு திரை கிழிந்தது போல அவன் வலிந்து வரவழைத்துக் கொண்ட மிருகாம்சம் அவனைக் கைவிட்டது.

ஜெயசிலன் முதல் முறையாக விம்மி அழத் தொடங்கினான். இந்த உத்தியோகம்... குற்றங்களோடும் குற்றவாளிகளோடும் கோத்து வாங்கிக் கோத்து வாங்கி, தான் வீழ்ந்திருக்கும் படுகுழி.

அவன் தனக்காகக் கதறிக் கதறி அழுதான். அடுத்து ஜிதாராணிக்காக! அவளை ஏன் ஏன் ஏன் எவருமே உந்தி இழுத்துக் கை தூக்கிவிட்டு மேன்மைப்படுத்த முயலவில்லை என்பதற்காக.

ஜிதாராணியின் கவர்ச்சிக்குப் பின் ஒரு சோகம் தெரியும். ஆண்களின் காலில் மிதிபட்டு அழியப் பிறந்த சோகம் அது. முருகேசனின் போஸ்ட் மார்ட்டத்திற்கு பிரேதத்தைக் கொண்டு போனதிலிருந்து தொடங்கிய சந்திப்புகள் அவளோடு ஒரு சகவாசமானதற்காக அவன் அழுதான்.

அவள் அதை விரும்பவில்லை.

"பொட்டை மாதிரி அழாதேய்யா."

அவன் நிறுத்தவில்லை.

ஜிதாராணி அவனுடைய பௌருஷத்தை மீட்க முயன்றாள்.

ஓங்கி ஓங்கி அவன் கன்னத்தில் இரு முறை அறைந்தாள். தலையை பலமாகப் பிடித்து உலுக்கு உலுக்கென்று உலுக்கினாள்.

ஜெயசிலன் தெளியவில்லை.

அவள், நாற்காலியில் அவனையே வெறித்துப் பார்த்தபடி சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள்.

"எதுக்குய்யா அழுவறே?"

அவன் தோளைப் பிடித்து உலுக்கியவாறே கேட்டாள்.

"அழகான பொண்டாட்டியாவும் ஒணும்! அவ அவுசாரியாயிடுவாளோங்கற பயமும் ஒணும். இதானேய்யா ஒங்க ஆம்பளைப் புத்தி?"

ஜெயசிலன் அழுவதை நிறுத்தினான். போதை கொஞ்சம் தெளிந்து வந்தது.

"இவங்கிட்ட ஒறவாடி? அவங்கிட்ட ஒறவாடி? என்னா கேள்வி? என்னா கொச்சலு? அப்பப்பா... மனுஷனாய்யா அவன்! என்னை மூஞ்சு, மொகம் தெரியாத அடிச்சு ஒதுடு வீங்கி போத்திக்கினு படுத்திருந்ததைப் பார்த்துத்தாய்யா அந்த லூர்துசாமி ஒரே வீச்சிலே சீவிட்டான் அந்தப் படுபாவிய."

ஜெயசிலன் இன்னும் குடிக்க விரும்பினான்.

இவள் அனுமதிக்க மாட்டாள்.

தள்ளாடியவாறே எழுந்து பாத்ரூமுக்குப் போய் வந்தான்.

"நானும் வயசுக்கு வந்த நாள் தொட்டுப் பார்க்கறேன்! ஒருத்தன் மூஞ்சியிலயும் ஒரு மரியாதை இல்லய்யா. நான் பொம்பளை. இன்னா பண்றது? அவனைக் கொல பண்ணிட்டு தூக்குக்குப் போகப் போறானே இவன் என்னாய்யா யோக்கியம்? எப்ப அவனோட படுப்பேன்னு நாக்கைத் தொங்கப் போட்டு நாயா அலஞ்சான்."

ஜெயசிலன் வாஷ் பேஸினை நெருங்கி பைப் திறந்து வாய் கொப்புளித்து முகம் கழுவினான்.



**"தலைவர் என்ன பேச்சுக்கு நடுவே 'நன்றாக எண்ணிப் பாருங்கள்'னு அடிக்கடி சொல்றார்!"**

**"போன தடவை கூட்டத்துக்கு வந்தவங்களுக்குக் குடுத்த காசு குறையுதுன்னு யாரோ கம்ப்ளெய்ன் பண்ணினாங்களாம்!"**

**- எல். கோபாலகிருஷ்ணன்**

ஜிதாராணி சந்தித்த அதே ஆண்கள் பட்டியலில்தான் அவனும் சேர்கிற விதி!

தவிர்த்திருக்கலாம். தவிர்த்திருக்க வேண்டும்.

என்ன கேட்கிறாள்?

ஒரு ஆம்பிளையாவது யோக்கியமா, மரியாதையா இருந்திருக்கீங்களாடா என்று தானே!

அவன் முகத்திலும் காறித்துப்பியது போல் பட்டது.

ஜெயசிலன் அன்று அவளை விட்டு விலகிப் படுத்தான். ஜிதாராணிக்கும் என்

"அந்த டாக்டர் சரியான சினி மாப் பைத்தியம் போல..."

"எப்படி சொல்றே?"

"நல்லதா ஒரு டானிக் எழுதித் தாங்க டாக்டர்'ன்னு கேட்டா, 'டைட்டானிக்'னு எழுதித்தர்றார்!"

– வடபழனி பாஜு



னவோ உறைத்திருக்கும். தொந்தரவு செய்ய வில்லை.

ரயில்வே ஸ்டேஷனின் கட்டப்பைக் கல் தாண்டியதும் திடீரென்று கரண்ட் ஆஃப். தெரு விளக்குகளும் சாலையோர வீட்டு வெளிச்சமும் திக்கென்று ஓய்ந்து இருட்டு.

பிரான்சிஸ் வெளியே நின்றிருந்தார்.

ஆட்டோ இல்லை. ஒன்பது மணி ரயில் போய்விட்டால் பன்னிரெண்டு வரை ஸ்டேஷன் ஒரு சூன்யம்.

நடக்க வேண்டியதுதான். இவரும் உடன் துணை வருவார்.

"ஃபாதர், நான் போய் ஒரு ஆட்டோ பிடிச்சாரட்டுமா?"

ஓர் உபசாரத்திற்காகக் கேட்டான்.

கண் எட்டும் வரை நகரம் இருளில் சூழ்ந் திருந்தது.

அவரைப் புறக்கணித்து நடக்க ஓர் உபாயம் அவரே சொல்வாரா?

ஒரு நல்ல விஷயம். இருட்டு. முகத்துக்கு முகம் பார்க்கும் வாய்ப்பைத் தவிர்த்திருந்தது. சிறு நிம்மதி.

"இல்லே... வேணாங்க..."

ஃபாதர் ஃபிரான்சிஸ் குரலில் ஒரு தெளிவு.

"நடந்தே போயிடலாம்." அவர் மீண்டும் தொடர்ந்தார்.

இருவரும் ஒரே சாலையில்தான் நடக்க வேண்டும். ஜெயசீலனுக்கு நெளிய வேண் டும் போலிருந்தது.

மேலே வானில் நட்சத்திர வெளிச்சம். தூரத்தில் ஓரிரு லாந்தர்களும் மெழுகு வர்த்திகளும் கண் விழித்த சிறு வெளிச்சம்.

"இப்பல்லாம் அடிக்கடி பவர் கட் ஆவுது."

ஃபாதர் நடந்தவாறே பேசினார்.

"ஆமாம் ஃபாதர்." – ஜெயசீலன் முனகினான். ஓடிவிட வேண்டும் போலிருந்தது. நடக்காது. குறைந்தது இருபது நிமிஷமாவது கூட நடக்க வேண்டும். அப்புறம்தான் மெயின் ரோடு.

அந்த இருபது நிமிஷத்திற்குள் எந்த எக்கச்சக்கமான திசையையும் அவர் பேச்சு தொட்டு விடக் கூடாது.

"சின்ன வயசிலே கரண்ட் ஆஃப் ஆனா, ஒரே பயமா இருக்கும் எனக்கு."

"ம்ம்ம்..."

எந்த தர்மசங்கடமான கேள்வியும் கேட்க மாட்டேன் என்று மறைமுக உத்தரவாதம் அளிப்பதாக ஜெயசீலன் நினைத்தான்.

"அப்ப நான் ஒரு ஆர்பனேஜ்ல படிச்சுட் டிருந்தேன். மூணு தனித் தனி பிளாக். டைனன் ஹால்லேருந்து முதல் கூக்குரல் கௌம்பும்."

ஃபாதரின் குரல் நினைவாழம் தொட்டது.

"ம்ஹூம்."

"அது ஒரு கோரஸா எல்லாரும் ஒண்ணு சேந்து கத்துவாங்க. அடுத்து ரெண்டாவது ஹால் கத்தும். அதுவும் ஒரு கோரஸ்."

ஜெயசீலன் மூன்று பிளாக் கொண்ட ஒரு கற்பனை ஹாஸ்டலில் கோரஸ் கூக்குரலில் பங்கேற்றான்.

"அதுக்கடுத்து கொஞ்சம் சைலன்ஸ். அடுத்து மூணாவது பிளாக் காரங்க ஆரம்பிச் சுடுவாங்க."

"ஃபாதர் புன்னகை செய்து கொண் டிருக்க வேண்டும். இருட்டில் தெரிய வில்லை.

"இப்படியே ஒண்ணு மாத்தி ஒண்ணு மூணு பிளாக்கும் ரெண்டு மூணு தடவை கத்தி முடிச்சதும் என்னைப் பாட்டுப் பாடச் சொல்லுவாங்க."

"நீங்க பாடுவீங்களா ஃபாதர்?"

ஒரேயடியான மௌனம் இங்கிதமில்லை. அதனால் ஜெயசீலன் கேட்டான்.

"ஓ எஸ்... அப்ப என் குரல் ரொம்ப ஸ்வீட்டா இருக்கும்னு சொல்வாங்க. ஹை பிட்ச்ல பாடுவேன். கரண்ட் வர்ற வரைக்கும்

பாடிட்டே இருப்பேன்."

ஜெயசிலன் உறுத்தல் குறைந்த அந்த திடீர் அன்னியோன்யத்தில் லகுவானான். அது சுய புராணம் இல்லை. "நீங்க எங்கே படிச்சீங்க?" ஃபாதர் கேட்டார்.

"சொந்த கிராமத்திலே. கெஜல் நாய்க் கன்பட்டி."

"போயிருக்கேன். அங்கே ஒரு பேஸ்கட் பால் டீம் உண்டே? நம்ம ஏரியாவிலே ஒரு சூப்பர் டீம்."

"அது நாங்க உருவாக்கின டீம்தான் ஃபாதர்."

"ஐ ஸீ... நீங்க ஃஜோனல் மீட்ல வெள யாடி இருக்கீங்களா?"

"ஸ்டேட் வரைக்கும் வந்தோம் ஃபாதர். நல்ல கோச்சிங் இல்லே. இருந்திருந்தா நேஷனல் மீட் வரை போயிருக்கலாம்."

"ம்ஹூம்... சூழ்நிலைகள்! ஒரு வேடிக்கை சொல்லட்டுமா? நான் ஒரு பெரிய கர்நாடிக் லிங்கராகணும்னு ஆசைப்பட்டேன்."

லைட் இல்லாமல் எதிரில் வந்த ஒரு சைக் கிள் பேச்சுக்குரல் கேட்டு கிணு கிணு வென்று ஓயாமல் மணி முழக்கியது.

ஜெயசிலன் ஃபாதருக்குப் பின்னால் ஒதுங்கினான். சைக்கிள் கடந்ததும் ஃபாதர் தொடர்ந்தார்.

"முறையா ஆறு வருஷம் சங்கீதம் கத்துக் கிட்டேன். ஆர்பனேஜ்ல ஒரு பாட்டு வாத் தியார் சொல்லித் தந்தார். அப்புறம் இப்படி ஒரு திருப்பம். கர்த்தர் சித்தம்."

அவர் குரலில் ஆதங்கம் கடந்த ஒரு சமா தானம். நிகழ்ந்தவை பற்றி ஒரு நிச்சலனத் திருப்தித் தொனி.

இந்த நடைப் பயணத்தில் எங்காவது ஒரு கேள்வி போட்டு விடுவாரோ? ஒரு வேளை பேசிக் கொண்டு வருவதே ஒரு பீடிகையோ!

ஜெயசிலனுக்குக் குறுகுறுத்தது.

'கேட்டால் கேட்கட்டும்! ஆமாம் என்று தைரியமாக உண்மையை ஒப்புக் கொள்ள வேண்டும். ஷூர்துசாமி நீதி மன்றத்தில் வெளியிடாத உண்மை.

கிதாராணி தூண்டிவிட்டுத்தான் ஷூர்து சாமி முருகேசனைக் குத்திக் கொன்றான்.

ஃபாதர் குறுக்கிட்டார்.

"நீங்க பேஸ்கட்பால் பிராக்டிஸ் இப்ப பண்றதுண்டா?"

"இல்லீங்க ஃபாதர்."

"ஒரு போலீஸ் டீம் இருக்குமே!"

"இப்ப இல்லே."

"ஒரு பிளேயர் லைஃப் பூரா வெள யாடிட்டே இருக்கணும். முடியலேன்னா 'கேம்' பாத்துட்டே இருக்கணும். இன்னியத் தேதியிலே இங்கே எதுவுமே முடியலே. முடி யாது."

ஜெயசிலனின் பேஸ்கட்பால் பிராக்டிஸ் போனதற்கு வருந்துவது அவர் குரலில் வெளிப்பட்டது.

அவன் பதிலளிக்கவில்லை. அவர் தொடர்ந்தார்.

"ஆனா காலையிலே மாலையிலே வாக்கிங் போறப்ப நான் மெதுவா என் காதுக்கு மட்டும் கேக்கறாப்பலே பாடிட்டே நடப்பேன். எதுவும் மறந்துடக் கூடாது இல்லே."

இதோ பேச்சு அபாய எல்லையை நெருங்கி விட்டது.



**"எதுக்காக அந்த இன்ஸ்பெக்டர வேலையை விட்டு சஸ்பெண்ட் பண்ணி வெச்சிருக்காங்க?"**

**"பிளேடு பக்கிரியோட பொண்ணு கல்யாண ஊர்வலத்துக்கு ஸ்டேஷன் ஜீப்ப இரவல் கொடுத்தாராம்!"**

**– வி. வெங்கட்**

"ம்யூஸிக்... கேம்ஸ். ரெண்டுமே சூப்பரான விஷயம். மனசை அப்பப்ப க்ளீன் பண் ணிட்டே இருக்கற விஷயம்."

அடுத்த வார்த்தை என்ன?

ஜெயசிலன் ஒரு பதற்றத்தோடு எதிர் பார்த்தான்.

சாலையோரத்தில் ஒரு காடா விளக்கு எரிந்த பெட்டிக் கடையில் பெரிய மண் தொட்டியில் கோலி குண்டு சோடாப்புட்டி களின் மீது விளக்கொளி அசைந்தாடியது.

"தாகமா இருக்கு. ஒரு சோடா குடிப் பமா?" ஃபாதர் கடையோரம் நின்றார்.

"குடிக்கலாம் ஃபாதர்."

ஜெயசிலன் கடையை நெருங்கினான். இரண்டு கோலி சோடா உடைக்கச் சொன் னான். உள்ளூர் சரக்கு. வீரியம் கொப்



"ஹலோ! மிஸ்டர் குப்புசாமி இருக்காரா?"
"மானேஜர் குப்புசாமியா, பியூன் குப்பு சாமியா?"
"யாரு கண்டா, மானேஜர்னு சொல்லித் தான்என் கழுத்துல தாலி கட்டினார்!"
– சீர்காழி ரேவதி

புளித்தது.

ஜெயசீலனைக் காசு கொடுக்க விடாமல் அவர் முந்திக் கொண்டார்.

ஒரு சிறு ஏப்பம் விட்டுக் கொண்டு ஃபாதர் நடந்தார்.

"நம்ம ஊர்ல எல்லாமே 'கரப்ட்' ஆயிப் போச்சு. ஆனா இந்த சோடா மட்டும் சுத்த மாகவே இருக்கு."

"ம்ஹ்ம்ஹம்ஹ்" அவன் அரை குறை யாய்ச் சிரித்தான்.

அவர் மேலே தொடர்ந்தார்.

"ஒரு பெரிய கர்னாடிக் ஸிங்கராயிட்டு ஆர்மியிலே சேரணும்னு நெனச்சேன். சம்பந் தமே இல்லாத ஆசை. சம்பந்தமே இல்லாமப் போயிடுச்சு. கர்த்தர் சித்தம்."

ஃபாதர் சிரித்துக் கொண்டது கேட்டது.

"ஒங்களுக்கு இப்படி ஏதாவது 'ஆம் பிஷன்' உண்டா?" அவனைக் கேட்டார்.

ஒன்றா இரண்டா? எதைச் சொல்வது? ஒன்றையாவது சொல்ல வேண்டும்.

"ஒரு பைலட் ஆகி ஒலகம் பூரா விமானம் ஓட்டணும்னு நெனச்சிருக்கேன் ஃபாதர்."

ஜெயசீலன் தொலைந்து போன தன் இளமைக் கனவுகளைத் தேடி எடுத்தான்.

"சூப்பர்."

ஃபாதருக்கு சூப்பர் என்ற வார்த்தை மிகவும் பிடிக்கிறது என்று ஜெயசீலன் கருதி னான்.

"அற்புதமான ஆசைதான்."

எதிரில் வந்த ஒரு காரின் ஹெட்லைட் இருவரையும் தாற்காலிகமாகப் பிளந்து மறைந்தது.

"இதெல்லாம் ரொம்ப அற்புதமான விஷ யங்க. அடிக்கடி நெனச்சுக்கிட்டே இருந்தா நல்லா இருக்கும். ஒரு சந்தோஷம் நம்மளைத் தொடச்சுத் தொடச்சு பளபளப்பா சுத்த மாவே வச்சிருக்க உதவுது." ஃபாதர் தொடர்ந் தார்.

ஃபாதர் நீங்கள் எதைச் சொல்ல வருகி றீர்கள்? அதையெல்லாம் இழந்துவிட்டோம் என்றா? இழக்காதே என்றா? சுத்தமாய் இரு என்றா? இல்லை லோ வால்ட்டேஜ் உப தேசமா?

ஜெயசீலன் புரிந்து கொள்ள முயன்றான். பிடிபடவில்லை.

அதற்குள் மெயின் ரோடு வந்து விட்டது. அவர் வடக்கே போவார். தான் தெற்கே போக வேண்டும்.

"சரி... நான் வரட்டுமா?"

இன்னும் டவுனுக்கு மின்சாரம் மீள வில்லை. அதனால் முகம் தெரியவில்லை.

"செய்யுங்க ஃபாதர்."

இருட்டிலேயே அவர் ஜெயசீலனின் கை தொட்டார். வெகு இதமாக உள்ளங்கை பற்றி மென்மையாக அவன் கையைக் குலுக் கினார்.

'மீள முடியவில்லையென்றாலும் முயற்சி செய் நண்பா' என்பது போல் ஏதோ ஒரு பிரியமான பரிவு அதில் தென்பட்டது. மெது வாகக் கனிவாகக் குலுக்கினார்.

தன் வாழ்நாளில் தான் இவ்வளவு அதிக பட்சமாக கௌரவிக்கப்பட்டதே இல்லை என்பதை ஜெயசீலன் உணர்ந்தான்.

மறுநாள் காலை குளித்து விட்டு, ஒன்பது மணிக்கு சிவன் கோயிலுக்குப் போக வேண் டும் என்று முடிவு செய்து கொண்டான்.

ஒன்பது மணிக்குள் லூர்துசாமியைத் தூக்கிவிட்டு விடுவார்கள்.

சிதாராணியை நினைத்தான்.

உயிரை உறிஞ்சும் அந்தக் கவர்ச்சிக்கு இரையான அடிமைத்தனமும், அதனோடு உடன் இணைந்திருந்த வெறுப்பும் அந்த நிமிஷம் ஒதுங்கி விட்டன.

ஜேகேஎம் லாட்ஜில் தான் குடித்துவிட்டு அழுததை எண்ணினான். அவனை எவரா வது எப்போதாவது கௌரவத்திருப்பார் களா? ஒருமுறை! உன்னார்ந்த மரியாதை யோடு ஒரு முறை? ஒரே ஒரு முறை. பெரு மூச்சு வந்தது.

சின்னாபின்னமாகச் சிதறுண்டு தான் போயிருக்கிறது எல்லாமே! இருப்பினும்... இருப்பினும்.. யோசித்தவாறே சில அடிகள் நடந்ததுமே பளிச்சென்று மின்சாரம் மீண்டது.




# 2 கோடிக்கு மேலான முதலீட்டாளர்களுக்கு தன் பொறுப்பை நிறைவேற்றி வருகிறது.

## 20% வருவாய் விநியோகத்தை அறிவிக்கிறது.

கடந்த 34 ஆண்டுகளாக யூ எஸ் 64 திட்டத்தில் மக்கள் தங்கள் நம்பிக்கையை வைத்தனர், அதனால் சிறந்த பலனையும் பெற்றனர். பாதுகாப்பு, எளிதாக ரொக்கமாக்கும் வசதி மற்றும் கவர்ச்சிகரமான ஆதாயங்கள் போன்ற நன்மைகளை அவர்கள் அனுபவித் துள்ளனர். அவர்களுடைய முதலீடு ஆண்டாண்டு வளருவதையும், அவர்கள் கண்டார்கள். இப்போது யூ எஸ் 64, 20% வருவாய் விநியோகத்தை மீண்டும் அறிவித்துள்ளது. விசேஷ ஜூலை வழங்கீடான யூனிட்டிற்கு ரூ.14.00 விலையில் யூ எஸ் 64 திட்டத்தில் முதலீடு செய்ய இதுவே ஒரு நல்ல வாய்ப்பு. மேற்கொண்டு விவரங்களுக்காக, உங்கள் அருகமைந்த யூடிஐ கிளை அலுவலகத்தை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும்.

***விசேஷ ஜூலை வழங்கீடு ரூ. 14.00 ஜூலை 31 வரை மட்டுமே.***



## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

*உங்கள் மேலான எதிர்காலத்திற்கு*

ம்யூச்சுவல் பண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் எல்லா முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்படுபவையாகும். NAV ஏற்ற தாழ்வுகள் ஷேர் மார்க்கெட்டில் நிலவும் காரணங்களுக்கேற்ப மேலேயோ கீழேயோ போகலாம். கடந்த கால சாதனை வருங்கால தீர்வுக்கான உத்தரவாதம் அல்ல. யூ எஸ் 64 என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே தவிர திட்டத்தின் தரத்தையோ வருங்கால வளர்ச்சி அல்லது லாபத்தையோ குறிப்பிடவில்லை. திட்டத்தின் குறிக்கோள்களை அடையும் உத்தரவாதத்தையும் அளிக்கவில்லை. முதலீடு செய்வதற்கு முன் ஆஃபர் டாகுமென்டை கவனமாக படிக்கவும்.

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன் : 517101.

கிளை அலுவலகங்கள் : • கோயம்புத்தூர் போன் : 214973 • சென்னை போன் : 517101, 517190 • மதுரை போன் : 38186 • திருச்சி போன் : 760060

SISTA SAATCHI & SAATCHI - 264/98 C

டல்லஸ் மாநகரில் உணவுக் கண்காட்சி. ஆண்டுக்கு ஒருமுறை நடக்கும் மிகப் பெரிய உணவுப் பொருட்காட்சி. புதிய பொருளை அறிமுகப்படுத்தவும், பெரிய நிறுவனங்கள் தங்களை விளம்பரப்படுத்தி, நிலைநிறுத்திக் கொள்ளவும் சுமார் 400 கம்பெனிகள் வருவார்கள். உணவுப் பொருட்களை விற்பனை செய்யும் பெரிய 'செயின் ஸ்டோர்' நிர்வாகிகளும், மற்றும் பெரும் வியாபாரிகளும் அங்கே வருவார்கள்.

இத்தகைய பொருட்காட்சிகள் மிக முக்கியமானவை. போட்டி நிறுவனங்களின் தன்மையையும், வலிமையையும் அறிந்து கொள்ள இது ஒரு வாய்ப்பு. பொது மக்களிடம் விற்பதற்கு, என்ன புதிய

"நீங்கள் இதே தரமுள்ள பொருட்களை ஒழுங்காக உற்பத்தி செய்து, நியூயார்க்கிலுள்ள எங்களுக்கு அனுப்ப முடியுமா?" என்றார்.

"நிச்சயமாக!" என்றேன் நான்.

அவரது அடையாள அட்டையைப் பார்த்தேன். அது ஒரு பெரிய சினிமா, பெரிய புத்தக விற்பனை மற்றும் ஒரு பெரிய பத்திரிகையை உள்ளடக்கிய மிகப் பெரிய தொகு நிறுவனம். உணவுத் துறைக்கும் அவர்களுக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை!

அவர் சொன்னார்: "உங்களுடைய 'லோ கலோரி' உணவுப் பொருளும் அதன் ருசியும் நன்றாக இருக்கிறது. மற்றது இயற்கை உணவு. இந்த இரண்டு அம்சமும் எனக்குப் பிடித்திருக்கின்றன. இதைத்தான் நாங்கள்

# பில்லியன் டாலர்

## கம்பெனிக்கு ஆலோசகர்!

பொருட்கள் வந்திருக்கின்றன என்று தெரிந்து கொள்ளலாம். நம் தொழில் துறையிலுள்ள முக்கியமான புள்ளிகளுடன் தொழில் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளலாம். பார்க்க வருகின்ற அனைவரும் பெயர் பதித்த அட்டையை சட்டையில் ஒட்டிக் கொண்டு வருவார்கள். அதிலே அவர்களது நிறுவனத்தின் பெயரும் இருக்கும். சகஜமாக பெரிய பெரிய நிறுவனங்களுடன்தான் நான் பேச விரும்புவேன். மற்றவர்களை எனது சகாக்களைக் கூப்பிட்டு ஒப்படைப்பேன்.

ஒரு மனிதர் வெகு நேரமாக எங்கள் 'ஸ்டாலி'ன் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தார். விசாரிப்பவர்களின் கூட்டம் குறைந்தபோது, அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். அவர் முதலில் எங்களது உணவுப் பொருளின் உயர்ந்த தரத்தைப் பாராட்டினார். அடுத்து, அதில் எந்த செயற்கையான ரசாயனப் பொருளும் கலக்கப்படவில்லை என்பதை அறிந்த போது அவருக்குப் பல மடங்கு சந்தோஷம் ஏற்பட்டது.



எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். இதன் அடிப்படையில் பெரிய (Fast Food Store) 'விரைவில் உணவு தயாரித்து அளிக்கும் ஒரு உணவு விடுதி'யை ஏற்படுத்தத் திட்டமிட்டு வருகிறோம். எங்களுக்கு உங்கள் பொருளைத் தர முடியுமானால் நாங்கள் வாரம் ஆயிரம் பொருட்களுக்கு ஆர்டர் கொடுக்க முடியும். இது ஒரு ஆரம்பம்தான்!" என்றார்.

'சரி' என்று சொல்லியபின் விலாச அட்டையைப் பரிமாறிக் கொண்டோம்.

எங்களது புதிய உணவுப் பொருள், லேசாக (light) இருந்தது; அதே சமயம் மனத்திற்கு நிறைவையும், ஒரு குறிப்பிட்ட அளவிலேயே 'போதும்' என்கிற உணர்வையும் ஏற்படுத்திய ஒரு பொருள் அது.

நான் திரும்பி எங்கள் ஊருக்குச் சென்று விட்டேன். ஒரு மூன்று மாத காலம் கழிந்த பின் நியூயார்க் நிறுவனத்தின் துணைத் தலைமையதிகாரியிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. எங்களது மக்கள் தொடர்பாளர் உங்களைக் கண்டு டல்லஸில் பேசியது சம்பந்தமாக நாங்கள் உங்களைச் சந்தித்து விவாதிக்க விரும்புகிறோம். நியூயார்க்கிற்கு வர முடியுமா?" என்று எழுதிக் கேட்டிருந்தார்கள்.

நான் நியூயார்க் சென்றபோது அங்கே என்னுடன் 'இயற்கை உணவு' சம்பந்தமான ஒரு அருமையான நூலை எழுதிய பெண்மணி ஒருவரையும் அழைத்திருந்தார்கள்.

விஷயம் மிகப் பெரிய ஒன்று!

அதாவது அவர்கள் அமெரிக்காவில் இருக்கும் மிகப் பெரிய உணவு விடுதிகளான 'மெக்டானல்டு' மற்றும் 'பர்கர் கிங்' எனப்படும் விரைவில் உணவளிக்கும் உணவு விடுதிகளைப் போல, அமெரிக்கா பூராவும் நிறுவ திட்டமிட்டிருக்கிறார்கள். இந்தத் தாய் நிறுவனம் பெரிய பில்லியன் டாலர் நிறுவனம். இது ஒரு பெரிய திட்டம். இதை எல்லாம், நானாக உணர்ந்தேன்.

இயற்கை உணவு பற்றி என்னைப் பல கேள்விகள், சந்தேகங்கள் கேட்டார்கள். தங்களுடைய திட்டத்தைச் சொன்னார்கள். 'இது முடியும்வரை நமக்குள்ளே இருக்கட்டும்' என்றார்கள்.

என்னை டல்லஸில் சந்தித்த மக்கள் தொடர்பாளரைச் சந்தித்தேன். அவருடன் நெருங்கிப் பழகியதன் விளைவாக, ஆலோசனைக்காக நீ இவ்வளவு பணம் கேட்கலாம் என்று சொன்னார். ஒரு நாளைக்கு வந்துபோகும் செலவன்றி, ஆயிரம் டாலர்! 1980ல்! நான் மனதிற்குள் அசந்து போனேன்!

அதற்கு 'எனர்ஜி ஸ்டோர்' (Energy store) - சக்தி அளிக்கும் உணவுக்கடை என்கிற அர்த்தத்தில் பெயரிட்டிருந்தார்கள். அதன் வெளி அமைப்பு, உள் அமைப்பு



பற்றி என்னிடம் விவரமாகச் சொன்னார்கள். அங்கே விற்க இருக்கும் உணவுப் பொருட்களின் சுவை, மணம், தோற்றம் அதன் தரம் பற்றிய அனைத்திற்கும் என்னை பொறுப்பெடுத்துக் கொள்ளச் சொன்னார்கள்.

அங்கே முக்கிய அயிட்டம் 'பர்கர்'. மாமிசத்திலிருந்து தயாரிக்கப்படும் அடை போன்ற தட்டையான, ஆனால் வடை போன்ற வட்ட வடிவம் கொண்ட உணவு. லேசாக உப்பைப் போட்டு இந்த மாமிசத்தைப் பிசைந்து வடையாகத் தட்டி தோசைக் கல்லில் போட்டு சுட்டு எடுத்து, அதை ஒரு 'பன்'னுக்குள் வைத்துக் கொடுப்பார்கள். கூடவே தக்காளி சாஸ், வட்ட வடிவில் வெட்டப்பட்ட தக்காளி, வெங்காயப் பத்தைகள் மற்றும் நறுக்கப்பட்ட வெள்ளரிப் பிஞ்சு... இவை அனைத்தும் அந்த பர்கர் மீது அடுக்கப் பட்டிருக்கும். மாமிசம் சாப்பிடப் பழகி விட்டால் சுவையான உணவுதான்! வயிறும் நிறைந்து போகும்.

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

நெடு நேரமும் பசி தாங்கும்.

மாமிச உணவின் சுவை பற்றி எழுதும் இந்த இடத்தில், மற்றொரு சுவையான விஷயத்தை நான் சொல்ல வேண்டும்! படிக்கப் போன புதிதில் என்னுடன் நமது ஊரி லிருந்து வந்த நண்பர் ஞான ஒளிவு - கல்வித் துறையில் படித்துக் கொண்டு இருந்தார். அவர் மாமிச பட்சிணி! எனவே என்னை அறிமுகப் படுத்தும்போது பெயரைச் சொல்லிவிட்டு இவர் 'தாவர பட்சிணி - புல்லைத் தின்பார்!' (Grass eaters) என்று அறிமுகப்படுத்துவார்!

ஒருவாறாக நண்பர் ஞானஒளிவின் வற்புறுத்தலினால், நான் 'பர்கரை' எல்லாம் சுவைத்திருக்கிறேன். ஆனாலும் விரும்பிப் போவதில்லை; தேடிச் சாப்பிடுவதில்லை. இது ஒருவகை சைவம்.

இதில் வேடிக்கையான விஷயம், எங்கள் நிறுவனத்திலே மாதமிருமுறை நடக்கும் 'நிர்வாகிகள் ருசி பார்க்க நடத்தும் கூட்டம்தான்!'

எனது காரியதரிசி எங்கள் உணவுப் பொருளை மின் அடுப்பில் சுட்டெடுத்து வெட்டி, ஒரு பேப்பர் தட்டில் ஆளுக்குக் கொஞ்சம் ருசி பார்க்கக் கொடுப்பார். நான் மற்றும் நிறுவனத்தின் உரிமையாளர், தேசிய நிலைமை விற்பனையாளர், நிறுவனத்தின் நிதி நிர்வாகி, எனது காரியதரிசி, சில




சமயங்களில் விருந்தினர்கள் என்று எல்லோரும் உணவை ருசி பார்க்க நின்று கொண்டிருப்போம்.

ஒவ்வொரு முறையும் சரியான சூட்டில் வாயில் போட்டுச் சுவைத்து - இரண்டு மூன்று துண்டுகளையாவது சுவைத்த பின் 'எப்படி இருக்கிறது? என்ன குறை? என்ன மாற்றம் செய்யலாம்?' என்று கூற வேண்டும். அவரவரும் தாங்கள் சாப்பிட்டுச் சுவை பார்ப்பதில் கவனமாக இருப்பார்கள். சாப்பிடும்போது இவர்கள் முகம் எப்படி இருக்கிறது என்று பார்க்க எண்ணினேன். தலையைத் தூக்கி அவர்களைப் பார்த்தேன். நீங்கள் நம்ப மாட்டீர்கள்! அவர்கள் அனைவரும் என் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்! 'எனது தீர்ப்பு எப்படி இருக்கப் போகிறது?' என்று! மாமிசமே பாரம் பரியமாகச் சாப்பிட்டு' அதில் ஊறிப் போன மனிதர்கள், மாமிசமே சாப்பிடாது - அதில் அதிகம் பழக்கமில்லாத - என் தீர்ப்பை எதிர்நோக்கியிருப்பதைக் கண்டு எனக்குச் சிரிப்புத்தான் ஏற்பட்டது - அதாவது மனத்திற்குள்!

**நா**ன் அந்த நியூயார்க் நிறுவனத்தாரின் வேண்டுகோள்படி அங்கு சென்று சில இத்தாலிய உணவுப் பொருட்களையும், சில மெக்சிகோ நாட்டு உணவுப் பொருட்களையும், சில அமெரிக்க உணவுப் பொருட்களையும் மாதிரிக்காகச் செய்து காட்ட வேண்டும்; அவர்களுக்குப் பரிமாறி அவர்களது அங்கீகாரத்தைப் பெற வேண்டும்.

இங்குதான் மிகப் பெரிய உண்மை ஒளிந்து கொண்டிருக்கிறது! அதாவது நான் நமது 'இசை உலக சுப்புடு' போல! திரு. சுப்புடுக்கு சங்கீத விமர்சனம் வரும்; ஆனால் ஒரு கச்சேரி செய்ய வராது. அதாவது நான், மிக நன்றாக உணவு எப்படி இருக்க வேண்டும் என்பதையும் எது குறைவு, எதில் மாற்றம் தேவை என்றெல்லாம் பிரமாதமாக விமர்சிப்பேன். 'கேசரோல்' (Cassarole) எனப்படும் ஓரிரு அமெரிக்க உணவுப் பொருட்களையும், சைனீஸ் 'சௌமேன்' எனப்படும் உணவுப் பொருளையும், ஓரளவு - என் மனைவி அங்கீகாரம் அளிக்கும் அளவுக்குச் செய்வேன். (என் மனைவியன் அங்கீகாரம் என்பது சாமான்யமான விஷயமல்ல! அதிலும் கணவனுக்குச் சர்டிபிகேட் கொடுப்பது என்பது மிகப் பெரிய விஷயமாக்கும்!)

மற்ற எல்லாவகை உணவையும் நான் ருசி பார்த்துச் சொல்வேன். சமைக்கத் தெரியாது. என் மனைவிதான் நன்றாகச் சமைப்பார்.

ஆகவே நான் நியூயார்க்கிற்கு மாதிரி உணவு தயாரிக்க ஒவ்வொரு முறையும் எனது மனைவியை அழைத்துச் செல்வேன். எங்களுக்குச் சமையலறை கொண்ட பெரிய

படுக்கை அறையும் விருந்தினரை வரவேற்கும் அறையும் கொண்ட ரூம்களை பார்க் ஓட்டலில் ஒதுக்குவார்கள். ஹோட்டலின் எதிரே நியூயார்க்கின் புகழ் பெற்ற சென்ட்ரல் பார்க்.

நாளை உணவு விடுதியில் என்ன தயாரித்து அளிக்கப் போகிறோமோ அதை எங்கள் வீட்டிலேயே நியூயார்க்கிலிருந்து வருகின்ற நிர்வாகிகளுக்குத் தயாரித்து அளிக்க ஏற்பாடாகி இருந்தது. நானும் என் மனைவியும் இதற்காக ஒரு வாரம் ஒத்திகை செய்தோம் - பின் ஒரு நாள் விருந்து நடந்து முடிந்தது.

இதிலே இரண்டு முக்கிய விஷயங்கள்! ஒன்றில் பொருளின் தரத்தை உன்னதமாக உயர்த்தி இருந்தோம். அதாவது அவர்கள் தினந்தோறும் சாப்பிடுகின்ற 'பர்கர்' 'மீட்'டின் (மாமிசத்தின்) ருசியை, என்ன செய்தோம்? இயற்கையான உணவுப் பொருளைச் சேர்த்து, அந்த 'பர்கரை'ச் செய்தோம். அது புதிதாக வந்ததுபோல அவ்வளவு (Juciy) மிருதுவாக, சுவையாக, இருந்தது. வழக்கமாக குளிர்சாதனப் பெட்டியில் தான் மாமிசம் பாதுகாக்கப்படும். இந்த மாமிசத்தை எடுத்துஅரைத்து வடை போல 'பர்கர்' தட்டினால், மாமிசம் ஈரப்பசையில்லாமல், உள்ளே ஒரு லேசான உலர்ந்த தன்மையில் தான் இருக்கும். ஆனால் அப்படிப்பட்ட மாமிசத்தை எடுத்துக் கொண்டு அதை ஈரப் பசை கொண்ட - அப்போதுதான் புதிதாய் வாங்கிய மாமிசத்தைப் போல செய்திருந்தோம். உணவில் பர்கர்தான் மிக முக்கிய மான அயிட்டம். அதிலே இப்படிப்பட்ட மாற்றம் ஏற்பட்ட உடன் எல்லாமே வெற்றியானது போல ஆகி விட்டது! 'ஆகா' என்றார்கள்!

அடுத்ததாக ஒரு காரியம் செய்தோம், யாரும் இதுவரை செய்யாததை. அதாவது இத்தாலியன், மெக்சிகன், ஜப்பானீஸ் என்று எந்த 'பர்கர்' தேவையோ அதற்கான 'சாஸ்' ஒன்றினைத் தயாரித்து அங்கே பொதுவான ஓரிடத்தில் வைத்திருந்தோம். பர்கர் மீது இந்தச் சாசை தாராளமாக ஊற்றிக் கொண்டால் இந்தச் சுவையுள்ள பர்கரை நீங்கள் சாப்பிடலாம் என்றோம். அதே போன்று தரமும் சுவையும் ஒவ்வொரு வகை சாசிலும் - எங்கள் முத்திரை - இருந்தது.

'பர்கரி'ல் ஈரப்பசையை (தண்ணீரைச் சேர்த்து அல்ல) உண்டு பண்ணியிருப்பது போல, சில முக்கியமான இடங்களில் உணவின் தன்மையைச் சீண்டியிருந்தோம். அது




சாப்பிடுபவர்களின் கவனத்தையும் சுவையையும் தூண்டுமாறு, மறக்க முடியாதபடி செய்திருந்தோம். எல்லாமே சின்னச் சின்ன விஷயங்கள்தான்! இந்தச் சின்ன விஷயங்கள் தான் 'என்ன செய்திருக்கிறார்கள்...?' என்ற ஒரு ஆர்வத்தையும் இனம் புரியாத ஒருவித ஈர்ப்பையும், நினைவில் நமது முத்திரையையும் ஏற்படுத்தி வருகிறது.

இசையைப் பற்றி எழுதி இருந்தார்கள் ஒரு சமயம். "பெரிய பாடகனாக நாளை மலர்பவரும், சாதாரண இசை ஆசிரியராக இசைப் பள்ளி நடத்துபவரும் ஒரே ஆசிரியரிடம்தான் பயிற்சி பெறுகிறார்கள். பிறகு ஏன் ஒருவர் இசை மேதையாகவும் மற்றொருவர் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியராகவும் போகிறார்? அந்த இசை மேதை எந்தெந்த இடங்களில் சில பிர்காக்களைச் சேர்க்க வேண்டும் என்பதை அறிந்தவர்; மற்றவர் இதை அறியாதவர்!" என்று எழுதி இருந்தார்கள்.

"எல்லா ஓவியர்களுமே கோடுகளை வைத்துத்தான் ஓவியம் தீட்டுகிறார்கள். எந்த வளைவுகளை எந்த இடத்தில் கொண்டு வர வேண்டுமென்பதில்தான் அவர்கள் வித்தியாசப்படுகிறார்கள்'' என்பார் என் ஓவிய நண்பர்.

அதுதான் வித்தியாசம்!

அந்த சூட்சுமத்தில்தான் வெற்றி இருக்கிறது!

(தொடரும்)

ரூ. 50 பரிசு பெறுபவர்:
செ. சல்மான் பாரீஸ்
4/12, முதல் வாசல்
பாம்பன் – 623521.
இராமநாதபுரம் மாவட்டம்.

● ஜி.ஜி.கிருஷ்ணன், விசலூர்.
*? 'அனைத்துப் பத்திரிகைகளையும் படிக்கும் ஒரே முதல்வர் நானாகத்தான் இருப்பேன்' என்கிறாரே கலைஞர்?*
! முதல்வர் படக்கூடிய நியாயமான பெருமைகளுள் ஒன்று.

● ஆர். சரோஜா, நாட்டரசன்கோட்டை.
*? அ.தி.மு.க. பற்றி இனிமேல் பேசவே மாட்டேன் என்று இல. கணேசன் கூறியுள்ளாரே?*
! எதையாவது பேசி அம்மாவின் அதிருப்தியையும் கோபத்தையும் சம்பாதித்துக் கொள்வானேன் என்ற நோக்கமாயிருக்கும். ஆனால் சும்மா இருந்தால் மட்டும் ஆதரவு தொடரும் என்று உத்தரவாதம் இல்லை. அம்மா சொல்வதற்கெல்லாம் ஒப்புதல் அளித்தால்தான் ஆட்சி தப்பும். இல்லாவிடில் மிரட்டல் தொடர்கதைதான்!


• ...அர்த்தம்!

● க. எத்திராஜ், பவித்திரமாணிக்கம்.
*? மத்திய நிதி–மாநில நிதி–ஒப்பிடுக?*
! திருப்பதி உண்டியல்–தெருமுனை பிள்ளையார் கோயில் உண்டியல்!

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.
*? விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை ஆண்களுக்கு வேண்டுமா? பெண்களுக்கு வேண்டுமா?*
! அவசியமானவற்றுக்கு விட்டுக் கொடுப்பது ஆண்களுக்கும் பெண்களுக்கும் கௌரவம் சேர்க்கும். உதாரணத்துக்கு அமரர் கல்கியின் தியாக பூமியில் உமாராணி டயலாக்: "நான் சுதந்தரத்துக்காக தியாகம் செய்வேனேயொழிய, அடிமைத்தனத்துக்காகத் தியாகம் செய்ய மாட்டேன்."

● கே.ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.
*? டெல்லிக்கு வர முடியாத அளவுக்கு ஜெயலலிதாவுக்கு உடம்பு சரியில்லாததைக் கேள்விப்பட்ட மறுகணமே அத்வானி, வாஜ்பேயி போன்றோர் அவரைப் பார்க்க சென்னைக்குப் பறந்து வந்திருக்க வேண்டாமோ?*
! வந்திருக்கலாம்தான்; ஆனால் அப்படி வந்தாலும் அவர்களுக்காக போயஸ் தோட்டத்து 'கேட்' திறக்கும் என்ற உத்தரவாதம் இல்லையே. அதனால் தயங்கியிருப்பார்கள்.

● பா. ரவிச்சந்திரன், ஆசூர்.
*? நடிகைகளின் கதை(!)களை எழுத ஆரம்பித்துவிட்ட பத்திரிகைகளின் பரிணாம வளர்ச்சி குறித்து...?*
! இவர்களுக்கு வாசக இதயங்களின் பரிணாம வளர்ச்சி பற்றிய கவலை கிடையாது. சர்க்குலேஷன் வளர்ச்சி ஒன்றே குறிக்கோள். அதன் மூலம் விளம்பர வருவாயும் கூட.

• சந்திப்பின்...


● ஜெ. கண்ணன், சென்னை – 101.
*? A.B. வாஜ்பேயி என்றால், atom bomb வாஜ்பேயி என்று*


• ஆபத்தான அறிவிப்பு

• புதிய 'இஸம்'


# வை.கோ – மாறன் சந்திப்பின் முக்கியத்துவம் என்ன...?

இல. கணேசன் விளக்கம் தருகிறாரே...?

! ரொம்ப சரி. இந்த அரசு அந்த ஒரு காரணத்துக்காக மட்டுமே எதிர்காலத்தில் நினைவு கொள்ளப்படும்! உருப்படியான எந்தவொரு சாதனைக்காகவும் அல்ல...!

● வி.பிரசன்னகிருஷ்ணன், சென்னை – 17.

? ஜெயலலிதாவின் போக்குக்கு என்ன பெயர் வைக்கலாம்...?

! ஜெயலலிதாயிஸம்! சுருக்கமாக– 'ஜெ'யிஸம்.

● ரா. பாலசுப்பிரமணியன், சென்னை – 101.

? வை.கோ–மாறன் சந்திப்புக்கு முக்கியத்துவம் உள்ளதா?

! இருக்கிறது. அரசியல் பண்பாடு என்கிற வகையில்.

● ஏ. காதர், நாகூர்.

? நல்ல கோரிக்கைகளுக்காக மறியல் செய்யலாம் என்கிறாரே முதல்வர்?

! ஆபத்தான அறிவிப்பு இது. ஒவ்வொருவருக்கும் தனது கோரிக்கை சிறந்த கோரிக்கையாகத்தான் தோன்றும்.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? ஒரு 24 மணி நேரத்துக்கு 'ஜெ'வைப் பிரதமராக நியமித்தால் என்ன ஆகும்?

! சட்டத்துறை ஒரு பிரைவேட் பிராப்பர்டி ஆகிவிடும்!

● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? நடிகர், நடிகைகளைத் தரக்குறைவாக எழுதக் கூடாது என்று பத்திரிகைகளுக்கு அறிவுரை வழங்கும் கலைஞர், 'நடிக–நடிகையர் தரக்குறைவாக நடிக்கக் கூடாது' என்று அறிவுரை கூறுவாரா...?

! கூறியிருக்கிறார்.



* அசத்திய ஆட்டம்!



* கதவு...



* ...திறக்குமோ?

கேட்பார்தான் இல்லை– இரு துறைகளிலும்.

● மூக்கனூர், என். தாமோதரன்.

? இந்த வருட விம்பிள்டனில் உம்மைக் கவர்ந்த அம்சம்...?

! சாம்பிராஸின் வெற்றி; இவானெஸவிக்கின் விடாமுயற்சி!

● டி.ஏ.சி. பிரகாஷ், திருச்செங்கோடு.

? கோக், பெப்சி, இரு அமைச்சகங்களில் தடை செய்யப்பட்டுள்ளதாக ஜார்ஜ் பெர்னாண்டஸ் அறிவித்திருக்கிறாரே...?

! முன்பு நாடு தழுவிய அளவில் தடை விதித்தவர் இவர்தான். இப்போது அமைச்சகங்களில் மட்டும் தடைவிதிப்பதோடு திருப்தி அடைகிறார். பூனை கண்ணை மூடிக் கொண்டால் அஸ்தமித்ததாகிவிடாது!

● செ. சல்மான் பாரீஸ், பாம்பன்.

? காலில் செருப்பில்லாமல் வெயிலில் தெருவில் கூவிக் கூவி வியாபாரம் செய்பவர்களைக் காணும்போது மனம் வேதனையடைகிறது... இந்த நிலை நம் நாட்டை விட்டு எப்போது அகலும்?

! இப்படி எண்ணித்தான் எம்.ஜி.ஆர். இலவச காலணி திட்டம் தொடங்கினார். அது ஊழலில்தான் முடிந்தது. ஏழைமையை இப்படியெல்லாம் ஒழிக்க முடியாது. தேசத்தின் ஒட்டுமொத்தமான பொருளாதார மேம்பாட்டினால்தான் ஏழைமை ஒழியும். அதற்கு மன்மோகன் சிங் போன்ற சில பொருளாதார மேதைகளின் யோசனைகளைக் கேட்டு அரசு செயல்படுத்த வேண்டும்.



* உமாராணி டயலாக்

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்.

? மனிதன் மெள்ள மெள்ள மிருகமாகி வருகிறான் என்பதற்கு சமீபத்திய உதாரணம் ஏதேனும் உண்டா...?

! கண்டதேவியில் (தேவகோட்டை அருகே) நடக்கவிருந்த தேர்த்திரு விழா ஜாதிச் சண்டை காரணமாக நிறுத்தப்பட்டிருக்கிறது. சில இனத்தவர் தேரிழுக்கக் கூடாது என்று உயர் ஜாதியினர் ஆட்சேபிக்க, அதை எதிர்த்து நீதிமன்றத்தில் பெட்டிஷன். அமைதியாக அனைத்துப் பிரிவினரும் திருவிழாவை நடத்த வேண்டும் என்று நீதிபதி ஆணை. அதை மீறி மிரட்டல் போஸ்டர்கள் முளைத்ததால் காவல்துறை 144 போட்டு விட்டது.

## நீங்கள் கேட்டவை – தராசு

**ஜெ – பிரச்னையை ஒருவழியாகச் சமாளித்து விட்ட நிம்மதியில் உட்கார்ந்திருக்கிறார் அத்வானி. சந்திரபாபு நாயுடு கடுகடுப்பாக வருகிறார்...**

# விசுவரூபம் எடுக்கிறார் சந்திரபாபு நாயுடு!

**அத்வானி** : நாயுடுகாரு, வாங்க... வாங்க. அபூர்வமா இருக்கு உங்க வரவு. ஐ.மு. ஆட்சிக் காலத்துல அடிக்கடி தில்லி வந்து போனீங்க. இப்ப என்னடான்னா ஆளையே காணோம்!

**நாயுடு** : அப்போ இந்த நாயுடு கிங் மேக்கர். ஆறு மாசத்துக்கு ஒரு தடவை பி.எம்மை மாத்த வேண்டி இருந்துது. இப்ப வும் அதுக்காகத்தான் வந்திருக்கேன்!

**அத்வானி** : அந்தப் பிரச்னை இப்போ இங்கே இல்லியே? அடல்ஜி பி.எம். ஆகி நூறு நாள்தானே ஆச்சு? கூட ரெண்டு வாரம்....

**நாயுடு** : நான் வாயில்லாப் பூச்சின்னு நீங்க நினைச்சிட்டீங்க போல. அதான் கண்டுக்கறதே இல்லே. மிரட்டி, கிரட்டி ஆகாத்தியம் பண்ணினாத்தான் கொஞ்சம் பயம் இருக்கு மாக்கும்?

**அத்வானி** : யார், யாரை மிரட்டறது? மிரட்டினவங்க எல்லாம் பணிஞ்சு போய்ட்ட கதை தெரியாதா? தூண்டி விட்டவங்க கூட, தும்மல் – சனின்னு, துண்டைத் தலைல போட்டுட்டு ஒஞ்சு போய் உக்கார்ந்துட்டாங்க, தெரியுமில்லே?

**நாயுடு** : ரொம்ப பயமுறுத்தாதீங்க அத்வானிஜி... எந்த மாதிரி சந்தர்ப்பத்துல நான் ஆபத்பாந்தவனா வந்து உங்க அமைச்சரவையைக் காப்பாத்தினேன்கிறதை அதுக்குள்ள மறந்திருக்க மாட்டீங்கன்னு நினைக்கறேன்.

**அத்வானி** : ஐயோ, பழசைக் கிளறாதீங்க. எனக்கு பி.பி. ஒரேயடியா எகிறிடும்.

**நாயுடு** : அப்போ அம்மா சொன்னது கரெக்ட்டுத்தான் போலருக்கு!

**அத்வானி** : (காதைப் பொத்திக் கொண்டு) ப்ளீஸ், இப்பத்தான் என் மெமரி சரியா இருக்கே. மறுபடி அந்தம்மா பேரைச் சொல்லி ஏன் பிளட் பிரஷரை ஏத்தறீங்க? மெமரி பிளஸ் மாத்திரை கூடக் கைவசம் இல்லே!

**நாயுடு** : ஒரு நெருக்கடியை உண்டாக்கினாத்தான் எல்லாரும் நம்பளைக் கவனிக்கறாங்க. இல்லேன்னா, என்னதான் ஹைடெக் ஆபீஸ் வச்சு, அந்நிய முதலீடு கொண்டு வந்து, ஆட்சியைப் பிரமாதமா நடத்தினாலும் தேசிய அளவுல யாரும் கண்டுக்கறதே இல்லே. அதுனால இப்போதைக்கி என் முதல் டிமாண்ட் பி.எம்.மை மாத்தணும்கிறதுதான்!

**அத்வானி** : (துள்ளிக் குதித்து) திஸ் இஸ் டூ மச்! போயஸ் கார்டனிலிருந்து கூட இப்படி ஒரு டிமாண்ட் இதுவரை வரல்லே. திஸ் இஸ் அட்ராஷியஸ்.

**நாயுடு** : இதுல அட்ராஷியஸா என்ன இருக்கு? வேணா நீங்க இருந்துட்டுப் போங்க பி.எம்.மா? ஆசையா இருக்குல்ல?

**அத்வானி** : இப்ப மட்டும் யாரு ரியல் பி.எம்.னு நினைச்சுக்கிட்டிருக்கீங்க? ஹி.. ஹி...

**நாயுடு** : அப்படி வாங்க வழிக்கு. ஹோம் மினிஸ்டர்னு பேருதான். அடல்ஜியோட அத்தனை பவரையும் நீங்க இல்ல வச்சுக் கிட்டிருக்கீங்க!

**அத்வானி** : ஐயோ, மெள்ள... மெள்ளப் பேசுங்க. யார் காதுலயாவது விழுந்தா, நாளைக்கே பேப்பர்ல முதல் பக்கத்துலயே 'பி.எம். பதவிக்கு அத்வானி முயற்சி'ன்னு போட்டுடுவான்! உங்க பேரும் சேர்ந்தே அடிபடும்!

**நாயுடு** : ஆகா! கேக்கறதுக்கே சந்தோஷமா இருக்கு. இப்பக் கூட காஷ்மீர்ல போய், படுகொலையைப் பார்த்துட்டு 'இது மாதிரி அக்கிரமத்தைச் சகிக்கக்கிற ஆட்சி,



ஒரு ஆட்சியே இல்லே'ன்னு பேசி இருக்கிங்க. குட்டு யாருக்கு – பிரதமருக்குத் தானே?

**அத்வானி :** கடவுளே, இப்படி எல்லாம் கூட நீங்க ட்விஸ்ட் பண்ணுவீங்கன்னு அப்போ தெரியாமப் போச்சே!

**நாயுடு :** எனக்கு உங்க பதில் உடனடியா வேணும். வாஜ்பாயி பதவி விலகணும். நீங்க வேணா பிரதமரா இருக்கலாம், ஆட்சேபணை இல்லே.

**அத்வானி :** அட ராமா! போன ஜன்மத்துல நீங்க என்ன கைகேயியா இருந்தீங்களோ? நானே இதுக்கு அவசரப்படலை. உங்களுக்கு என்ன அவசரம் நாயுடுகாரு?

**நாயுடு :** அவசரம், அவசரம் இல்லே. அது வேற விஷயம். நான் தர்றது அவுட்சைடு சப்போர்ட். எப்ப வேணா உருவிக்கலாம். நினைவிருக்கா? இல்லே அம்னீஷாயால அதுவும் மறந்து போச்சா?

**அத்வானி :** இப்ப திடீர்னு நீங்க இந்தப் பிரச்னையைக் கிளப்ப என்ன அவசியம்னே புரியலே. ஏதானா வேஷ்டுதலா, நேர்த்திக் கடனா – ஒருத்தர் விட்டா இன்னொருத்தர் பி.ஜே.பி. ஆட்சிக்குத் தலைவலி கொடுக்கணும்னு?

**நாயுடு :** என்னோட பாயின்ட்டுக்கு வாங்க, அத்வானிஜி.

**அத்வானி :** அது ஒண்ணும் அவ்வளவு ஈஸி இல்லே மிஸ்டர் நாயுடு. நீங்க வேணும்னே பிரச்னையைக் கிளப்பி எல்லாரும் உங்களைக் கவனிக்கற மாதிரி ஃபோகஸ் பண்ணிக்கப் பாக்கறீங்க!

**நாயுடு :** ஹ, ஹ! அதான் என்னோட நோக்கமே. 356ஐப் பிரயோகிச்சு ஆட்சியைக் கலைக்கணும்னாத்தான் ஆல் இண்டியா லெவல்லயும் கவனிக்கறாங்க. என் பங்குக்கு நானும் உங்களை இக்கட்டுல சிக்க வச்சாத்தான் இந்தச் சந்திரபாபு நாயுடு பதவியில இருக்கான்னு நினைவு வச்சுப்பாங்க. அதிரடியா ஏதாச்சும் அறிக்கை விட்டாத்தான் பரபரப்பு கூடுது. தாஜா பண்றதுக்கும் தூதுவரை அனுப்பறீங்க. உங்க தூதுவருக்கு சென்னைதான் தெரியுமா? ஹைதராபாதையும் பார்க்கட்டுமே! ஹைதராபாதுக்கும் ஏர்லைன்ஸ் சர்வீஸ் உண்டு அத்வானிஜி!

**அத்வானி :** ஆனாலும் இது ஒரு குரூர ஆசை! நடக்கிற காரியமே இல்லே மிஸ்டர் நாயுடு.

**நாயுடு :** அப்போ தெலுங்கு தேசக் கட்சியோட 12 எம்பிக்களும் ஆதரவு வாபஸ்!

**அத்வானி :** வேணாம்... வேணாம்... அதை மட்டும் செஞ்சுடாதீங்க!

**(திடுக்கிட்டு விழித்துக் கொள்கிறார் அத்வானி. மனதுக்குள் 'அட இவ்வளவும் கனவுதானா!' என்று திருப்திப் பெருமூச்சு விடுகிற போது, கதவு திறக்கப்படுகிறது.)**

**அதிகாரி ஒருவர் :** (உள்ளே நுழைந்து) என்ன வேணாம்? எதைச் செஞ்சுடக் கூடாது? ஹைதராபாத்லேருந்து சந்திரபாபு நாயுடு வந்திருக்கார், அனுப்பட்டா, வேணாமா?

கற்பனை : **சாருகேசி**

# கதைப் பாடலில் கட்டபொம்மன்!



சுதந்தர இந்தியாவின் பொன்விழா நடைபெறும் இந்த வேளையில், இந்தியாவின் தெற்குப் பகுதியிலிருந்து முதன் முதலில் வெள்ளையருக்கு எதிர்ப்புக்குரல் கொடுத்த கட்டபொம்மனை எந்தத் தமிழனாலும் மறக்க முடியாது. எனினும், இருபத்திநாலு மணி நேரமும் அந்தப் பாஞ் சாலங்குறிச்சிக்காரனையே நினைத்துக் கொண்டும், பேசிக் கொண்டும் அதுகுறித்தே செயலாற்றிக் கொண்டும் ஒருவர் இருக்கிறார். அவர்தாம், திருநெல்வேலி – தூய யோவான் கல்லூரியில் தமிழ்த்துறையின் தலைவராக இருக்கும் முனைவர் வே. மாணிக்கம். கட்ட பொம்மன் கதைப் பாடல்களைத் திரட்டி ஒரு தொகுப்பு, கட்டபொம்மன் கொள்ளைக்காரனா என்கிற தமிழ்வாண னின் கேள்விக்கு – ஒரு விவாதமேடை போன்ற நூல்களையும் வெளியிட்டிருக் கிறார். அவரைச் சந்தித்தோம்.

“எத்தனை வருடங்களாக் கட்டபொம்மன் பற்றி ஆராய்ச்சி செய்கிறீர்கள்?''

''பதினைந்து வருடங்களுக்கும் மேலாக.''

''கட்டபொம்மன் பற்றிய கதைப் பாடல்களை எப்படிச் சேகரித்தீர்கள்?''

''கட்டபொம்மனின் வரலாற்றோடு தொடர்புடைய இடங்களுக்குச் சென்று. அங்கு ஒயில் கும்மியாகவும், வில்லிசையாகவும் பாடப்பட்டு வரும் பாடல்களை ஒலிப்பதிவு செய்தேன். சிலரிடம் கட்டபொம்மன் கும்மிப்பாடல் ஓலைச் சுவடிகள் இருந்தன. அப்படி ஆறு ஓலைச் சுவடிகள்



• வே. மாணிக்கம்



• கட்டபொம்மனின் தர்பார் மண்டபம்

எனக்குக் கிடைத்தன. மொத்தம் பத்தொன்பது பாடல்களைச் சேகரித்திருக்கிறேன். அதில் இரண்டாயிரம் முதல் ஏழாயிரம் வரிகளைக் கொண்ட பாடல்களும் உண்டு!"

"இப்பாடல்களை கட்டபொம்மனுடைய வான்முனைக்குப் பயந்து தான் பாடியிருக்கிறார்கள்' என்று ஒருவர் சொல்லியிருக்கிறாரே?"

கட்டபொம்மனையும் அவரது தம்பி ஊமைத்துரையையும் தூக்கிலிட்டது வரை உள்ள செய்திகள்தான் பாடல்களாக்கப்பட்டிருக்கின்றன. கட்டபொம்மனுடைய வான் முனைக்குப் பயந்து பாடும் பாடகன் அவர் உயிரோடு இருக்கும்போது அவரைத் தூக்கிலிட்டதாகப் பாடுவானா? முப்பத்தியொன்பதே வயது நிரம்பிய அந்த வீர இளைஞரின் அவல முடிவு மக்கள் உள்ளத்தில் ஏற்படுத்திய பெரும் பாதிப்பின் எதிரொலியே இந்தக் கதைப் பாடல்கள்."

"வரலாற்று உண்மைகள்தான் கதைப்பாடல்களா?"

"பாஞ்சாலங்குறிச்சிப் போரில் நேரடியாகப் பங்குபெற்ற கர்னல் வெல்ஸ் என்பவர் தமது போர் அனுபவங்களை எழுதியுள்ளார். அதில் ஊமைத்துரையுடன் நடந்த முதல் நாள் போரில் இறந்த ஆங்கிலேய வீரர்களை அடக்கம் செய்ய அனுமதி கேட்டதை, 'கோட்டைக்குச் சமாதானக் கொடியை அனுப்பி அடக்கம் செய்ய அனுமதி கேட்டோம். இது இரக்கத்துடனும் நிபந்தனை இன்றியும் ஏற்கப்பட்டது. உருக்குலைந்து குருதி வெள்ளத்தில் கிடந்த பிணங்களை நாங்கள் எடுத்து வந்தோம். மனிதத் தன்மைக்கே உயர்ந்த இலக்கணமாகத் திகழ்ந்த எதிரிகள், எங்களுக்குச் சிறு இன்னலும் இழைக்காமல் இருந்தனர்' என்கிறார். இந்த நிகழ்ச்சி பாடலில்–

• கட்டபொம்மன் கோட்டையின் தற்போதைய வெளித்தோற்றம்



"தப்பாமல் சண்டை முனையில்
சென்னபேரைத்
தானடக்கம் செய்ய வேணுமென்றார்
கும்பினி யார்களும் கும்பளத் தார்களும்
கூவென்று வெள்ளைகள் வீசிக் கொண்டு
அவரவர் பிணம் அவரவர் தானே
அன்புடன் வாரிச் சுமந்தனராம்"

என்று வருகிறது...

"இது மட்டுமல்ல, புதுக்கோட்டை மாவட்டத்தில் கட்டபொம்மன் பிடிபட்ட காட்டுப் பகுதியைச் சுற்றிப் பார்க்கச் சென்றேன். அங்கு குமாரப்பட்டி என்ற ஊரின் அருகே கட்டபொம்மன் தங்கியிருந்த காட்டுப் பகுதியில் ஊமைத்துரைக்குக் கோயில் இருப்பது கண்டு ஆச்சர்யப்பட்டேன். அப்பகுதியில் மக்கள் செருப்பணிந்து நடப்பதில்லை. ஏறத்தாழ நூறு ஏக்கர் அளவு காட்டுப் பகுதியைப் புனிதச் சின்னமாகப் பாதுகாத்து வருகின்றனர். சித்திரை மாதம் விழா எடுக்கிறார்கள். இது இதுவரை வெளிவராத செய்தி. இப்படிப்பட்ட செய்திகளை வெளிக் கொண்டுவரும் விதமாக அரசு ஏதாவது செய்தால் மிகவும் உபயோகமாக இருக்கும்!" ●

பேட்டி: **தமயந்தி**

நாட்டமேஜை:

✉ பதவியேற்று நூறு நாட்கள் ஆகியும், மக்களைக் கவர முடியாமல், கேவலங்களையும், தலை குனிவுகளையும் சம்பாதித்து விட்ட பி.ஜே.பி ஆட்சியில் நீடிப்பதைவிட, ராஜினாமா செய்வதே மேல் என்று தாங்கள் கூறியுள்ள யோசனை வரவேற்கப்பட வேண்டியதாகும்!

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

✉ இல. கணேசனின் அரசியல் அனுபவங்கள் ஒவ்வொன்றும் 'ச்சு' கொட்ட வைத்தன. "நான் அரசியல்வாதி இல்லை. அரசியலில் பணியாற்றப் பணிக்கப்பட்ட தேசியவாதி" என்கிற அவரது 'பிரகடனம்' தமிழக அரசியல்வாதிகளுக்கு ஒரு 'கரெண்ட் ஷாக்!

கோவை-14, ஏ.எஸ். இராமசாமி.

✉ 'கவர்ச்சிக்கு குட்பை' என ரோஜா கூறியதைப் படித்ததும் சிரிப்பதா, அழுவதா (அவரை நினைத்து) என்றே புரியவில்லை. மார்க்கெட் இருக்கும்போது கதையை நம்பாமல் சதையை நம்பி நடித்த ரோஜா, ஆட்டம் எல்லாம் ஆடி முடிந்த பின் இப்படிக் கூறுவது வேடிக்கை தான். சான்ஸ் இல்லாமல் தடுமாறும்போது கூறுவது கண்கெட்ட பின் சூரிய நமஸ்காரம் செய்வது போல்தான்.

சிதம்பரம்-1, ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ 'நீங்கள் 'பெப்ஸியா? படைப்பாளியா?' என்ற கேள்விக்கு 'நான் கொக்ககோலா'என்று பதிலளித்த ரோஜாவின் பேட்டியில் குறும்பும் அதே சமயத்தில் எதிலும் மாட்டிக் கொள்ளாத சாமர்த்தியமும் (அதாங்க, நழுவல்) தெரிந்தது!

பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயசந்திரன்.

✉ குமாரசாமி ராஜாவின் தமிழ்ப் பற்று, வள்ளல் குணம் ஆகியவற்றைக் கண்டு வியந்தேன். அவருடன் இந்தக் காலத்து அரசியல்வாதிகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் தெரிந்தது!

மதுரை-10, பெ. கன்னியம்மாள்.

✉ கல்கியில் சுஜாதாவின் ஆர்யபட்டாவா? ஆகஸ்ட் 2ஐ எதிர்பார்த்து என் உள்ளம் பிருத்வியாய்த் துடிக்கிறது.

தாராபுரம், தாரை தம்பி.

✉ 'இயற்கை அளிக்கும் ரிடையர்மென்ட்!' என்ற தலைப்பில் கல்கி வழங்கிய இலவச இணைப்பு, ஒவ்வொரு பெண்ணும் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய அருமையான, பயனுள்ள விஷயங்களைத் தாங்கி வந்தது. பாராட்டுக்கள்!"

அய்யலூர்-1, வி.பி. சுப்பிரமணி.

✉ சமகாலச் சிந்தனையுடன் 'ஹை- ஜாக் (கிரதை)! சிறுகதை அமைந்திருந்தது... கதையோட்டம் வெகு சுவாரஸ்யம்.

வலையப்பட்டி, எம். பாலசுப்பிரமணியன்.

✉ மனுஷனாகணும் - அற்புதமான நடை, அழகான சொல்லாட்சி! மர்மதேசத் துக்காரரின் பேனா இப்படிக்கூட நெகிழ்த்துமா என்ன? முடிவு நெஞ்சில் நின்றது!

சென்னை - 4, மயிலைதாசன்.

# ஆர்யபட்டாவை எதிர்பார்த்து, பிருத்வியாய்த் துடிக்கிறோம்!

✉ 'டெலிபோன் கைட்' தவிர மற்ற எல்லா புத்தகங்களிலும் 'லவ்' இடம் பெற்றிருப்பதைக் காணலாம் என்று சுபி எழுதியுள்ளார். சென்னை டெலிபோன் கைடில் லவ்குமார், லவ்வாக், லவ்மிக்கி என 15 பெயர்களில் அது இடம் பெற்றிருக்கிறது. மும்பை, கல்கத்தா கைடுகளில் டஜன் கணக்கில் இருக்கலாம்!

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

✉ உலக சூப்பர் ஸ்டாரை கைக்குள் கொண்டு வந்த விதத்தை 'கல்கி' வாசகர்களுடன் பகிர்ந்து கொண்ட அஞ்சலி டெண்டுல்கரின் பேட்டி அசர வைத்து, வியப்பில் ஆழ்த்தியது!

திருமானூர், ஆர். மார்ட்டின்.

✉ 'சீதா'க்களின் கருத்து படித்தேன். ராமர் பிறந்த இடத்தில் தான் கோவில் கட்டப்பட வேண்டும் என்று வாதிடுவது, நம் பிறந்த நாளை ''பிறந்த மருத்துவமனையிலும்,'' திருமண நாளை ''திருமணம் நடந்த மண்டபத்திலும்''தான் கொண்டாட வேண்டும் என்பதற்குச் சமம்.

சென்னை - 5, சுஜாதா சீதாராமன்.

"எனக்கு சிறுநீர் போவதில் எந்தவித பிரச்னையும் இல்லை. கிட்னி தொடர்பான எந்தவித கோளாறும் இருப்பதாகவும் தெரியவில்லை. பின் எதற்கு டாக்டர் 'ஒரு யூரின் டெஸ்ட் செய்துகிட்டு வந்திடுங்க' என்று கூறுகிறார்?" என்ற குழப்பம் சிலருக்கு ஏற்பட்டிருக்கலாம். டாக்டரின் ஆலோசனைக்கு, பலவிதக் காரணங்கள் உண்டு.

நம் உடலில் ஓடும் அத்தனை ரத்தமும் ஏதாவது ஒரு சமயத்தில் சிறுநீரங்களைத் தாண்டித்தான் செல்கிறது. அதாவது சிறு நீரகம் மற்றும் சிறுநீரகப் பாதை தொடர்பான நோய்கள் மட்டுமல்ல; உடலின் வேறு இடங்களில் தோன்றியுள்ள வியாதிகள் ரத்தத்தை பாதித்தாலும், அவை சிறுநீர்ச் சோதனையில் தெரியவர வாய்ப்பு உண்டு.

உதாரணத்திற்கு, ஒரு வகை நீரிழிவு வியாதியால் பாதிக்கப்பட்டிருந்தால் அதை சிறுநீர் காட்டிக் கொடுத்துவிடும். ரத்தத்தில் உள்ள சர்க்கரையைக் கட்டுப்படுத்தும் இன்சுலின் குறைவாகச் சுரந்தால், திசுக்களில் க்ளுக்கோஸ் சத்து ஏறாது; மாறாக அந்த சத்து ரத்தத்தில் மிதக்கத் தொடங்கும்.

போதிய க்ளுகோஸ் சத்து கிடைக்காமல், சக்தி இழக்கும் நிலையில், உடலில் உள்ள கொழுப்புச் சத்தை உடைக்கும் முயற்சியில் ஈடுபடுகிறது நம் உடல். அப்படியாவது சக்தி பெறலாம் என்ற நம்பிக்கையில், இப்படி கொழுப்புகள் உடைபடும் போது, அஸிடோன் என்ற பொருளும் வெளிப்படுகிறது. இது சிறுநீர் மூலமாக வெளியேறுகிறது. சிறுநீர்ச் சோதனையில் இந்த அஸிடோன் எந்த அளவுக்கு அதிகமாக இருக்கிறதோ (கொஞ்சம் இருந்தாலே கூட அது கவலைப்பட வேண்டிய விஷயம்தான்) அந்த அளவுக்கு நீரிழிவு நோய் அபாய அளவை எட்டுகிறது என்று அர்த்தம்.

நார்மலான மனிதனின் சிறுநீர் கலங்கல் இல்லாமல், லேசான மஞ்சள் நிறத்தில் ஒரு பிரத்யேக மணம்(!) கொண்டதாக இருக்கும். ஆனால் இது கலங்கலாகவோ மிகவும் துர்நாற்றம் வீசுவதாகவோ அமைந்தால் உடலை ஏதோ நோய் தாக்கியிருக்கிறது என்று பொருள்.

சிறுநீர் பிங்க் நிறத்தில் காணப்பட்டால் அதில் ரத்தம் கலந்திருப்பதாக அறிந்து கொள்ளலாம்.

அட, இதுல இவ்ளோ விஷயம் இருக்கா?



# பென் ஜான்ஸன் முதல் சுசந்திகா வரை...



"கீழே விழுந்தாலும் நம் தலைவரின் மீசையில மண் ஒட்டலை...!"
"நீ என்ன சொல்லறே?"
"யாரோ இவர் காலை உடைச்சிருக்காங்க, ஆனால் இவரோ, கட்சி தாவினதால சறுக்கிடுச்சுனு சொல்றார்!"
— அ.சு. கிருஷ்ணன்

ப்ரௌன் நிறத்தில் தென்பட்டால் கல்லீரலில் உருவாகும் பிலிரூபின் வெளிப்பட்டிருக்கிறது என்பதை அறியலாம்.

சில வகை வண்ணச் சாயங்கள் ஏற்றப்பட்ட உணவு வகைகளை நாம் அதிகமாக உட்கொண்ட காரணத்தி னால் கூட சிறுநீர் ஆரஞ்சு நிறத்தில் வெளிப்பட வாய்ப்பு உண்டு. எனவே 'டிப்ஸ்டிக்'கைக் கொண்டு, யூரினில் என்ன வகை பொருள்கள் கலந்துள்ளன என்பதைக் கண்டு பிடிப்பார்கள். டிப்ஸ்டிக் என்றால் பேப்பர் அல்லது ஒரு வகை ப்ளாஸ்டிக்கினால் உருவாக்கப்பட்ட மெல்லிய தகடு. இதன் ஒரு முனையில் பல்வேறு ரசாயனங்கள் தடவப்பட்டிருக்கும். சிறுநீரில் தென்படும் ஒவ்வொரு பொருளுக்கும் ஏற்ப இதன் நிறம் மாறும்.

சிறுநீரில் ரத்தம் கலந்திருந்தால், சிறுநீரகங்களில் பாதிப்பு உண்டாகியிருக்க வாய்ப்பு உண்டு. அதிக அளவில் அமிலம் என்றால் நீரிழிவு நோயோ, கடும் . பட்டினியோ காரணமாக அமையலாம். பிலிரூபின் மற்றும் யூரோபிலினோஜென் ஆகிய பொருள்கள் தென்பட்டால் அது கல்லீரல் நோயைக் குறிக்கிறது.

ஒரு பெண்மணி கருவுற்றிருக்கிறாரா இல்லையா என்பதை அறிந்து கொள்ளப் பல சோதனைகள் உண்டு என்றாலும் யூரின் சோதனைதான் ரொம்ப பாப்புலர். எளிதான சோதனை என்பதோடு சோதனை முடிவையும் சீக்கிரத்தில் அறிந்து கொண்டு விடலாம். சிறுநீரில் HCG எனும் ஹார்மோன் தென்பட்டால் அந்தப் பெண்மணி கர்ப்பம் அடைந்திருக்கிறார் என்பது உறுதி.

ஒருவர் போதை மருந்தை உட்கொண்டிருக்கிறாரா என்பதற்கும் சிறுநீர்ச் சோதனை பெரிதும் உதவுகிறது. சர்வதேச விளையாட்டுகளில் இந்த சோதனையைக் கட்டாயமாக்கிய பிறகு, பென் ஜான்ஸனிலிருந்து சுசந்திகா வரை இதை வெகு பிரபலமாக்கி விட்டார்கள்!

"காலையில் எழுந்ததும் வெளியேறும் சிறுநீரை சோதனைக்கு அனுப்புவதுதான் பெஸ்ட்" என்று டாக்டர்கள் வற்புறுத்துவதன் 'மர்மம்' இதுதான் : இரவில் நீங்கள் ஓய்வெடுத்துக் கொள்ளும்போது சிறுநீரகங்கள் ஓய்வெடுத்துக் கொள்வதில்லை தான். என்றாலும் பொதுவாகப் பலரும் இரவில் சிறுநீர் கழிப்பதில்லை. இதனால் கிட்னியிலிருந்து வெளிப்படும் சிறுநீர், சிறுநீர்ப் பையிலேயே இரவு முழுவதும் தங்குகிறது. உடலில் உள்ள ரசாயனங்களால் அது மேலும் மேலும் அடர்த்தியானதாக ஆகிறது. இதனால் இந்த சிறுநீரை ஆராய்ச்சி செய்யும்போது, உடல் குறைபாடுகள் மேலும் பளிச்சென்று தெரியவர வாய்ப்பு அதிகம்.

ஆனால் அதற்காக உடலின் எல்லாவித பாதிப்புகளையும் சிறுநீர்ப் பரிசோதனையின் மூலம் கண்டு பிடித்துவிட முடியாது. சிறுநீரகத்தால் ரத்தத்திலிருந்து எவையெவை பிரிக்கப்படுகின்றனவோ, மற்றும் சிறுநீரகத்திலிருந்து சிறுநீர்ப்பை வரை உள்ள பாதையில் ஏதாவது பாதிப்பு ஏற்பட்டிருந்தாலோ அவற்றை மட்டுமே இந்தச் சோதனையில் கண்டுபிடிக்க முடியும். மற்றபடி சிறுநீரகம் பல பொருள்களை ரத்தத்திலிருந்து பிரிப்பதுமில்லை; வெளியேற்றுவதுமில்லை. இதனால் நோயை எதிர்க்கும் ஆண்ட்டி பாடீஸ், உடல் இயக்கத்தைச் சீராக்கும் ஹார்மோன்கள், சில வகைப் புரதங்கள் மற்றும் கொழுப்புகள் ஆகியன பற்றி அறிய வேண்டுமென்றால் ரத்தப் பரிசோதனை அவசியமாகிறது. ●

— ஜி.எஸ்.எஸ்.



# கத்தரிக்காய் + கனகதாரா ஸ்தோத்திர சாம்பார்!

ரெண்டு வாரம் முன்னால் திரைக் கதைப் புத்தகங்கள் பற்றி எழுதியிருந்தேன் இல்லை? அதில் ஒரு சின்ன மிஸ்டேக். பூமணியோட 'கருவேலம்பூக்கள்' திரைக் கதையை வெளியிட்டிருக்கிறது போதி பதிப்பகம் இல்லை. பூஞ்சோலை பதிப் பகம். (11. சிவப்பிரகாசம் தெரு, பாண்டி பஜார், சென்னை – 17)

'பூஞ்சோலை' அகிலன் கண்ணன் கேக் கறதுக்கு முன்னாடி கோவை லாவண்யா கட்டிக்காட்டி ஒரு குட்டு வெச்சிருக்காங்க. (லாவ்ஸ், நீங்க மோதிரம் போட்டிருக் கிங்களா?)

எனி ஹவ், ஸாரி.

மவுண்ட் ரோடு மத்திய நூலகத்துக்குப் போயிருக்கிங்களா? எப்பவாவது ரொம்ப அற்புதமான புஸ்தகம் ஏதாவது தட்டுப் படும். (அநேகமா மேல் அட்டை இருக் காது. நூத்திப் பத்தாம் பக்கம், மாலா ஐ லவ்யூ, மன்னாரு ஐ லவ்யூன்னு யாராவது கிறுக்கி வெச்சிருப்பாங்க.) ரீஸன்டா அங்க, அப்படி எனக்கு அகப்பட்ட ஒரு ஒல்லி புஸ்தகம் 'Mind & machine'. Author யாருன்னு தெரியலை – அட்டையும் ஓபனிங் பேஜும் இல்லாத தால. But, சில விஷயங்கள் ரொம்ப டச்சிங்கா, படிக்கப் படிக்க பயங்கர விறுவிறுப்பாவும், தமாஷா வும் இருந்ததால, ஞாபகத்துல இருக்கற சில பாயின்ட்ஸை இங்க தரேன்.

● யாரையாவது கடுமையாகத் திட் டவோ, தாக்கவோ வேண்டும் போல் இருக்கிறதா? அடிக்கடி? அப்போதெல்லாம் ஒரு லிட்டர் ஐஸ் வாட்டர் குடியுங்கள். கோபம் தணியும்; யூரினரி இன்ஃபெக் ஷன்கள் அண்டாது.

● மன அழுத்தம் அதிகமாகி இரவில் தூக்கம் வருவதில்லையா? நோ பிராப்ளம்! எழுந்து உட்கார்ந்து உரக்கப் பாட ஆரம் பியுங்கள். நிறுத்தாமல், ஒரு மணி நேரம். உங்கள் பாட்டு உங்களுக்கே பிடிக்காமல் போய் நிறுத்தி விட்டுத் தூங்கி விடுவீர்கள் என்பது தவிர, முகமூடித் திருடன் யாரும் வர மாட்டார்கள்.

● அடிக்கடி ஞாபக மறதியா? தினசரி சிரசாசனம் செய்யுங்கள். மூளைக்குள் ரத்தம் பாய்ந்து நிரம்பிச் சுழன்று புத்துணர்ச்சி கொள்ளச் செய்யும். எல்லா ஞாபகமும் வந்து விடும். சமயத்தில் முன் ஜென்ம ஞாபகம் வந்து விட்டால்? டபுள் ஓகே! புஸ்தகம் எழுதி நிறைய சம்பாதிக்கலாம்.

● நாலாபுறமும் நெருக்கடி; வாழ்வில் பிடிப்பே இல்லை; விரக்தியின் விளிம் புக்கே போய் விட்டீர்களா? வேறு வழியே இல்லை. உடனடியாக ஒரு கல்யாணம் பண்ணிக் கொண்டு விடுங்கள். வாழ்க்கை யில் ஒளி கூடுவதைக் காண்பீர்கள். ஒளி மேலும் பிரகாசமடையவும் வழி உண்டு. ஒரு நல்ல சிவில் லாயரை நட்பாக்கிக் கொண்டு விடுங்கள். அவர் அந்த வழியைக் காட்டுவார்.

● மேலதிகாரியுடன் அடிக்கடி தகராறு? மனஸ்தாபம்? ஃபைலைத் தூக்கி உங்கள் முகத்தில் அடிக்கிறாரா? ஆபத்துதான். வளர விடக் கூடாது. நல்ல சமயமாகப் பார்த்து "இன்று எனக்குத் திருமண நாள்.

அல்லது பிறந்த நாள். அவசியம் இரவு என் வீட்டுக்கு, டின்னருக்கு வர வேண்டும்'' என்று கேட்டு, எப்படியாவது சம்மதிக்க வைத்து விடுங்கள். (அன்று நிஜமாகவே திருமண நாளாகவோ, பிறந்த நாளாகவோ இருக்க வேண்டிய அவசியம்கூட இல்லை.) வந்து சாப்பிட்டுப் போய் விட்டால் மறு நாளிலிருந்தே அவர் சுமுகமாகி விடுவதைக் காண்பீர்கள். 'எங்கே இன்னொரு முறை கூப்பிட்டு விடப் போகிறீர்களோ' என்று நிரந்தரமாக அவர் அஞ்சி நடுங்கும்படி விருந்து தர வேண்டிய பொறுப்பு மட்டும் உங்களுக்கு இருக்கிறது.

**சா**வித்ரின்னு எனக்கு ஒரு ஃப்ரெண்ட். செமை ஜாலி டைப் அவள். ஒரு ரேஸ் குதிரை மாதிரி துள்ளலும் உற்சாகமுமா இருப்பா. தன்னோட உலக ஞானத்தைப் பெரும்பாலும் அலங்கார் தியேட்டர்லேயும் அருண் ஐஸ்க்ரீம் பார்கள்லேயுமே வளர்த்துண்டா. வேலைக்குப் போனா. லாஸ்ட் இயர் கல்யாணம் ஆச்சு. அப்புறம் அதிகம் சந்திக்க முடியலை. நாலஞ்சு கம்பெனி மாறி, இப்ப ஒரு லெதர் கம்பெனில கணக்குப் பிள்ளையா உட்கார்ந்திருக்கா.

திடீர்னு லாஸ்ட் வீக் போன் பண்ணி, ''ஹாய் சுமி சவுக்கியமா?''ன்னா.

ஊர்க் கதையெல்லாம் பேசிட்டு ''ஹவ் இஸ் லைஃப்''னு வந்து நின்னது எங்க பேச்சு.

சாவித்ரி ரொம்ப மாறிட்டா. தினம் காலைல சுப்ரபாதம், விஷ்ணு சகஸ்ரநாமம், லலிதா சகஸ்ரநாமம், சாய்பாபா சகஸ்ர நாமம்னு ஒரு சாமியையும் விட்டு வைக்காம துரத்தித் துரத்தி காக்கா பிடிக்கறதாச் சொன்னா. நம்பவே முடியலை என்னால!

''ஏன்டீ இப்படி சாமியாரிணி ஆயிட்டே?''ன்னேன்.

''நீயும் மாறுவே பார், ஆஃப்டர் மேரேஜ்... ஸ்லோகம் சொல்றது பீஸ் ஆஃப் மைண்டுக்காக. மோர் ஓவர் சொல்லிட்டே வேலை செஞ்சா, வேலைச் சிரமமும் தெரியறது இல்லை. புண்ணியத்துக்குப் புண்ணியமும் ஆச்சு''ன்னாள்.

''நீ மாமி ஆயிட்டே!''ன்னேன் கிண்டலா. But she accepts it.

எங்கம்மாகூட சமையல் செய்யும்போது இப்படித்தான் வைகை எக்ஸ்பிரஸ் ஓட்டுவாங்க. கத்தரிக்காய், வெண்டைக்காயோட கருமாரி அஷ்டகம், கனகதாரா ஸ்தோத்திரத்தையும் நறுக்கிப் போட்டு சாம்பார் வைப்பாங்க. ரொம்ப டேஸ்டா இருக்கும்!

ஸ்லோகம் சொல்லிட்டே சமையல் செஞ்சா, சமையலில் வாசனை கூடும்ங்கறது எங்கம்மாவோட நம்பிக்கை. இது உண்மையா? எங்கம்மா வயசு இருக்கற ரசிகர் மன்ற உறுப்பினர்கள் எழுதவும். 'அனுபவம், உள்ள ஆண்களும் எழுதலாம். நோ அப்ஜெக்‌ஷன்!

**ரா**ஜ் டீவில, பின்னணிப் பாடகர் கிருஷ்ணசந்தரோட ஒரு பேட்டி பார்த்தேன். (தஞ்சாவூரு மண்ணு எடுத்து)

**கேள்வி:** *நீங்க பின்னணிப் பாடகரா இருக்கீங்க. உங்க லட்சியம் என்ன சார்?*

**பதில்:** ''ஏதாவது அநாதை ஆசிரமம் மாதிரி சமூகப் பிரக்ஞையோட செய்யணுங்க.

**கேள்வி:** *உங்களுக்குப் பிடிச்ச ஸிங்கர் யார் சார்?*

**பதில்:** எஸ்.பி. பாலசுப்ரமணியங்க.

**கேள்வி:** *யாரை மாதிரி பெரிய பாடகரா வர விரும்பறீங்க?*

**பதில்:** சீர்காழி கோவிந்தராஜன் மாதிரிங்க.

**கேள்வி:** *நீங்க பாடினதுல உங்களுக்குப் பிடிச்ச பாட்டு எதுங்க?*

**பதில்:** தஞ்சாவூரு மண்ணு எடுத்து. ஆனா அது இவ்ளோ ஹிட்டாகும்னு எதிர்பார்க்கலைங்க.

**கேள்வி:** *எப்படிங்க இவ்வளவு ஹிட் ஆச்சு?*

**பதில்:** அ...ஆமா! பாடும்போதே எதிர்பார்த்தேன். சூப்பர் ஹிட் ஆயிடும்னு அப்பவே நெனச்சேங்க. சொற்கள் நல்லா இருக்குது இல்லீங்களா? அதான் ஹிட் ஆயிடுச்சி...

இந்த ரீதியில் அரை மணி நேரம்! ஜென்டில்மேன் படத்துல பிரபுதேவா காதுலேருந்து அனல் புகை வருமே? அப்பிடி வந்துடுச்சு எனக்கு.

அந்த அனல்ல இந்த வார ஜோக் கருகிப் போச்சு. ரொம்ப ஸாரி! அடுத்த வாரம் வரைக்கும் காக்க வைக்கறேன்...

— சுமி

சுமி சூப்பர் மார்க்கெட்

"பளார்"

அவள் அறைந்துவிட்டாள்.

அறை வாங்கிய வலியை விட, அவள் அறைந்து விட்டாள் என்பதே அதிர்ச்சியாயிருந்தது அவனுக்கு.

அச்சம், கோபம், வியப்பு என நவரசங்களையும் கண்ணில் காட்டி அவளை முறைத்தான்.

நடந்த சம்பவத்தை ஜீரணிக்க முடியாத பயத்தில் விருட்டென வெளியேறினான்.

அவளாலும்தான் நம்ப முடியவில்லை.

அறைந்து விட்டேனா? நிஜமாகவே, தன் கை நீண்டு அவர் கன்னத்தைப் பதம் பார்த்து விட்டதா?

சோபாவில் சரிந்து அமர்ந்தாள். எரியும் விரல்களை உற்றுப் பார்த்தாள்.

சற்று வீங்கிவிட்டது போலத் தோன்றியது விரல்கள். உள்ளங்கையை விரித்துப் பார்த்தாள்.

"ரோஜாப் பூ போல எப்படி மென்மையாயிருக்குடி உன் உள்ளங்கை?"

கல்லூரி நாட்களில் தோழிகள் தொட்டுத் தொட்டுப் பார்ப்பார்கள். அது பாராட்டா, இல்லை பொறாமையா என்று கூட நினைக்கத் தோன்றும்.

ரோஜாவால், அம்மி குத்த முடியுமா?

இன்று குத்தி விட்டாள்! தாலி கட்டிய கணவரை அறைந்து விட்டாள்.

கொஞ்சம் கடுமையான வேலை பார்த்தாலும் சிவந்து, கன்றிப் போய்விடும் விரல்கள், இன்று வீங்கிப் போகுமளவுக்கு வேலை கொடுத்து விட்டாள்.

உள்ளங்கையையே வெறித்தது அவள் பார்வை.

"கை நிறைய சம்பாதிக்கற மாப்பிள்ளை வந்து கொத்திக்கிட்டு போகப் போறான் பாருங்க இவளை."

ஒன்று விட்ட சித்தப்பா, இவள் கை ரேகையைப் பார்த்து விட்டுச் சொன்ன ஜோசியம் இது.

பலித்தும் விட்டது. அவருக்கு நல்ல சம்பளம்தான். கை நிறைய சம்பளம் மட்டுமா, மனசு நிறைய முன்கோபத்தோடும் அல்லவா அமைந்து விட்டார்.

எப்போது, எப்படி, எதற்காக அறைவார் என்பது அவருக்கே தெரியாது!

ஒருமுறை அப்பா வந்திருக்கும்போது இப்படித்தான் நடந்து விட்டது.

குடிக்கத் தண்ணீர் கொண்டு வந்து வைக்கும் போது,



# வெறி

பின்னல் முன்புறம் சரிந்து ஓட்டிக் கொண்டிருந்த காய்ந்த மல்லிகைப்பூ அதில் விழுந்து விட்டது. சனியன்!

"பளார்!"

அவர் அறைந்த அறையில், அப்பா எழுந்துவிட்டார், பயந்து போய்.

"என்னம்மா, உப்புப் பெறாத விஷயத்துக்குப் போய்... ஆனாலும் இப்படியா முரட்டுத்

**கிருஷ்ணா**

தனமாய் அடிக்கறது?"

அப்பாவின் புலம்பல் அடங்கவே இல்லை. புலம்பும் போதே நெஞ்சு கலங்கி, குரல் உடைந்து போய், கண்ணில் நீர் முட்ட நிற்பார்.

அதற்குப் பிறகு அப்பா இந்த வீட்டில் வந்து தங்கவேயில்லை. ஊரிலிருந்து காலையில் வருவார். அதுவும் மாப்பிள்ளை ஆபீஸ் கிளம்பும் நேரம் பார்த்து உள்ளே நுழைவார்.

"சௌக்யமா மாப்பிள்ளை?"

அந்த ஒரு கேள்வியோடு சரி. மதியம் சாப்பாடு முடிந்ததும் கிளம்பி விடுவார்.

"எனக்கு தாங்கக் கூடிய சக்தி இல்லேம்மா. மாப்பிள்ளை எந்த நேரத்துல உன்னை அறைவாரோன்னு பயந்துண்டே இருக்க என்னாலே முடியலேம்மா. உன்னைப் பார்க்கணும்னு ஆசைப் பட்டேன். பார்த்தாச்சு. வரேம்மா குழந்தை. நன்னாயிரு."

தங்கச் சொல்லி வற்புறுத்தினால் மறுத்து விடுவார்.

இதோ இன்று புதிய அத்தியாயம் எழுதியாகி விட்டது.

அப்பா இருந்து பார்த்திருந்தால் என்ன சொல்வார்?

'சபாஷ்' என்பாரா? மாட்



டார். கட்டாயம் சொல்ல மாட்டார்.

"ஆயிரம்தான் இருந்தாலும், ஆம்பளையைக் கை நீட்டி அடிக்கலாமா? கட்டிய புருஷன் கடவுளுக்குச் சமம்."

அப்பாவும் ஒரு ஆண்பிள்ளைதானே? ஆண்டாண்டு காலமாய் மனசிலும், புத்தியிலும் ஊறிப் போன கலாசாரத்திலிருந்து வெளியே குதிக்க முடியுமா?

கைவிரல்களின் சிவப்பு கொஞ்சம் மட்டுப்பட்டது போலத் தோன்றியது. வீக்கம் கூட மறைந்து விட்டது போலத் தோன்றியது.

'கை நிறைய சம்பளத்தோடு மாப்பிள்ளை வருவான். மணமான இரண்டாவது வருடமே டைவர்ஸாகி விடும்.'

ஒன்று விட்ட சித்தப்பா இப்படி ஏதும் சொன்னாரா?

தலையை சிலுப்பிக் கொண்டாள்.

டைவர்ஸ்! கடவுளே ஏன் இப்படி எல்லாம் புத்தி ஓடுகிறது?

விவாகரத்து பற்றி நினைத்ததுமே இதயத்தில் ஒரு நொடி இரத்தம் உறைந்து விட்டது போலாகி விட்டது அவளுக்கு.

குண்டூசியால் அங்கங்கே துளை செய்யப்பட்ட நீர் நிரம்பிய பிளாஸ்டிக் பையிலிருந்து தண்ணீர் கசிவது போல, இதயத்திலிருந்து அங்கங்கே துக்கக் கசிவுகள்.

கசியும் துக்கத்தில் இதயம் முழுவதுமாய் அமிழ்ந்து போய், நெஞ்சை அடைப்பது போல பிரமை.

திடீர் திடீரென வீசும் கோடைக்கால மாலை வேளை குளிர் காற்றாய் ஒரு எண்ணம்.

'சேச்சே, அப்படியெல்லாம் எதுவும் ஆகாது'.

யோசிக்கும், போது அதீதக் கற்பனையாகவும் தோன்றுகிறது. கற்பனையின் முடிவில் நிஜம் என்னும் அரக்கனின் சிரித்த முகம் பதைபதைக்க வைக்கிறது.

'மனைவி கை நீட்டி அடித்தால் எந்த ஆம்பளைதான் பொறுத்துப்பான். டைவர்ஸ் தான்! ஆண் என்ற ஈகோ சும்மாயிருக்குமா?'

மண்டைக்குள் சடசடவென் ஆலமரம் கிளை பரப்பி விருட்சமாய் வளர்ந்து, மண்டையை நாலா பக்கங்களிலிருந்தும் உடைத்துக் கொண்டு வெளியே வர முயற்சிப்பது போல தலைக்குள் குடைச்சல்! வலி!

'எப்படி இன்று இது போல திருப்பி அடித்து விட்டேன்.'

யோசித்தாள்.

தலைமுடியை யார் பற்றி இழுத்தாலும்



## நாட்டுக்கு நாடு வேறுபடும் வலி!

**எல்லோரும் வலியை ஒரே மாதிரி உணர்வதில்லை. உதாரணமாக, இந்தியா, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளிலுள்ள பெண்களைவிட அமெரிக்கப் பெண்கள் பிரஸவத்தின் போது வலியை அதிகம் உணர்கிறார்கள். காரணம், வலியை வெளிப்படுத்துவதற்கு அமெரிக்காவில் பெண்களுக்குத் தடையொன்றுமில்லை. உணர்ச்சிகளை வெளிக்காட்டக் கூடாதென்ற கலாசாரத்துக்குப் பழக்கப்பட்ட நாடுகளில் உள்ள பெண்கள் குறைவான அளவே வலியை உணர்கிறார்கள். வலியை உணர்ந்து வெளிக்காட்டுவதில் மனத்தின் பங்கு முக்கியமானது.**

– ''கனகதாரா''

ஆதாரம் : 'Stories Behind Everyday Things'.

அவளுக்குப் பிடிக்காது. சிறு வயது முதலே வந்த குணம் இது. விளையாட்டுக்குக் கூட யாரும் பின்னலைப் பிடித்திழுத்தால் கோபமாகி வெடித்து விடுவாள்.

இன்றும் அப்படித்தான் நடந்து விட்டது.

அவன் அடிக்க வரும்போது சடாரென முகம் திரும்ப, அவன் கையில் பின்னல் சிக்கிக் கொள்ள, அதை அவன் இழுக்கும் போது அவள் மோதிரம் பட்டு அவன் ஜாக்கெட் கிழி....

அவள் பெண்மையில் சுருக்கென முள் குத்தியிருக்க வேண்டும்.

அவ்வப்போது ததும்பி மேலே வர முயல, அவள் அமுத்திக் கீழே தள்ளி, கனமான மூடி போட்டு அடக்கி வைத்திருந்த பெண்மை எப்படியோ அவளை ஏமாற்றி மேலே வந்து விட்டது. வந்ததுமே மூளைக்குக் கட்டளையிட, மூளை, கைக்கு ஆணையிட, பளார்!

யோசித்துப் பார்த்தால் நடந்த எதுவுமே தவறில்லை என்று மனசு சொல்கிறது.

ஆனால், நன்றாய் ஓடும் என்ஜினிலிருந்து திடீரென வரும் கர், புர் சத்தம் போல, உள்ளுக்குள் பயம் தரும் ஓசை.

"நீ சந்தோஷமாயில்லேன்னா, அங்கே வந்துடும்மா."

மாப்பிள்ளையின் அறையில் அதிர்ந்து போன அப்பா, ஒருமுறை கூட இப்படிச் சொன்னதேயில்லை.

இது முழுக்க, முழுக்க ஆண் சமுதாயம். தனியாய் ஒரு பெண் வந்தால் கொத்திக் குதறி கூர் போட்டு விடும்.

நெற்றிப் பொட்டு விண், விண் என்றது, சக்தி அனைத்துமே பம்ப் செய்யப்பட்டு வெறியேறியது போல உணர்ந்தாள்.

மாத்திரையை விழுங்கி கண்மூடிப் படுத்தாள். முடியவில்லை. மனசு விழித்திருக்கும் போது, கண் எப்படி மூடும்?

துக்கம் சுருள் சுருளாய் உடல் முழுவதும் பரவ, வலியில் அழுகை பீறிட்டது.

பூஜை அறைக்குள் ஓடி முழங்காலிட்டு அமர்ந்தாள். வாய் வழியே விம்மல் வெடித்தது. விம்மல் அழுகையானது. சாரலாய் ஆரம்பித்த மழை, புயலாய் மாறி அடித்தது. மெல்ல மெல்ல மழைத் தண்ணீரின் காட்டாற்று வேகம் கட்டுப்பட்டு, நீர் வீழ்ச்சியாய் இறங்கத் தொடங்கியது.

மனசுக்குள் நீர் வீழ்ச்சியின் சலசலப்பும், கலகலப்பும்.

திரும்பவும் சோபாவில் வந்து அமர்ந்தாள்.

ஒருவரை நம்பி ஒருவர் பிறக்கவில்லை. பட்டப்படிப்பு படித்திருக்கிறேன். ஒண்டிக் கொள்ள பிறந்த வீடு உள்ளது. பிறகு ஏன் கலங்க வேண்டும்?

அருவி இப்போது ஓடையாய் மாறி, வேகம் குறைந்து, குளிர்ச்சியாய் ஓடத் தொடங்கியது.

வாசலில் செருப்புச் சத்தம். காலைத் தேய்த்து நடக்கும் ஓசை. அவர்தான்.

ஏறிட்டுப் பார்க்க முடியாமல் தரையை வெறித்தாள்.

அதோ அவன் பாதங்கள். சற்று மங்கிப் போன வேட்டி, மெல்ல மெல்ல அவன் தன்னை நெருங்கி வருவது தெரிந்தது.

அறையப் போகிறானோ ஆத்திரத்தில்?

மிக அருகில் வந்து நின்றவன் அவள் தோளைத் தொட்டான்.

"அறைஞ்சா இவ்வளவு வலிக்கும்னு நீ ஒரு தரம் கூட என்னிடம் சொல்லவே இல்லையே!" என்றான்.

சித்ரன்

1

# மனதில் உனது ஆதிக்கம்

அடையாள நெடி மூக்கில் ஏறியது. புழுக்கை வாசனை. பாலா தலையிலும், உடம்பிலும் படிந்த சிலந்தி வலைகளைத் தட்டிவிட்டான். கதவிலிருந்து வந்த வெளிச்சத்தில் அவன் நின்று கொண்டிருந்த அறை மட்டுமே வெளிச்சமாயிருந்தது.

அவன் முன்னறை ஜன்னல்களைத் திறந்து விட்டான். மாலை ஐந்தரை மணியின் வெளிர் மஞ்சள் வெயில் கருணையாய் ஜன்னல் வழி நுழைந்தது. அதன் உபயத்தில் உள்ளறைகளும் தெரிந்தன.

பாலா அந்த வீட்டை வாங்குகிற உத்தேசத்தில்தான் இப்போது வந்திருப்பது.

அது அவனொன்றும் பார்த்திராத, இதற்கு முன்பு நுழைந்திராத வீடு அல்ல. இரண்டு வருடங்களுக்கு முன்...

அது அப்புறம்.

அடுத்த அறைக்குள் நுழைவதற்கு முன், முன்னறையின் அகல, நீள, விலாசங்களை கண்ணால் அலசினான். பெரிய பரந்த அறைதான் அது. தரை முழுக்கக் குப்பை. ஒரு மூலையில் காகிதக் குவியல். ஓட்டு வீடு என்பதால் மிகத் தாழ்ந்த கூரை. அதற்குத் தாங்கலாக இரண்டு மரத்தூண்கள் பெயிண்ட் உதிர்ந்து நின்றன.

நிறைய அறைகளாய் விரியும் கொஞ்சம் நீளமான வீடு. இதற்கு முன் இதை விலைக்கு வாங்க எத்தனை பேர் பார்த்துவிட்டுப் போய்விட்டார்கள். வந்து பார்த்தவர்கள் மறுமுறை வரவில்லை.

இப்போது பாலா.

பாலா இந்த வீட்டை வாங்குவதற்கு ஏற்கெனவே தீர்மானித்து விட்டான். அப்பாவின், நடராஜ் மாமாவின் அபிப்பிராயக் குரல்களையெல்லாம் மீறி, பாலா உறுதியாய் எடுத்த தீர்மானம் அது. மிகக் குறைந்த விலையில் கிடைக்கிற, அவனுக்குப் பிடித்தமான வீடு.

"குறைஞ்ச வெலைக்கு அந்த வீட்டுக்காரன் விக்கிறதுக்குக் காரணம் என்ன தெரியுமா? அந்தக் குடும்பம் காலி பண்ணினதுக்கப்புறம் ரெண்டு வருஷமா அது பூட்டியே கிடக்குது. வாங்கறதுக்கு எல்லாரும் பயப்படறா. ஆவி அலையுற வீடுன்னு தெருவெல்லாம் பேசிக்கிறாங்க. இத்தனை எதுக்கு? எங்க வீட்லயே ஒரு நாள் ரொம்ப வெக்கையா இருக்கேன்னு மொட்டை மாடியில போய்ப் படுத்தேன். தூக்கத்துக்கு நடுவுல எதுவோ பலமா மேல ஏறி உக்காந்துக்கிட்டு கழுத்தைப் பிடிச்சு அமுக்கற மாதிரி ஒரு ஃபீலிங். கண்ணும் தொறக்க முடியலை. எந்திரிக்கவும் முடியலை. ஒரு ரெண்டு நிமிஷத்துல ஜீவன் போய்ட்டு வந்தா மாதிரி. ஒண்ணுமில்லாத இடத்துலயே அப்படி. ஒரு பொண்ணு தூக்குப் போட்டு செத்த வீட்டில? யோசி!"

நடராஜ் மாமா பயந்த குரலில் பாலாவை பயமுறுத்தப் பார்த்துத் தோற்றார். அப்பாவுக்கும் அந்த வீட்டை வாங்க, துளி கூட இஷ்டமில்லை.

"நாம அப்படியே போய் குடியிருந்திடப் போறதில்லையேப்பா. ஊருக்குள்ள பேசறதெல்லாம் வெறும் கட்டுக்கதை. நானும் அந்த வீட்டுக்குள்ள ரெண்டு வருஷத்துக்கு முன்ன எத்தனையோ தடவை உலாத்தியிருக்கேன். எனக்கு அது புது இடமே அல்ல.



"என் அம்மாவும், என் மனைவியும் சிரிச்சுப் பேசிக்கிட்டிருந்தாங்க!"

"அப்படியா? எங்கே?"

"என் அம்மா எதிர் வீட்டுக்காரிகிட்டேயும், என் மனைவி பக்கத்து வீட்டுக்காரிகிட்டேயும்!"

— தாரமங்கலம் அருண்ராஜ்

நல்லா பழகின இடம். என்னத்துக்கு வீண் பயம்? இடிச்சு புதுசா ஆல்டர் பண்ணிக் கட்டத்தானே போறோம்? பத்மாவதியக்கா கட்டின மாதிரி..."

நிறைய பேசி எல்லோரையும் சமாதானம் பண்ணியாயிற்று. பாலாவுக்கு எடுத்த முடிவிலிருந்து பின்வாங்க மனம் வரவில்லை. அவன் பிடிவாதம் தளர்ாமல் இருந்ததும் ஒரே ஒரு காரணத்துக்காகத்தான்.

அது பவானி வாழ்ந்த வீடு. அந்த வீட்டின் ஒவ்வொரு சதுர மில்லி மீட்டர் பரப்பிலும் அவன் ஞாபகங்கள் கலந்திருக்கின்றன.

பாலா மணி பார்த்தான். ஐந்தே முக்கால் ஆயிருந்தது. வெளியே வெளிச்சம் மங்கத் தொடங்கிவிட்டது.

இதோ இரண்டு வருடங்களுக்கு முன் ஒரு நாள் இதே மாதிரி வெளிச்சம் மங்கின மாலை நேரத்தில், இந்த வீட்டுப் படிகளில் ஏறுகிற ஞாபகம். வீட்டுக்குள் இப்பொழுதிருக்கிற மாதிரியே இருட்டு. பூஜையறையிலிருந்து மட்டும் கொஞ்சமாய் வெளிச்சம். விளக்கு தீபம். லேசாய் மணிச்சத்தும் கேட்கிறது. மிக மெதுவான ஆனால் இனிமையான குரலில் 'துதிப்போர்க்கு வல்வினை போம்; துன்பம் போம்...' கேட்கிறது. பூஜையறைக்குள்ளிருந்து வெளிவருகிற சரோஜாம்மாவின் அவுட்லைன் உருவம்.

இருட்டு மங்கலில் 'யாரு?' என்று கேட்டுவிட்டு "பாலாவா? வாப்பா!" என்கிறாள். 'டிக்' என்று ஸ்விட்ச் தட்டப்படுகிற சப்தத்தைத் தொடர்ந்து ட்யூப்லைட் உயிர் பெறுகிறது. அவன் மனத்திலும் படபடவென நிறைய விளக்குகள் உயிர் பெற்றன.

"இப்பத்தான் வெளக்கு வச்சேன். உக்காரு..."

சரோஜாம்மா அரை நிமிடத்தில் எல்லா லைட்டுகளையும் போட்டு விட்டு வந்தாள்.

பாலா மர நாற்காலியில் உட்கார்ந்தான்.

"வேலை முடிஞ்சு இப்பத்தான் வர்றியா?"

"அஞ்சு மணிக்கே வந்துட்டேன். உங்களைப் பாக்கணும்னு தோணிச்சு. அப்படியே வந்தேன். மாமா இல்லையா?"

"வெளில போயிருக்கார். வந்துடுவார்" என்று சொல்லிவிட்டு சரோஜாம்மாவும் தூணோரம் உட்கார்ந்தாள். எப்போதும் இருக்கிற வெகு மெலிதான புன்னகையொன்று சரோஜாம்மா உதட்டில் இப்போதும் இருந்தது.

இருவரும் மேற்கொண்டு பேசுவதற்கு விஷயங்கள் தேடிக் கொண்டிருக்க சின்னதாய் ஒரு இடைவெளி.

பாலா அங்கிருந்தபடியே வாசலுக்கு வெளியே பார்த்தான். வீதிக்கு எதிர்ப்புறம் அவன் வசிக்கிற வீடு தெரிந்தது. வாசற்கதவை வெறுமனே சாத்திவிட்டு வந்தது ஞாபகம் வந்தது. சீனி வருவதாகச் சொல்லியிருக்கிறான்.

சீனி வராத, அறையில் எந்த வேலையும் இல்லாத சாயங்காலப் பொழுதுகள் சரோஜாம்மா வீட்டில்தான் பெரும்பாலும் கழியும். சில சமயம் காப்பி, இரவுச் சாப்பாடு எல்லாம் கூட இங்கேயேதானிருக்கும்.

எப்படி இந்தக் குடும்பத்துடன் இப்படி ஒட்டிக் கொண்டோம் என்று பாலா பல தடவை ஆச்சரியப்பட்டதுண்டு. ஆனாலும் அவன் சுபாவத்திற்கு எந்த ஊருக்கு, எந்த இடத்துக்குப் போனாலும் அருகாமையிலேயே அவனுக்கென பாச வீடு உருவாகி விடுவதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. சின்ன வயதில் படித்துக் கொண்டிருக்கிற காலத்தில் கூட அவன் ஊரில் இப்படித்தான் பத்மாவதியக்கா வீடு இருந்தது. அந்தச் சமயங்களில் பாலா அவனுடைய வீட்டில் இருந்ததைவிட பத்மாவதியக்கா வீட்டில் இருந்ததே அதிகம்.

"இன்னைக்கு என்ன பண்ணப்போற?" என்றாள் சரோஜாம்மா. பேசுவதற்கு விஷயம் கிடைத்துவிட்ட மாதிரி. ஏதாவது ஒரு நூலிழையில் ஆரம்பிக்க வேண்டும். பின்னர் அது அப்படியே வளர்ந்து மிக சகஜமான ஒரு உரையாடல் நிலைக்கு வரும். சரோஜாம்மாவுடன் பேசிக் கொண்டிருப்பதுதான் உலகில் எத்தனை அற்புதமான விஷயம் என்று பாலா நினைத்தான். சாந்தம், நிதானத்தை உள்ளடக்கிய பேச்சு. ஒரு மயிலிறகுப் புன்னகை. இவைதான் சரோஜாம்மாவின்

அடையாளம். முகத்தை உற்றுப் பார்த்தால் லேசாய் சௌகார் ஜானகி சாயல் கூட இருக்கும்.

"எதைக் கேக்கறீங்கம்மா?"

"சமையல்."

"சீனி வர்றேன்னான். ரெண்டு பேரும் இன்னிக்கு வடிவு மெஸ்ல சாப்பிடப் போறோம்."

பாலா அவனறையில் தனியாக சமைத்துக் கொள்கிறவன்தான். ஸெல்ஃப் குக்கிங். லீவு நாட்களில் விளையாட்டாய் அம்மாவிடமிருந்து கற்றுக் கொண்டது. இங்கே அது உதவியாய் இருக்கிறது. மெஸ்ஸில் சாப்பிடுவது சில சமயம் ஒத்துக் கொள்வதும் இல்லை.

"எத்தனை நாள் தனியா சமைச்சு சாப்பிட்டுட்டு இருப்ப? பேசாம கல்யாணம் பண்ணிக்க" என்றாள் சரோஜாம்மா.

அப்பா சமயம் கிடைக்கிற போதெல்லாம் மேற்கண்ட விஷயத்தை நேரடியாகவோ, கோடி காட்டியோ கடிதம் எழுதுவது வழக்கமாகிவிட்டது. நடராஜ் மாமா பெண் ரெடியாய் இருக்கிறதாம். அவரும் கேட்காமல் கேட்பார் போலிருக்கிறது. அதுவும் சமீபமாய் நிறையவே. "அவனிஷ்டத்துக்கு எப்பவோ பண்ணிட்டுப் போகட்டுமே? ஏன் வற்புறுத்தறீங்க அவனை?" என்று எப்பவும் சொல்கிற அம்மாவும் போன தடவை ஊருக்குப் போயிருந்தபோது திடீரென அப்பாவுக்குச் சாதகமாய்த்தான் பேசினாள். ஆனால் பாலா யாருக்கும் இதுவரைக்கும் எந்த பதிலும் சொன்னதில்லை.

"பண்ணிக்கலாம்... என்ன அவசரம்?" என்றான் பாலா. சரோஜாம்மாவுக்குச் சொன்ன இந்த பதிலையேதான் அப்பாவுக்கும், அம்மாவுக்கும் எப்போதும் சொல்வது.

"ஏன் உனக்கு இருபத்தெட்டு வயசாச்சில்லையா?"

"வயசு கிடக்கட்டும். எதுக்கு சும்மா ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணி அவளைக் கொடுமைப்படுத்தணும்னு பார்த்தேன்." சிரித்துக் கொண்டே சொன்னான் அவன்.

அப்படிச் சொல்லியிருக்கக் கூடாது என்று பாலா உடனே வருத்தப்பட்டான். அதை அவன் சொன்ன கணத்தில் சரோஜாம்மாவின் பேச்சும், சிரிப்பும் ஒரு நிமிடம் நின்று போய் மறுபடி இயல்புக்கு வரப் பிரயத்தனப்பட்டது. அவனும் அதைக் கவனித்துவிட்டான். ரொம்ப சங்கடமாகி விட்டது.

சரோஜாம்மாவுக்கு பவானியின் நினைவு வந்திருக்க வேண்டும். அவர்களின் ஒரே செல்ல மகள். கல்யாணத்துக்கப்புறம், முகத்தில் அப்பின சோகத்தைத் தவிர வேறெதையும் கண்டிராத பவானியின் உருவம் சரோஜாம்மாவின் மனத்தில் நிழலாடியிருக்க வேண்டும்.

ஏதாவது பேசி எங்கேயாவது முடிந்து விடுகிறது.

"ஏம்மா... ஒண்ணு கேக்கட்டுமா?" மிகத் தயக்கத்துடனேயே கேட்டான் அவன். சரோஜாம்மா இப்போது நினைத்துப் பார்க்க விரும்பாத சோகங்களையெல்லாம், தான் கேட்கப் போவது கிளறி விடுமோ என்று பயமாகக்கூட இருந்தது.

அவன் என்ன கேட்கப் போகிறான் என்பது புரிந்து போய் அதற்குப் பதில் சொல்லவும் தயார்தான் என்பது போல இருந்தது சரோஜாம்மாவின் முகம்.



"தியேட்டர் வாசல்லே யாரையோ போட்டு அடிக்கறாங்களே! பிக்பாக்கெட்டா..!"

"ஊஹூம்... படத்தோட டைரக்டர்தான்! மக்களோட வந்து படம் பார்க்க உட்கார்ந்து வகையா மாட்டிக்கிட்டாரு!"

— வலங்கைமான் நூர்தீன்

"பவானி எப்படியிருக்கா?"

சரோஜாம்மாவின் உதட்டில் அந்தப் பழைய புன்னகை மீண்டும் வந்து உட்கார்ந்து கொண்டது. ஏதோ ஒரு துயரத்தை மறைக்க விரும்புகிற கவசம் மாதிரி.

"அப்படியேதான்..." என்றாள் சரோஜாம்மா.

"அப்படியேன்னா?"

"புதுசா என்ன சொல்றதுக்கிருக்கு பாலா. அவ இன்னும் ரொம்ப கஷ்டப்படறான்னு மட்டும் தெரியுதுப்பா. புருஷன் கூட அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டு இருக்கா. எப்பவும் வாய் ஓயாம திட்டிக்கிட்டே இருக்கானாம்.




தினமும் அடி. அப்புறம் அடி. அவ போன ஜென்மத்துல என்ன பாவம் பண்ணினாளோ தெரியலை. இப்படி வாழ்ந்து கொடுமைப்படணும்னு அவளுக்கு எழுதி வெச்சிருக்கு."

கொஞ்சம் இடைவெளி விட்டு மறுபடியும் சொல்ல ஆரம்பித்தாள்.

"இங்க வரும்போதெல்லாம் கேட்டா எதுவுமே சொல்ல மாட்டா அவ. நிறைய கசிச்சு பழகிப்போன மாதிரி இருப்பா. ஒரே பொண்ணு பாலா எங்களுக்கு. அவளை ஆசையா கட்டிக்குடுத்த இடமும் மோசமாப் போயிருச்சு. நீ சொன்னியே... எதுக்குக் கல்யாணம் பண்ணி ஒரு பொண்ணை கொடுமைப்படுத்தணும்னு. அந்த வார்த்தை சொன்னதும் சட்டுனு அவ ஞாபகம் வந்துருச்சு."

"உங்க முகத்தைப் பார்த்ததுமே புரிஞ்சிடுச்சு. ஆனா நீங்க இந்த அளவு எல்லா சொந்த விஷயமும் மனசுவிட்டுப் பேசறீங்களே.... அதுவே சந்தோஷமாயிருக்கு" என்றான் பாலா.

சரோஜாம்மா அவன் பார்க்காத மாதிரி கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

யாரிடமாவது தன் மனக்கஷ்டங்களை சொல்லி இறக்கி வைக்க விருப்பமாயிருந்தது சரோஜாம்மாவுக்கு. ஆறுதலாய் பாலா இருந்தான். கேட்பதற்குக் காதுகளும், பொறுமையும், எல்லாவற்றையும் விட மிக மேலான அக்கறையும் அவனிடம் இருந்தன.

கொஞ்ச நேரத்தில் வேணு மாமா வந்தார். சரோஜாம்மாவின் கணவர். பாலாவைப் பார்த்த மாத்திரத்தில் சிரிப்பு இழையோடியது முகத்தில். "உங்கூட ஒழுங்கா உக்காந்து பேசி ரொம்ப நாளாச்சு" என்றார். இன்னொரு மர நாற்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டார். உட்காருவதற்கு முன் சட்டையைக் கழற்றி தூணில் அடித்திருந்த ஆணியில் மாட்டினார்.

எப்பவுமே அவனை மிகப் பிரியமாய் நடத்துகிற வேணு மாமா. அப்பா லெட்டர் போட்டாரா என்று விசாரித்தார். ஊரில் எல்லோரும் சௌக்கியமா என்று கேட்டார். வேறென்னென்னவோ பேசிக் கொண்டிருந்தார். கேட்டுக் கொண்டேயிருக்கலாம் போல இருக்கிற பேச்சுதான். அவர் ரிடையர்டு ஆனதற்குப் பின் அவருக்குச் சொற்பமாய் இருக்கிற பேச்சுத் துணைகளில் அவனும் ஒருவனாகிவிட்டான். அதுவும் இவனுடன் பேசுவதில் ஒரு தனி ப்ரியம் இருக்கும் அவரிடத்தில்.

நடுவில் காப்பி வந்தது.

கொஞ்ச நேரம் கழித்து சீனி வந்தான். "சௌக்கியங்களா?" என்றான் வேணுமாமாவையும், சரோஜாம்மாவையும் பார்த்து. ஸ்நேகமாய்ச் சிரித்தான். 'போலாமா' என்று பாலாவைப் பார்த்தான்,

சொல்லிவிட்டு இருவரும் கிளம்பினார்கள். மெஸ்ஸுக்குப் போகிற வழியில், "அந்தக் குடும்பத்திலேயே ஒருத்தனாயிட்ட போலிருக்கு. நீ அங்கதான் இருப்பேன்னு தெரியும். அதான் உன் ரூமுக்குக் கூட போகல. நேரா அவங்க வீட்டுக்கே வந்துட்டேன்" என்றான் சீனி.

பாலா ஆமோதிப்பாய்ச் சிரித்தான்.

அதற்கு மறுநாள்தான் காலை அலுவலகம் கிளம்புவதற்கு வீட்டைப் பூட்டிக் கொண்டிருக்கும் போது சரோஜாம்மா வீட்டு வாசலில் சரேலென்று ஒரு ஆட்டோ வந்து நிற்பதைப் பார்த்தான். அதிலிருந்து பவானி இறங்குவதையும் பார்த்தான். கையில் கொஞ்சம் பெரிய லெதர் பேக் இருந்தது. அவள் இறங்கி உள்ளே போன ஒரு நிமிடத்தில், சரோஜாம்மா வெளியே வந்து ஆட்டோவுக்குப் பணம் கொடுத்து அனுப்பினாள். நிமிர்ந்து ரோட்டைத் தாண்டி பார்வை இவனிடத்தில் பதிந்தது. பாலா லேசாய் சிரிக்க முயல்வதற்குள் சரோஜாம்மா வேகமாய் உள்ளே சென்றாள்.

பாலா யோசனையாய் ஒரு சில கணங்கள் அப்படியே நின்றான். திடீரென்று அந்தச் சப்தம் கேட்டது. பெருத்த குரலில் யாரோ அழுகிற சப்தம். கிட்டத்தட்ட கதறல் மாதிரி.

யார் அது?

பாலா உற்றுக் கேட்டான்.

அழுவது பவானிதான் என்று புரிந்தது.

(தொடரும்)

# ரிலாக்ஸ்

"உங்களுக்கு வந்திருக்கிறது 'அம்னீஷியா' நோய்!"

"ரொம்ப நன்றி டாக்டர். அரசியலுக்கு வர உனக்கு என்ன தகுதி இருக்குதுன்னு எதிர்க்கட்சிக்காரன் கேட்டதும் ஆடிப் போயிட்டேன். இப்ப சமாளிச்சுடுவேன்!"



– மணி மதியண்ணன்

"அவரைப் போலி டாக்டர்னு எப்படி கண்டு பிடிச்சீங்க?"

"என்னோட வியாதிய எல்லாம் சொல்லி முடிச்சதும் என் கைய புடிச்சுக்கிட்டு எனக்கும் இதே வியாதி இருக்கு. நல்ல டாக்டரா இருந்தாச் சொல்லுங்கன்றார்!"



– அம்பை தேவா



"அந்தப் பெண்ணைக் காதலிக்க போட்டா போட்டி."

"அதற்காக லவ்லெட்டர் கூட போட்டி அஞ்சல் அட்டையில்தான் எழுதணும்னு அந்தப் பெண் சொல்வது நல்லா இல்லை!"



– எஸ். மோஹன்

"நம்ம வீட்டு வேலைக்காரிக்கு 'இன்டர்நெட் இன்பவல்லி'ன்னு பேராமே?"

"ஆமா! ஊர் வம்பு, உலக வம்பு எல்லாம் அப்போதைக்கப்ப சொல்வாளாம்!"

– சென்னிமலை செந்தில்குமார்

**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*



உங்க தினசரி அலுவல்கள்ல ஒரு பிரச்னையும் வராது. வீட்டோ, ஆபீஸோ நீங்க வெக்கறதுதான் சட்டமா இருக்கும். காரணம் உங்க சாதுர்யம். எதையும்துப் புரவா செய்ய ணுங்கற எண்ணம் உள்ள உங்களுக்கு, இந்த வாரம் லேசா உடல் நலக் கோளாறும் மருத் துவச் செலவும் வரலாம். சிலருக்கு வெளியூர் பிரயாணங்களும் தண்ணீரால இன்ஃபெக்ஷன் மாதிரி ஏதாவதும் வரலாம். பணப் பிரச்னை இருக்காது. நண்பர்கள் உதவுவாங்க. தாயார் உடல் நலத்துல அக்கறை செலுத்துங்க. முடிஞ்சா தினமும் பிள்ளையார் கோவிலுக்குப் போயிட்டு வாங்க.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*



ரொம்ப கொந்தளிப்பான மன நிலைல இருக் கீங்களா? லட்சியக் கனவுகளும் யதார்த்த முட்டுக்கட்டைகளும் உங்களை அலைக் கழிக்குதா? டோன்ட் ஒர்ரி! தீவிரமா உங்க இலக்கை நோக்கிப் புறப்படுங்க. தடையெல்லாம் தானா வில கிடும். எதையும் நினைச்சி கவலைப்படாதீங்க. உங்க மன உறுதிதான் உங்களை உயரே கொண்டு போகப் போவுது. வீட்டுச் சூழ்நிலை உங்களுக்கு சாதகமா இல்லாம இருக்கலாம். மனஸ்தாபங் கள் வரலாம். கண்டுக்காதீங்க. நாளைக்கு நீங்க பெரிய சாதனையாளரா ஆயிட்டா எல்லா பிரச்னையும் ஓடிடாதா? ஒரு விஷயம். இந்த வாரம் சிக்கனத்தை மட்டும் தீவிரமா கடைப் பிடிங்க.



**விருச்சிக ராசிக் காரரான லேனா தமிழ் வாணன் சும்மா அலைஞ்சு அலைஞ்சு உழைச்சுக் கிட்டே இருந்தாப் போதாதாம். உடல் நலத்திலும் அக்கறை காட்டணுமாம்!**

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*



வீட்டுல ஏதோ விசேஷம் நடக்கப் போவுது. அதுக்கு ஏத்தாப்பல பணமும் தாராளமா புரளும். கவனமா செலவு பண்ணுங்க. இந்த வாரம் பெண்களுக்கு நினைச்சதெல்லாம் நடக்கும். ஒரு உல்லாசப் பயணத்துக்குக் கூட வாய்ப்பு இருக்குது. நிர்வாகத் துறைல இருக்கற வங்களுக்கு, தொழிலாளர்களால சிறு சிறு பிரச் னைகள் வரலாம். கோபத்துல வார்த்தையை விட்டுடாதீங்க. வெளிநாட்டுத் தொடர்பு உள்ள உங்களுக்கு, அங்கிருந்து ஒரு நல்ல செய்தி வரும். வாலிப வயசுக்காரங்களுக்குக் கல் யாணம் கைகூடும் சமயம் இது.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*



கலைத்துறையினருக்கு வளமான நேரம். புதிய ஒப்பந்தங்களை எதிர்பார்க்க லாம். வெளிநாடு போற சான்ஸ் சிலருக்கு வரும். வீட்டுக்கு எதிர்பாராத விருந்தாளிகள் வருவாங்க. மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. உங்க நீண்ட நாள் கனவு ஒண்ணு நனவாகப் போகுது. பயணத்துல எச்சரிக்கை அவசியம். டிரைவிங் லைசன்ஸ் ஜாக்கிரதையா வெச்சுக் கங்க. டிராஃபிக் போலீஸ் தொந்தரவு இருக்கும். சிலருக்கு பிக்பாக்கெட் அபாயமும்! லாட்டரி பக்கம் போகாதீங்க. கவுத்துக்கும்.

# நடக்குமென்பார், நடக்கும்!

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*



புதிய திட்டங்கள் எதுவும் எளிதில் நிறைவேறும்னாலும் ஒரு தடவைக்கு ரெண்டு தடவை யோசிச்சி செயல்படுங்க. காரணம், அவசரப்பட்டு நீங்க இப்ப செய்யற ஒரு காரியம், பின்னால தீராத தலைவலியை உண்டு பண்ணும். விளையாட்டு வீரர்களுக்கு வெற்றி சேரும் வாரம் இது. வெளிநாடு அல்லது விருது வாய்ப்பு கட்டாயம் உண்டு. அரசியல் வாதிகள், எதிர்பாராத திடீர் கூட்டணிக்குத் தயாரா இருங்க. பெண்களுக்கு இது சாதாரண வாரம்தான். தலைவலிப் பிரச்னை இருக்கும். அர சியல்வாதின்னா, தலைவலிப் பிரச்னை.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



புத்துணர்ச்சி கூடறாப்பல ஒரு

## ஜூலை 15 முதல் 21 வரை

## அக்னி சர்மா பக்கம்

சம்பவம் நடக்கப் போவுது. அது, உங்க நீண்ட நாள் எதிர்பார்ப்போ, கோரிக்கையோ நிறைவேறுவதா இருக்கலாம். சிலருக்குப் புனித யாத்திரை செல்ல வாய்ப்பு வரும். வீட்டுல கணவன் - மனைவிக்குள்ள லேசா ஊடல் வந்து சரியாப் போகும். ஆபீஸ்ல மேலதிகாரிகளை முறைச்சிக்காதீங்க. நண்பர்கள் விஷயத்திலும் ஜாக்கிரதையா இருக்கலைன்னா, சமயத்துல காலை வாரி விட்டுருவாங்க. பெண்களுக்கு நகை யோகம் இருக்கிறதா கிரகங்கள் சொல்லுது.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

பிரச்னை இல்லாத சீரான வாரம் தான். ஆனாலும் நீங்க எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம். மறைமுக எதிரிகள் உங்களை கவுக்கப் பார்ப்பாங்க. அதே சமயம் புதிய நண்பர்கள் பலர் வந்து உதவுவாங்க. பணப் பிரச்னை இருக்காது. சிலருக்குக் குழந்தைப் பேறு வாய்க்கும். இன்னும் சிலருக்கு கல்யாணம் கைகூடும். ரேஸ், லாட்டரி வேண்டாம். ஷேர்ல பணம் போடலாம். வீடு, மனை வாங்கவும் இது ஏற்ற வாரம்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4 - ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உடல் நலத்துல கவனம் காட்டுங்க சார்! சும்மா அலைஞ்சி கலைஞ்சி உழைச்சிட்டே இருந்தா எப்படி? கோர்ட் கேஸ் விவகாரம் எதனா இருந்தா முடிஞ்ச வரை இப்ப தள்ளிப் போடப் பாருங்க. சில காரியத்தடைகள் வந்து மனசை கலவரப்படுத்தும். புதிய மனிதர்களிடம் எச்சரிக்கையா நடந்துக்கங்க. அலுவலகத்துல உயரதிகாரிகளால எதாவது பிரச்னை வரலாம். வியாபாரிகளும் விழிப் போட இல்லன்னா நஷ்டமடைய வேண்டி வரும். முடிஞ்சா ஒருநடை திருப்பதிக்குப் போயிட்டு வாங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

பெரும்பாலான கிரகங்கள் சாதகமா இல்லை. எதிலும் அகலக் கால் வெக்காதீங்க. உடல் நலத்துல அக்கறை செலுத்துங்க. வீட்டுல மனைவியோட மனஸ் தாபம் வரலாம். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க. கலைத்துறையினருக்கு ஒரு தேக்கமான கால கட்டம் இது. மனம் தளராம உழைச்சீங்கன்னா தப்பிச்சிக்கலாம். கடன் வாங்காதீங்க. இன்வெஸ்மெண்ட்ஸ் வேணாம். லாட்டரி வேணவே வேணாம். மாணவர்கள், கவனம் திசை திரும்பறா மாதிரியான காரியங்கள்ல ஈடுபடாம இருக்கிறது நல்லது.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்களுக்கு இது கொஞ்சம் சங்கடமான கால கட்டம்தான். தேவையில்லாத விஷயங்கள்ல தலையிட்டு, பிரச்னைல மாட்டிக்காதீங்க. புதிய நண்பர்கள் விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. வழக்குகள் சாதகமா இருக்காது. வீட்டுலயும் பிரச்னைகள் வரும். விட்டுக் குடுத்து நடந்துக்கங்க. வெளியூர் மாறுதல்கள் சிலருக்கு இருக்கும். அதனால அலைச்சல், பணக்கஷ்டம் வரும். கண்டிப்பா தினமும் பிள்ளையாரை வழிபட்டு வாங்க.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்களுக்கு என்னங்க! நிம்மதியான லைஃப். ஆதரவான குடும்பம், அன்பான கணவன் /மனைவி. இந்த வாரம் உங்க மூத்த மகன்/மகளால ஏதோ மகிழ்ச்சிகரமான சேதி வந்து சேரப் போகுது. வீடே அதனால குதூகலமாயிடும். வெளி நாட்டுலேருந்து எதாவது விசேஷத் தகவல் வரலாம். பதவி உயர்வு சிலருக்கு வரும். பணப் பிரச்னை இருக்காது. எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் சிலருக்குக் கதவைத் தட்டும். உடல் நலம் சீரா இருக்கும். பெண்களுக்குப் புதுப் புடைவை யோகம் உண்டு.



**மீனம் :** *(பூரட்டாதி 4 -ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

துணிச்சலா ஈடுபடற காரியம் வெற்றியையே குடுக்கும். இந்த வாரம் நீங்க நினைத்துப் பார்க்காத ஒரு நபர் மூலம் ஒரு பெரிய உதவி கிடைக்கும். வீடு வாங்கற யோகம் சிலருக்கு இருக்கும். வெளியூர் பிரயாணங்களைத் தவிர்க்க முடியாது. வாலிபர்களுக்குக் காதல் கை கூடும் வாரம்! வயசானவங்களுக்கு? கோவில் வாரம்! தேர், திருவிழாக்களுக்குப் போயிட்டு வர வாய்ப்பு இருக்கு. யோசிச்சி செயல்பட்டீங்கன்னா, ஷேர் மாதிரி விஷயங்கள்லேயும் ஆதாயம் பார்க்கலாம்!

# கோல்மால்



மாரடைப்புக்கு ஆளான அப்பா, மீண்டும் மாரடைப்பால் தாக்கப்படக் கூடாதே என்று காதலனுக்கு குட்பை சொல்லி விடுகிறாள் காதலி. என்றாலும் கோல்மால் செய்து அவளைக் கைப்பற்றுகிறான் காதலன். இந்தக் கதைக்கு நிறைய நகைச்சுவை ஸாஸ் தூவியிருக்கிறார்கள். வெடிச் சிரிப்புக் காட்சிகள் கம்மி; என்றாலும் புன்னகை செய்ய முடிகிறது. குறிப்பாக, வள்ளுவரிலிருந்து மகாபாரதம் வரை செல்வா, டச் செய்து, நட்பின் பெருமையை உணர்த்தி, நண்பர்களின் மனதை டச் செய்து அவர்களைத் தொடர்ந்து கோல்மால் செய்ய வைக்கும் காட்சி.

'குடும்பத்தோடு வந்து சிரியுங்கள்' என்கின்றன போஸ்டர்கள். முடியாது சாமி. கர்னலுக்குப் பி.ஏ.வாக வரும் கூவாக நபரிலிருந்து, அடிக்கடி எட்டிப் பார்க்கும் இரட்டை அர்த்த வசனங்கள் வரை நெளிய வைக்கின்றன. போதாக்குறைக்கு கமிஷனரைக் கண்ட பயத்தில் பாண்ட்டை ஒருவன் ஈரமாக்கிக் கொள்ள, 'நீங்களும் போயிட்டு வாங்க' என்ற ஸ்லைடுடன் இன்டர்வெல். மற்றபடி வில்லன்களாக அறிமுகமாகி, காமெடியன்களாக மாறும் மூவருமே கலக்குகிறார்கள். அதே போல் க்ளைமாக்ஸ் படு அமர்க்களம். டீவியில் கிரிக்கெட் மாட்சை ரசிக்கும் பணயக் கைதி, எம்.ஜி.ஆர்., ராஜேந்தர், ரஜினி, பாக்யராஜ் கெட்டப்பில் வரும் நால்வர் அவர்கள் போலவே போடும் சண்டை, கிரிமினலும் இன்ஸ்பெக்டருமாக (இரு வேடங்களில் கே. எஸ். ரவிகுமார்) சகோதரர்கள் கண்கலக்கம் என்று நிறைய காமெடி 'பஞ்ச்'கள் எடுபடுகின்றன.

சரக்கு இருக்கும் (நடிப்பில் அல்ல, ஐடியாக்களில்) செல்வா, கணிசமான இடங்களில் கத்திரி போட்டிருந்தால், முழு நீள டீஸண்ட் நகைச்சுவைப் படத்திற்காக தாராளமாகப் பாராட்டியிருக்கலாம்.

— ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)




புதிய கோல்கேட் டபுள் புரொட்டெக்ஷன்

சாதாரண டூத்பேஸ்ட்டைக் காட்டிலும்

கிருமிகளைப் போக்கிட உதவுவதற்கு

2½ மடங்கு அதிக சக்தி வாய்ந்தது




2½ மடங்கு அதிகம் நீங்கள் பெற முடியும் என்னும்போது அதனினும் குறைவானதை எதற்கு வாங்க வேண்டும்?

Based on scientific tests carried out in the mouth.

Rediffusion-DY & R/Bom/CP/235c TM

